# பரணர் - ஔவையார் பாடல்களில் உள்ளப் போராட்டம்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D.) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**ஆறு.முத்துக்கருப்பன்**

பதிவு எண் : 1287

நெறியாளர்

பேராசிரியர் முனைவர். **மு.பாண்டி**









**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசியத் தர மதிப்பீட்டுக் குழுவின் 'ஏ' தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003

தமிழ்நாடு

இந்தியா


**ஜனவரி - 2010**

**முனைவர் மு.பாண்டி,**
பேராசிரியர் & துறைத்தலைவர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

நாள் : 25.1.2010

# நெறியாளர் சான்றிதழ்

"**பரணர் – ஔவையார் பாடல்களில் உள்ளப்போராட்டம்**" என்னும் தலைப்பில் **ஆறு.முத்துக்கருப்பன்** அவர்கள் தமிழ் முனைவர் (Ph.D.) பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும் இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

25/1/10

**துறைத்தலைவர்**
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்.
காரைக்குடி-630 003

25/1/10
**(மு.பாண்டி)**
நெறியாளர்

**Dr. M. PANDI,** M.A.,M.A.,M.Phil.,Ph.D.,
Professor & Head,
Department of Tamil,
Alagappa University,
Karaikudi-630 003.

**ஆறு.முத்துக்கருப்பன்,**
*முனைவர் பட்ட ஆய்வாளர்,*
*பதிவு எண்.1287,*
*தமிழ்த்துறை,*
*அழகப்பா பல்கலைக்கழகம்,*
*காரைக்குடி - 630 003.*

*நாள் :* 25.01.2010

# ஆய்வாளர் உறுதிமொழி

**"பரணர் – ஔவையார் பாடல்களில் உள்ளப்போராட்டம்"** *என்னும் தலைப்பில் தமிழ் முனைவர் (Ph.D.) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.*

**(ஆறு.முத்துக்கருப்பன்)**
ஆய்வாளர்

**உறுதிக் கையொப்பம்**

**முனைவர் மு.பாண்டி,**
*பேராசிரியர் & துறைத்தலைவர்,*
*தமிழ்த்துறை,*
*அழகப்பா பல்கலைக்கழகம்,*
*காரைக்குடி - 630 003.*

# நன்றியுரை

ஆய்வுக் கல்வி வரை இந்நிறுவனத்திலேயே தொடர வாய்ப்பு ஏற்படுத்திக்கொடுத்த வள்ளல் அழகப்பரை இத்தருணத்தில் நினைந்து போற்றுகிறேன்.

என்னை ஆய்வு மாணவராக ஏற்றுக்கொண்டது முதல் ஆய்விற்கும் வாழ்க்கைக்கும் தூண்டுகோலாக இருந்து நெறிப்படுத்திவரும் மதிப்பிற்குரிய எனது நெறியாளரும், தமிழ்த்துறைத் தலைவரும், கலைப்புல முதன்மையருமான **பேராசிரியர் முனைவர் மு.பாண்டி** அவர்களுக்கு எனது நன்றியை என்றும் உரித்தாக்கிக் கொள்கிறேன்.

தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் **சே.செந்தமிழ்ப்பாவை, சு.இராசாராம், மு.நடேசன், மு.சுதா, இரா.தாமோதரன்** மற்றும் **இரா.குமார், க.அமுதா** ஆகியோருக்கு என் நன்றி உரியது.

நான் முனைவர்பட்டம் பெற தோற்றுவாயாக இருக்கும் மதிப்பிற்குரிய எனது பெற்றோர் **அழ.ஆறுமுகம் ஆ.காளியம்மாள்** அவர்களுக்கு இவ்வாய்வேட்டு மலரை அர்ப்பணிக்கிறேன்.

தான் பெறாத கல்வியை நான் பெற்று அவையத்து முந்தியிருக்கச் செய்து எனது உயர்வை நித்தமும் நினைந்து வாழ்ந்துகொண்டிருக்கக்கூடிய எனது சகோதரர் **ஆ.விஸ்வநாதன்** அவர்களுக்கு நான் என்றென்றும் நன்றியும் நினைவும் கொள்ளக் கடமைப்பட்டுள்ளேன்.

உடன்பிறந்தோர் **ஆ.சரவணன், ஆ.சந்திரா, ஆ.ரேகா** MCA ஆகியோருக்கும் **பவ்யஸ்ரீ, சந்தியா, யுவஸ்ரீ, யுவப்ரியா, காவியதர்ஷிணி, ஆகாஷ்குமார், சந்தோஷ்குமார், ஆ.பிரியங்கா** ஆகியோருக்கும் நன்றி.

எனது ஆய்வுக்குத் துணைபுரிந்த பல்கலை மைய நூலகம், மைசூர் மத்திய மொழிகளின் ஆய்வுநிறுவன மைய நூலகம் (CIIL), தென்மண்டல மொழிகளின் மைய நூலகம் (SRLC), இந்திய தேசியத் தேர்வுப்பணியின் நுண்தேர்வுமைய நூலகத்திற்கும் (NTS-INDIA) எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வுக்காலத்தில் என்னை ஊக்கப்படுத்திய ஆய்வாளர்கள், நண்பர்கள், உறவினர்கள் அனைவருக்கும் நன்றிகள் பல.

ஆய்வேட்டை செம்மையாகவும் விரைவாகவும் தட்டச்சு செய்துகொடுத்த மகேஷ் கணினி நிறுவனத்தின் உரிமையாளர், நண்பர் **சுரேஷ்** அவர்களுக்கும் கட்டமைப்பு செய்துதந்த அச்சகத்தாருக்கும் நன்றிகள்.

ஆறு. முத்துக்கருப்பன்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| அடி.நல். | - | அடியார்க்கு நல்லார் |
| இளம். | - | இளம்பூரணர் |
| உ.ஆ. | - | உரை ஆசிரியர் |
| க்லி. | - | கலித்தொகை |
| கற்பு. | - | கற்பியல் |
| களவு. | - | களவியல் |
| குறுந். | - | குறுந்தொகை |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நச். | - | நச்சினார்க்கினியர் |
| நற். | - | நற்றிணை |
| நூ. | - | நூற்பா |
| ப. | - | பக்கம் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பக். | - | பக்கங்கள் |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பா. | - | பாடல் |
| புறம் | - | புறநானூறு |
| பேரா. | - | பேராசிரியர் |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மேலது. | - | மேல் குறிப்பிட்டது |
| P. | - | Page |
| Vol. | - | Volume |

# பொருளடக்கம்

# முன்னுரை

ஓர் இலக்கியத்திற்கு கரு, பாத்திரங்கள், உணர்ச்சி, வடிவம் நான்கும் இன்றியமையாதன. இலக்கியங்கள் அவ்வக்கால மக்களின் உணர்வுகளை வெளிக்காட்டும் தன்மை பெற்றவை. சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டில் பற்பல உள்ளங்களின் உணர்வுகள் இருக்கின்றன. மனித உணர்வுகளை உளவியலடிப்படையில் பொதுநிலையில் இன்பியல், துன்பியல் எனும் இரு நிலைகளில் பகுத்துக் கூறுவர். துன்பியல் மனித மனங்களில் மன அழுத்தம், உளைச்சல், சோகம், வெறுப்பு போன்ற எதிர்மறை விளைவுகளை வெளிப்படுத்தும்போது உள்ளப் போராட்டங்கள் நிகழ்தல் இயல்பானதாகும். இவ்வுள்ளப் போராட்டங்கள் சங்க இலக்கிய மாந்தர்களிடமும் இருப்பதை அவ்விலக்கியங்களில் காண முடிகிறது.

## ஆய்வுத் தலைப்பு

சங்க மாந்தர்களின் உளவியல் போராட்டங்களைக் கண்டறியும் முகமாகப் "**பரணர் - ஔவையார் பாடல்களில் உள்ளப்போராட்டம்**" என்பது இவ்வாய்வுத் தலைப்பாகும்.

## ஆய்வு நோக்கம்

மனிதர்கள் தனது இன்ப, துன்ப உணர்வுகளைக் கூற்றுக்கள் மற்றும் செய்கைகளின் மூலமாக வெளிப்படுத்துவர். சங்ககால மக்களின் உள்ளப்போராட்ட உணர்வுகள் பரணர், ஔவையார் பாடல்களில் எவ்வாறு இடம்பெற்றிருக்கின்றன, அவர்களின் துன்பியல் உணர்வுகளுக்குக் காரணங்கள் யாவை? என்பதைக் கண்டறிவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

## ஆய்வு எல்லை

சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்களான நற்றிணை, குறுந்தொகை, பதிற்றுப்பத்து, அகநானூறு, புறநானூறு ஆகியவற்றில் இடம்பெற்றுள்ள பரணர், ஔவையார் பாடல்கள் இவ்வாய்வுக்குரிய எல்லையாக அமைந்துள்ளன.

## கருதுகோள்

மனித உணர்வுகளின் வெளிப்பாடே இலக்கியங்களாகும். இவ்விலக்கியங்கள் காலந்தோறும் பொருண்மை அடிப்படையில் வளர்ச்சியடைந்துள்ளன. அவ்விலக்கியங்களுள் சங்க இலக்கியம் சிறப்பிடம் பெறுகிறது. இவ்விலக்கியத்துள் உள்ள அக, புறப்பாடல்களைப் பல்வேறு காலங்களில் வாழ்ந்த புலவோர்கள் பாடியுள்ளனர். இப்புலவோருள் பரணரும், ஔவையாரும் குறிப்பிடத்தக்கவர். அவர்களின் பாடல்களில் சங்ககால மக்களின் உள்ளத்து இன்ப, துன்ப உணர்வுகள் கூற்று அடிப்படையில் வெளிப்படுத்தப்பட்டுள்ளன. இன்பியல் உணர்வுகளைவிடத் துன்பியல் உணர்வுகளே அதிகம் மேலிடுகின்றன. இவ்வுணர்வுகள் மாந்தர்கள் அடிப்படையிலும் சூழல்கள் அடிப்படையிலும் வேறுபட்டு அமைந்திருக்கக்கூடும். அவற்றிற்குத் தீர்வுகளும் முறைப்படுத்தப்பட்டிருக்க வேண்டும் என்பன இவ்வாய்வின் கருதுகோளாக அமைகின்றன.

## ஆய்வு முன்னோடிகள்

சங்க இலக்கியத்தில் உளவியல் தொடர்பான ஆய்வுகள் அதிகம் மேற்கொள்ளப்பெறவில்லை. ஒருசில முக்கிய ஆய்வுகள் அவ்வப்போது வெளிவந்துள்ளன. அவற்றில் முதன்மையாக விளங்குவது சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பட்ட, து.சிவராஜ் அவர்களின் “சங்க

இலக்கியத்தில் உளவியல் கொள்கைகள் - உளத் தற்காப்பு இயங்கு முறைகள் பற்றிய விளக்க ஆய்வு" (A psychological Descriptive Analysis of Defense Mechanism in Sangam Literature) என்னும் முனைவர் பட்ட ஆய்வேடு ஆகும். காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பட்ட இ.ஸ்டெல்லா புஷ்பராணியின் "சங்ககாலப் பெண்பாற் புலவர்களின் அகப்பாடல்களில் உள்ளப்போராட்டம்" எனும் ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வேடும் இவ்வாய்வின் முன்னோடியாக விளங்குகின்றன.

## சான்றாதாரங்கள்

ஆய்வுக்குரிய சான்றாதாரங்களை முதன்மைச் சான்றாதாரங்கள், துணைமைச் சான்றாதாரங்கள் என இருவகையாகப் பிரித்துக் கூறுவர். இவ்வாய்விற்குச் சங்கஇலக்கிய எட்டுத்தொகை நூல்களில் இடம்பெற்றுள்ள ஐந்து நூல்களிலுள்ள பரணர், ஔவையார் பாடல்கள் முதன்மைச் சான்றாதாரங்களாகின்றன. இவை தொடர்பான திறனாய்வு நூல்கள், உளவியல் தொடர்பான நூல்கள், ஆய்வேடுகள், அகராதிகள், இதழ்கள், கட்டுரைகள் ஆகியன துணைமைச் சான்றாதாரங்களாக இடம்பெற்றுள்ளன.

## ஆய்வு அணுகுமுறை

சங்க இலக்கியங்களில் காணலாகும் தரவுகளைப் பகுப்பாய்வு செய்யும் முறையில் பகுப்புமுறை அணுகுமுறையும் (Classified approach), அவற்றை விளக்குவதற்கு விளக்கவியல் அணுகுமுறையும் (Descriptive approach), மாந்தர்களின் உள்ளப் போராட்டங்களைக் காண உளவியல் அணுகுமுறையும் (Psychological approach) இவ்வாய்வில் பின்பற்றப்பட்டுள்ளன.

## ஆய்வேட்டின் அமைப்புமுறை

இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஆறு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன. அவை,

1. உள்ளப்போராட்டம் விளக்கம்
2. தலைவன் கூற்றில் உள்ளப்போராட்டம்
3. தலைவி கூற்றில் உள்ளப்போராட்டம்
4. தோழி கூற்றில் உள்ளப்போராட்டம்
5. பிறமாந்தர்கள் கூற்றில் உள்ளப்போராட்டம்
6. புறப்பாடல்களில் உள்ளப்போராட்டம்

என்பனவாகும்.

ஆய்வு முன்னுரையில் ஆய்வுத் தலைப்பு, நோக்கம், எல்லை, கருதுகோள், ஆய்வு முன்னோடிகள், சான்றாதாரங்கள், ஆய்வு அணுகுமுறைகள், இயல்பகுப்பு ஆகியவை இடம் பெற்றுள்ளன.

**"உள்ளப்போராட்டம் விளக்கம்"** என்ற முதலாம் இயலில் 'உள்ளம்' தொடர்பாக அகராதிகள் தரும் செய்திகள் கொடுக்கப்பெற்றுள்ளன. 'உள்ளப் போராட்டம்' தொடர்பாக இலக்கியங்களில் இடம்பெறும் செய்திகள் தொகுக்கப்பட்டு அது தொடர்பாகச் சிக்மண்ட் ஃபிராய்டு, லக்கான், யுங், லீவின் போன்ற மேலைநாட்டு உளவியல் அறிஞர்களின் கருத்துக்களும், திறனாய்வாளர்களின் கருத்துக்களும் தொகுத்து இவ்வியலில் தரப்பெற்றுள்ளன.

**"தலைவன் கூற்றில் உள்ளப்போராட்டம்"** என்ற இரண்டாம் இயலில் போர்புரிவதற்காகப் பாசறையில் தனித்து இருக்கும் தலைவனின் உள்ளத்தின் நிலைகள், வினைவயிற் பிரியும்போது வழியில் ஏற்படும்

துன்பத்தின் உணர்வுகள், தலைவன் தன் நெஞ்சிடம் தனிமொழியாகக் கூற்று நிகழ்த்தும்போது தோன்றும் உணர்வுகள், தோழி, தலைவி, தேர்ப்பாகன் மற்றும் பிற மாந்தர்களிடம் கூற்று நிகழ்த்தும்போது கூற்றுக்குத்தக தலைவனின் உள்ள உணர்ச்சிகள் வேறுபடுகின்ற நிலைப்பாங்குகள் குறித்து இவ்வியல் விளக்குகின்றது.

"*தலைவி கூற்றில் உள்ளப்போராட்டம்*" எனும் மூன்றாம் இயலில் தலைவி இல்லில் தலைவனைப் பிரிந்து தனித்து இருக்கும்போது அவளுக்கு ஏற்படும் உணர்வுகள், அவள் தோழியிடமும், தலைவனிடமும், பிறமாந்தர்களிடமும் கூற்று நிகழ்த்தும்போது தோன்றும் தலைவியின் உள்ளத்து உணர்வுகள் பதிவுசெய்யப்பட்டுள்ளன.

"தோழி கூற்றில் உள்ளப்போராட்டம்" என்னும் நான்காம் இயலில் தலைவியை விரைவில் திருமணம் செய்துகொள்ளுமாறு தலைவனிடம் (வரைவுகடாதல்) தோழி கூறும்போதும், இற்செறிப்பு உணர்த்துதல் நிலையிலும், தலைவன் சிறைப்புறமாக நிற்கும்போதும், தலைவனிடம் நேரடிக்கூற்று நிகழ்த்தும்போதும், வேற்றுவரைவு நிலையிலும், தலைவியை ஆற்றுவிக்கும்போதும், அறத்தொடு செயல்படும் நிலையிலும் வெளிப்படும் தோழியின் உள்ளத்து உணர்வுகளை இவ்வியல் விளக்குகிறது.

"*பிறமாந்தர்கள் கூற்றில் உள்ளப்போராட்டம்*" எனும் ஐந்தாம் இயலில் பிறமாந்தர்களாகக் கருதப்படும் கண்டோர், செவிலி, பரத்தை, காமக்கிழத்தி ஆகியோரது கூற்றுக்களில் வெளிப்படும் அவர்களின் உள்ளத்துணர்வு பற்றிய செய்திகள் இவ்வியலில் இடம்பெற்றுள்ளன.

“புறப்பாடல்களில் உள்ளப்போராட்டம்” எனும் ஆறாம் இயல் சங்க புலவோருள் பரணர், ஔவையார் பாடல்களை மட்டும் ஆராய்கிறது. ஔவையார் ஆடவர்கள், பெண்களின் உள்ளத்துணர்வை எவ்வாறு புலப்படுத்துகிறார் என்பது குறித்தும், பரணர் ஆண்கள், பெண்களின் உள்ளத்துணர்வை யாங்ஙனம் புலப்படுத்துகிறார் என்பது குறித்தும் ஆராயப்பட்டுள்ளது. இவ்விரு புலவர்களும் பல்வேறு மன்னர்களைப் புகழ்ந்து பாடியிருந்தாலும், ஒவ்வொரு மன்னனையும் அவர்கள் புகழ்ந்து பாடும்போது மன்னர்களுக்குத் தக இவ்விரு புலவர்களின் உணர்வுப் போக்குகள் யாங்ஙனம் வேறுபட்டு அமைகின்றன என்பதும் இங்கு ஆராயப்பட்டுள்ளது.

ஆய்வில் கண்ட கருத்துக்களின் சாராம்சங்கள் தொகுக்கப்பெற்று இறுதியில் ஆய்வின் முடிவுகளாகத் தரப்பெற்றுள்ளன.

ஆய்விற்குத் துணைசெய்த முதன்மை நூல்கள், திறனாய்வு நூல்கள், ஆய்வேடுகள், கட்டுரைகள், அகராதிகள், ஆங்கில நூல்கள் போன்றவை அகரவரிசைப் படுத்தப்பெற்றுத் துணைநூற்பட்டியலாகவும், இதனைத் தொடர்ந்து பின்னிணைப்பில் அட்டவணைகளும் இடம்பெற்றுள்ளன.

*இயல் - 1*

# உள்ளப் போராட்டம் - விளக்கம்

உள நலவியல் என்பது ஓர் அறிவியலாகும். இது உள்ளத்தில் ஏற்படக்கூடிய பாதிப்புக்களைத் தடுக்கவும், உளநலத்திற்குத் தகுந்த பாதுகாப்பு அளிக்கவும், உளநலப் பாதிப்புகளிலிருந்து விடுதலை அளிக்கவும் பயன்படும் அறிவியலாகும்.

சுற்றுப்புறச் சூழ்நிலைகளிலுள்ள நன்மை, தீமைகளை மனநிறைவான அளவிற்குச் சரிசெய்துகொண்டு வாழ்ந்தால் உளப்போராட்டம் பெரும்பான்மை எழுவதில்லை. அவை சரிசெய்யப்படாத நிலையில் உளநலம் பாதிக்கப்பட்டு, மனத்திடையே போராட்டம் எழுகின்றது. இதன் காரணமாக உடல்நிலையில் மாற்றம் ஏற்பட்டு உடல் உறுப்புகள் பாதிக்கப்படுகின்றன.

காதல் உணர்வுகளைச் சங்க அகப்பாடல்கள் பிரதிபலிக்கின்றன. இவ்வுணர்வுகள், தொல்காப்பியர் கூறும் மெய்ப்பாட்டியல் உணர்ச்சிக் கோட்பாடுகளோடும், வடமொழியாளர் கூறும் இரசக் கோட்பாடுகளோடும் ஒப்புநோக்கிக் காணத்தக்கன. இவ்வுணர்வுகள் உள்ளத்தில் எழுவதால் உள்ளப்போராட்டம் என அவை பெயராக்கம் பெறுகின்றன.

தொல்காப்பியரின் உணர்ச்சிக் கொள்கை, வடமொழியாளரின் இரசக்கொள்கை, உள்ளப்போராட்டம், உள்ளப் போராட்டங்களின் வகைகள், உளம், உள்ளம், மனம் என்பவற்றிற்கு அகராதிகள், கலைக்களஞ்சியங்கள் தரும் பொருள் போன்றவை இவ்வியலில் விளக்கப்படுகின்றன.

## உளவியல் தோற்றம்

உளவியல் என்பது மானிட நடத்தைகளையும் செயல்பாடுகளையும் அறிவியல் கண்கொண்டு அறிந்திடும் ஓர் அறிவியல் துறையாகும் என உளவியலார் குறிப்பிடுகின்றனர்.

"கிரேக்கத் தத்துவ மேதை அரிஸ்டாட்டில் இயற்றிய 'ஆன்மாவின் இயல்புகள்' என்னும் நூல் உளவியல் துறையின் அடிப்படை நூலாகவும் முதல் நூலாகவும் கருதப்படுகிறது."[1]

ஆன்மாவின் இயல்புகள் பல அறிஞர்களின் கவனத்தை ஈர்த்தது. உளச் செயல்களும், நடத்தைகளும் பல்வேறு கருத்து மோதல்களுக்கு உட்பட்டன. அதன்வழி புதிய கோட்பாடுகள் தோன்றலாயின.

தேகார்தே (Descartes) என்ற பிரெஞ்சு நாட்டுத் தத்துவ மேதை உளவியல் கூறுகளை அறிவியல் முறையில் ஆராய்ந்திட முற்பட்டு உள அமைப்பு, உளச் செயல்களை அறிவியல் துணைகொண்டு தம் கருத்துக்களை வெளியிட்டார். இவருடைய கருத்துக்கள் உளவியல் வளர்ச்சிக்கு அடித்தளமாக அமைந்தன.

எனவே உளவியல், "தத்துவத் துறையில் இருந்து முகிழ்ந்த ஒரு தனித்துறை"[2] என்று கூறுவது பொருத்தமாகும்.

உளவியல் தோன்றிய காலத்தில் உளவியல் கருத்துக்களைத் தத்துவநோக்கில் எடுத்துரைத்தவர்கள் தத்துவ அறிஞர்களேயாவர். எனவே தான் பல அரிய மானிட நடத்தைக் கூறுகள் தத்துவ கருத்துக்களுக்கு உட்படாமல் நின்றுவிட்டன. தத்துவக் கருத்துக்களில் இருந்து விடுபட்டு அறிவியல் நோக்கில் ஆராயப்பட்டபோது அனேக உளச் செயல்பாடுகள்

முறையாக ஆராய்ந்திட வழி தோன்றியது. அவ்வழியே நின்று உளவியல் கருத்துக்களை வெளியிடலாயினர். அவை உளவியல் வரலாற்றைத் தோற்றுவிப்பதில் முன்னோடியாக அமைந்தன.

**உளவியல் வரலாறு**

உளவியல் என்பதனினும் 'சைக்காலஜி' என்பது நம்மிடையே மிகப் பழகிவிட்ட சொல்லாகும்.

"கி.பி.16 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த குரு என்ற அறிஞரே முதன் முதலாக சைக்காலஜி Psychology என்னும் பெயரை அறிமுகப்படுத்தினார்."[3]

நமது தமிழ்மொழியில் உளவியல் என்னும் சொல் 1942 ஆம் ஆண்டில் உள்ளம், மனம் போன்ற சொற்களோடு தொடர்புகொண்டதாக அறிமுகம் பெற்றுள்ளது.

தமிழக அரசு தமிழ்ச்சொற்களை வகைப்படுத்தி முறைப்படுத்தியப் பொழுது 'உளவியல்' என்ற சொல் தோன்றியது. இன்று தனித்தமிழ் ஆர்வலர்கள் 'உளத்தியல்' என்று கூறுவதே Psychology-யின் சரியான தமிழ்ப்பெயராக இருக்கும் என்பர்.

ஒவ்வொரு துறைக்கும் ஒரு வரலாறு உண்டு. அதே போன்றே உளவியல் வளர்ச்சிக்கும் ஒரு செம்மையான வரலாற்றைப் பெற்றுத் திகழ்கின்றது. வரலாற்றின் தொடக்ககால மேதையான அரிஸ்டாட்டில் (Aristotle) மதிக்கப்படுகிறார்.

ஜான் லாக் (John locke) என்பவர் உளவியலின் ஆரம்பகால அறிஞராவார். அவர் உளவியல் கருத்துக்களைப் பரப்பினார்.

18, 19 ஆம் நூற்றாண்டுகளில் பல்கலைக்கழகம் / கல்விக்கூடங்கள் தத்துவ துறையில் உளவியல் ஒரு பிரிவாக அமைக்கப்பட்டது. தற்பொழுது உளவியல் தனித்துறையாக விரிந்துள்ளது.

வில்கெல்ம் - ஊண்ட் கி.பி.1879 இல் ஜெர்மனி நாட்டில் லெபிஜ் (Leipzig) பல்கலைக் கழகத்தில் உளவியல் பரிசோதனைக் கூடத்தை நிறுவி, பரிசோதனை மேற்கொண்டார். இச்சோதனைக்கூடம் உலகிலேயே முதலாவதாக அமைந்தது. எனவேதான் "வில்கெல்ம் ஊண்ட் பரிசோதனை உளவியலின் தந்தை (Father of Experimental psychology) என அழைக்கப்படுகின்றார்."[4]

## உளவியல் பிரிவுகள்

உளவியல்துறை தற்பொழுது ஆல்போல் தழைத்து விரிந்துள்ளது. இதனைப் பாஞ்.இராமலிங்கம் கீழ்கண்டவாறு பட்டியலிடுகின்றார்.

| | | |
|---|---|---|
| "சமூக உளவியல் | - | Social Psychology |
| உடற்கூற்று உளவியல் | - | Psysiological Psychology |
| கல்வி உளவியல் | - | Educational Psychology |
| உளநோய் உளவியல் | - | Abnormal Psychology |
| வளர்பருவ (or)<br>வளர்ச்சி சார் உளவியல் | - | Adolocent (or)<br>Developmental Psychology |
| குழந்தை உளவியல் | - | Child Psychology |
| குமரப்பருவ உளவியல் | - | Adolescent Psychology |
| முதியோர் உளவியல் | - | Adult Psychology |
| மனநல உளவியல் | - | Clinical Psychology |
| தொழிலக உளவியல் | - | Industrial Psychology |

| | | |
|---|---|---|
| நுகர்வோர் உளவியல் | - | Consumer Psychology |
| விளம்பர உளவியல் | - | Advertising Psychology |
| குற்றவியல் உளவியல் | - | Criminal Psychology |
| இராணுவ உளவியல் | - | military Psychology |
| வான்வழி உளவியல் | - | Aviation Psychology |
| வணிக உளவியல் | - | marketing Psychology |
| வேற்றுமை உளவியல் | - | Differential Psychology |
| சுற்றுச்சூழலியல் உளவியல் | - | Environmental Psychology |
| நரம்பியல் உளவியல் | - | Necuro Psychology |
| மனித ஆற்றல் சாரா உளவியல் | - | Para Psychology |
| ஆலோசனை உளவியல் | - | Counselling Psychology ”[5] |

இவை போன்று பல பிரிவுகள் மேலும் தோன்றியுள்ளதாகக் குறிப்பிடுகின்றார்.

சமூக உளவியலில் மனிதனுடைய செயல்பாடுகளும் நடத்தைகளும் ஆராயப்படுகின்றன. ஒருவனுடைய உணர்வுகள், எண்ணங்கள் இவ்வகை ஆய்வில் முக்கியப் பங்குவகிக்கின்றன.

சமூகஉளவியல் சமூகவியல், மானிடவியல் போன்றவற்றுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது.

## உளவியலின் தந்தை

“சோதனைக் கூடங்களின் மூலமாக நடத்தப்பட்டுவந்த உளப்பகுப்பாய்வு முறைகளை நீக்கிவிட்டு அணுகுமுறைகளின் மூலமாக பண்பியல் ஆய்வுகளைச் ‘சிக்மண்ட் ப்பிராய்ட்’ மேற்கொண்டு உளவியல்

வளர்ச்சியின் உன்னதப் போக்கினை வெளியிட்டார்."[6] இதன் காரணமாகவே இவர் உளவியலின் தந்தை எனப் போற்றப்படுகின்றார்.

இவருடைய மன ஆய்வுக் கொள்கையின்படி "புறமனம், இடைமனம், உள்மனம் என மூன்று நிலைகளாக 'மனம்' பிரிக்கப்படுகிறது."[7]

பிராய்டின் உளவியல் அணுகுமுறைகள் பல்வேறு பரிணாமங்களில் வளர்ச்சிபெற்றுள்ளன. எனவே இன்றைய நடைமுறைச் செயற்பாடுகளில் இக்கோட்பாடுகள் பெருமளவில் காணப்படுவதில்லை. இவை பலமுனைநடத்தைச் செயல்பாடுகளுடன் இணைந்துள்ளன.

கடந்த இரு நூற்றாண்டுகளில் உளவியல் மிக வேகமாக வளர்ச்சியை எட்டியுள்ளது. உளவியல் ஒரு கலைத்துறையாகத் தோன்றி இன்றைக்கு அறிவியல் துறையாகப் பரிணமித்துள்ளது என்றால் அது மிகையல்ல.

## தொல்காப்பியரின் உணர்ச்சிக்கொள்கை

தொல்காப்பியர் உணர்வு என்னும் சொல்லை ஆறு இடங்களிலும் உணர்ச்சி என்னும் சொல்லை ஓர் இடத்திலும் பயன்படுத்தியுள்ளார்.

தொல்காப்பியத்தில் இடம்பெற்றுள்ள உணர்வு என்ற சொல், தான் பயின்றுவரும் இடத்திற்கேற்ப பொருள் விளக்கம் பெறுகின்றது. தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் "தாய்க்கும் வரையார் உணர்வுடன் படினே"[8] என்ற அடி இடம்பெற்றுள்ளது. இதற்கு இளம்பூரணர்,

"செவிலியுணர்வோடு உடம்பட உள்ளத்தாயின் நற்றாய்க்கும் மேற்சொல்லப்பட்டவை எல்லாம் வரையப்படா வென்றவாறு"[9] என உரைவிளக்கம் தருகின்றார். அதே அடியிலுள்ள "உணர்வுடம்படின்" என்ற

சொல்லுக்கு, "அங்ஙனம் செவிலியுணர்ந்தாங்கே நற்றாயும் மதியுடம்படில்"[10] எனப் பொருள் கூறுகிறார் நச்சினார்க்கினியர்.

இவ்விரு விளக்கங்களும் 'உணர்வு' என்னும் சொல்லுக்கு 'உள்ளத்தின் நிலைப்பாடு' என்ற பொருளைத் தருகின்றன.

'உணர்வு' என்னும் சொல் தொல்காப்பியத்தில் 'அறிவு,'[11] 'அறிவுடைமாந்தர்,'[12] 'அறிவுடையோர்'[13] விசாரித்துணர்தல்'[14] என்ற பொருள்களில் ஆளப்பட்டுள்ளன.

'உணர்ச்சி' என்னும் சொல் தொல்காப்பியத்தில் 'மனமகிழ்ச்சி'[15] 'உணர்வு'[16] என்ற பொருட்களை விளக்கும் முகமாக வந்துள்ளது.

உள்ளத்தின்கண் நிகழ்வது உணர்ச்சி. அவ்வுணர்ச்சியால் புறத்தில் தோன்றுவது மெய்ப்பாடு. இவ்வுணர்ச்சிகள் குறித்தும், அவை உடலின்கண் தோன்றுவது குறித்தும் தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில் விளக்கியுள்ளார். தொல்காப்பிய மெய்ப்பாட்டியலில் இடம் பெற்றுள்ள "கண்ணிய புறனே நானா நான்கு என்ப" என்ற அடிக்குப் பேராசிரியர்,

"சுவைபடும் பொருளுக்கும் அதனை நுகர்ந்த பொறியுணர்வும், அது மனத்துப்பட்ட வழி உள்ளத்து நிகழும் குறிப்பும், குறிப்புகள் பிறந்த உள்ளத்தில் கண்ணீரரும்பலும், மெய்மயிர் சிலிர்த்தலும் முதலாக உடம்பின்கண் வரும் வேறுபாடாகிய சமத்துவம் என நான்காக்கி..."[17] என விளக்கம் தருகின்றார்.

பொருளும், புலனறிவு வழி உணர்வும், உணர்வால் உள்ளத்தில் ஏற்படும் கிளர்நிலையாகிய உணர்ச்சியும்; உணர்ச்சி வெளிப்பாடாகிய

மெய்ப்பாடும் ஆகிய நான்கும் பேராசிரியர் சொல்லிய விளக்கத்தைச் சார்ந்தவைகளாகும்.

பொருள் புலன்களால் நுகரப்படுகிறது. இந்நுகர்ச்சி மூளையால் அறியப்படுகிறது. இவ்வறிதலானது மனத்தின்கண் உணர்வைத் தோற்றுவித்து உள்ளக் கிளர்ச்சியை உண்டாக்கி உணர்ச்சியாக அமைகின்றது. இவ்வுணர்ச்சியைப் பேராசிரியர் "உள்ளத்து நிகழும் குறிப்பு" என்பர். இவ்வுணர்ச்சியே புற உடலின்கண் மெய்ப்பாடாகத் தோன்றுகின்றது.

உடலின்கண் தோன்றும் மெய்ப்பாடுகள் எட்டு. அவை, நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்பனவாகும். இவை முப்பத்திரண்டு உணர்ச்சிகளைத் தோற்றுவிக்கும். ஒவ்வொரு மெய்ப்பாடும் நான்கு, நான்கு உணர்ச்சிகளாகத் தோன்றி முப்பத்திரண்டாக அமையும். இவ்வெட்டுவகை மெய்ப்பாடுகளை மேலைநாட்டு உளவியலாரும் குறிப்பிடுகின்றனர். அவை "அச்சம், சினம், உவகை, வருத்தம், பேராசை, வெறுப்பு, எதிர்பார்த்தலும் கூர்ந்து கவனித்தலும், வியப்பு என்பனவாகும்."[18] இவை தொல்காப்பியரின் முறை வைப்பிலிருந்து வேறுபட்டு அமைந்துள்ளன.

பால் உணர்வு, உலக உயிர்கள் அனைத்துக்கும் பொதுவானதாகும். இவ்வுணர்வு இயல்பு உந்துதலால் ஏற்படுகின்றது. அது உள்ளத்தில் வேட்கைத் தூண்டுதலாக மாறுகின்றது. அதனை நிறைவேற்ற என்னும்போது உணர்வுகள் கிளர்ந்தெழுகின்றன. இக்கிளர்நிலைகள் சூழலுக்குத்தக உள்ளத்தே உணர்ச்சிகளாக உருவாகின்றன. இவ்வுள்ளத்தே

நிகழும் உணர்ச்சியே மெய்ப்பாடாகும். இவை பாலியலை அடிப்படையாகக் கொண்டு பிறக்கின்றன என்கிறார் தொல்காப்பியர்.

### வடமொழியாளர் இரசக்கொள்கை

இலக்கியம் கற்போரும், காண்போரும் பெறும் சுவையை வடமொழியாளர்கள் "இரசக்கொள்கை" என்பர். பரதரது பரதநாட்டிய சாஸ்திரம் 'இரசம்' தோன்றும் முறையை, "இரசம் நிகழ விபாவங்கள், அநுபாவங்கள், வியாபிசாரி பாவங்கள் ஆகியவை இணைந்து செயல்பட வேண்டும்,"[19] எனக் குறிக்கின்றது.

விபாவம் என்பது தோற்றுவிக்கும் காரணி; வியாபிசாரி பாவங்கள் என்பது துணைக்காரணிகள்; அநுபாவம் என்பது அனுமானிக்கும் காரணி. இதன் விளக்கமாக "சொல், செயல், எண்ணம் இற்றின் துணை கொண்டு செய்யப்படும் அபிநயவகைகளால் கிளரப்படும் உணர்வுகள், புருவங்களை நெறித்தல், கடைக்கண் பார்வை முதலிய புற வெளிப்பாடுகளால் உணர்த்தப்படும் போது காரியங்களாகிற அவற்றிற்கு 'அனுபாவம்' என்று பெயர். இப்படி விபாவங்களால் எழுப்பப்பட்டு அநுபாவங்களால் உணர்த்தப்படும் உணர்வுகளுக்கு 'பாவம்' என்று பெயரைச் சுட்டுகிறார் பரதர்"[20] என பெ.திருஞானசம்பந்தன் குறிப்பிடுகிறார்.

"சில நிலையான உணர்வுகள் உள்ளத்தே அமைபவை என்றும், அவை ஸ்தாயிபாவங்கள் எனவும் வடமொழியாளர்கள் கூறுகின்றனர்."[21] "நிலையான அடிப்படை உணர்வுகள் எட்டும், பரதரால் குறிக்கப்படும் நாற்பத்தொன்பது உணர்வுகளுள் (பாவங்களுள்) அடங்குபவை."[22] "சத்துவம் எனப்படும் அந்தக் காரணிகளிலிருந்து தோன்றும் சாத்விக பாவங்கள் எட்டு எனவும் ஏனைய முப்பத்து மூன்று பாவங்கள் வியாபிசாரி

நிலையற்ற பாவங்கள் எனவும் வடமொழி இரசக்கொள்கையினர் பொருள் கொள்கின்றனர்."[23]

"இரசக்கொள்கையாவது படிப்போர்க்கும், பார்வையாளருக்கும் என அமைக்கப்பட்டது என்பது அறிஞர்களின் முடிவு."[24] "உணர்ச்சிகள் மனத்தளவில் உணர்தல், வெளிப்பட்டுத் தோன்றல் என்னும் இரு நிலைகளை உடையவை என்பதை வடமொழி இரசக்கொள்கையினர் ஒப்புவர்."[25] வெளிப்பட்டுத் தோன்றும் உணர்ச்சியே மெய்ப்பாடாகும்.

சுவை ஒன்பது வகைப்படும். அவை, வீரச்சுவை, பயச்சுவை, இழிப்புச்சுவை, அற்புதச்சுவை, இன்பச் சுவை, அவலச்சுவை, நகைச்சுவை, நடுவுநிலைச்சுவை, உருத்திரச்சுவை என்பனவாகும்.

"இச்சுவையின்கண் தோன்றுவதைக் 'குறிப்பு' என்றும் அக்குறிப்பின் நிகழ்கின்ற நிகழ்ச்சியைச் 'சத்துவம்' என்றும் குறிப்பர்."[26] சுவை உணர்வானது உள்ளத்து வழித்தோன்றும். உடம்பின் வேறுபாட்டை விறல் என்றும், அவ்விறலே வடநூலார் கூறும் சத்துவம் என்றும் குறிப்பிடுவர் அடியார்க்கு நல்லார்.

## உள்ளப் போராட்டம்

'உள்ளப்போராட்டம்' என்பதில் உள்ள 'உள்ளம்' காதல் சார்ந்தது. போராட்டம் (Conflict) என்பது உணர்வு நிறைவேறாத தருணத்தில் உள்ளத்திடையே எழுவதாகும். மனக்கிளர்ச்சியால் உணர்வுகள் எழுகின்றன. இது ஆங்கிலத்தில் Emotion என்றழைக்கப்படுகிறது. இவ்வுணர்வுகளுள் பால் உணர்ச்சி தலையாயதாகும். இந்த உணர்ச்சி திருப்தி அடைவதற்குத் தகுந்த சூழ்நிலை ஏற்படாவிட்டாலோ அல்லது தடைகள் ஏற்பட்டாலோ

கிளர்ச்சியானது போராட்டமாக உருவெடுக்கின்றது. இதுவே உணர்வுப் போராட்டம் (அ) உள்ளப்போராட்டம் என்றழைக்கப்படுகின்றது. இது சங்க அகஇலக்கியச் செய்யுட்களில் உரிப்பொருளிலேயே செறிந்துள்ளது.

ஒருவனது உள்ளம் சரியான முடிவெடுக்கும் நிலையில் இல்லாதபோது, துயரத்தையும் மகிழ்ச்சியற்ற நிலையினையும் உண்டுபண்ணுகிறது. உள்ளத்தின் இந்த நிலை, தனிப்பட்டவனுடைய செயலைத் தடுத்து நிறுத்துகிறது. மனப்போராட்டம் மன்முறிவினால் ஏற்படுகிறது. மனமுறிவு, மனப்போராட்டம் ஆகியவற்றிற்குப் பாதிக்கப்படாதோர் எவரும் இல்லை எனலாம்.

தனிப்பட்டவனை மனப்போராட்டச் சூழ்நிலையில் ஆழ்த்துவது மனமுறிவின்செயலே ஆகும். அது ஏற்படுவதற்குக் காரணம் ஒரு சமயத்தில் ஏற்படுகின்ற ஒப்பிட இயலாத துன்பங்கள் மீண்டும் மீண்டும் தோன்றும் தன்மையே ஆகும். ஒருவனுக்கு இக்கட்டான சூழ்நிலைகள் ஏற்படுகின்றபோது மனப்போராட்டம் எழுகின்றது. உதாரணமாக ஒருவன் கணிதம் மற்றும் இயற்பியல் ஆகிய இரண்டு படிப்புகளுக்கும் தேர்வு செய்யப்பட்டுள்ளான் என வைத்துக்கொண்டால் தற்போது அவன் எந்தப் படிப்பைத் தேர்ந்தெடுப்பது என்பதில் போராட்டம் ஏற்படுகின்றது. இறுதியில் தேர்ந்துகொண்ட ஒரு படிப்பு மன நிறைவையும் மற்றது மனமுறிவையும் கொடுக்கின்றது. போராட்டத்திற்குரிய சிக்கல் (அ) இக்கட்டான சூழ்நிலைகளானது மன (அ) உள இறுக்கத்தையும் அமைதியற்ற மனநிலையையும் உருவாக்குகிறது. ஒருவனுக்கு இக்கட்டான சூழ்நிலைகள் இருந்துகொண்டே இருக்குமானால் அதனால் அவனுக்கு மற்றவர்களின் ஆலோசனைகளும், அறிவுரைகளும் தேவையானதாக அமைகின்றன.

"உணர்வுப் போராட்டங்கள் வலிமையடையும் போதும் மனமுறிவு நிகழும் போதும் உள்ளத்தில் கவலை போன்ற உணர்ச்சிகள் உண்டாகுகின்றன."[27]

போராட்டங்களுக்கு மையமாகப் பாலுணர்வு பெரும்பான்மை அமைகின்றது. பாலியல்பால் தோன்றும் காதல் உணர்வுடன் வேட்கைத் தணிப்பு, சமூக அங்கீகாரம் பெறுதல், குடும்பம் அமைக்கும் ஆர்வம் போன்ற தூண்டுதல்கள் சார்ந்து அமைகின்றன. 'இத்தகைய தூண்டுதல்கள் இயல்பாக போதுமான அளவில் நிறைவேறவில்லை எனில் அல்லது தடைபடுமெனில் விரக்தியும் அதனால் போராட்டங்களும் ஏற்படும்' என்று கேரட் எனும் மேலைநாட்டு அறிஞர் கூறும் கருத்து இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

"உளப் போராட்டம் என்பது ஃப்ராய்டியத்தின் அடிப்படைக் கருத்தாக்கங்களில் ஒன்றாகும். உள்ளத்தில் பல போராட்டங்கள் நிகழ்ந்தாலும் பாலுணர்ச்சிக்கு எதிரான போராட்டமே முதன்மையாகக் கருதப்படுகிறது. அனைத்துப் போராட்டங்களைப் போல் பாலியல் போராட்டத்திற்கும் முரண்பாடு (Contradiction) காரணியாகிறது."[28] இரண்டு பிரிவுகளுக்கு இடையிலான முரண்பாடுகள் போராட்டத்தை ஏற்படுத்துகின்றன. ஃபிராய்டியத்தின் படி பாலுணர்ச்சிக்கு முரண்பட்ட பண்பாட்டு உணர்ச்சி உளப்போராட்டத்தில் பங்கு கொள்கின்றது. இவ்விரு உணர்ச்சிகள் (emotions) இயல்பிலேயே முரண்பட்டிருப்பதால் ஒற்றுமைக்கு வாய்ப்பின்றி ஒன்றை மற்றொன்று ஆளுகைக்கு உட்படுத்துவதில் முனைப்பாகச் செயல்படும். இதில் தத்தமது வலிமையைக் காட்டத் தீவிரமாகப் போராடுகின்றன. இவ்விரண்டும் வலிமையானவை என்பது குறிப்பிடத்தக்கது.

“ஃபிராய்டின் தொடக்க கால நரம்பு நோய் முதலிப் (aetiology) பற்றிய ஆய்வில் நரம்பு நோய்களுக்கு உளப்போராட்டமே முழுமுதற் காரணி என்பதைக் கண்டார்.”[29] குறிப்பாக இசிப்பு நோய்ப்பற்றிய ஆய்வில் (Studies on hysteria) நரம்பு நோய்க்குறி உருவாக்கத்திற்கு உளப்போராட்டத்தின் கணிசமான பங்களிப்பை விவரிக்கிறார்.

## உள்ளப் போராட்டம் வரையறையும் வகைகளும்

“வலிமையுடைய ஊக்கம் நிறைவுற இயலாது தடைபடுமானால் உள்ளமுறிவு ஏற்படுகிறது. தடைபடுவதற்கான காரணங்களை உளவியல் பேராசிரியர் ஒருவர் மூவகைப்படுத்துகிறார்.”[30]

சூழ்நிலைப் பொருள்களும் பிற மனிதரும் முதல்காரணம் ஆகும். இரண்டாம் காரணம் உள்ள உடல் உறுப்புகள் குறைவு, திறன் குறைவு, நாட்டக் குறைவு முதலியவைகள் ஆகும். மூன்றாம் காரணமாக உள்ளப் போராட்டம் (Conflict) குறிப்பிடப்படுகிறது.

“இரண்டு சமவலிவுடைய ஊக்கிகள் (motives) பூர்த்திபெற இயலாது, ஒன்று மற்றொன்றுக்குத் தடையாக இருப்பதின் காரணமாக ஏற்படும் உளநிலையே உள்ளப் போராட்டம்”[31] என்பது வரையறையாகும்.

மக்கள் பலர் கூடும் இடங்களில் ஒன்றைப் பற்றி முரண்பாடு தோன்றுவதுண்டு. “கோப்பெருநற்கிள்ளி வேற்றூர் சென்று ஒரு மற்போரில் கலந்துகொண்டபோது கூடியிருந்த மக்களுள் ஒருசாரார் அவனுக்கு வெற்றி என்றும் வேறு ஒருசாரார் வெற்றியில்லை என்றும் கூறுகின்றனர்.”[32]

“நம்பி நெடுஞ்செழியன் இறந்த போது அங்குக் கூடியிருந்தோர் அவனது உடலை வாளால் அறுத்துப் புதைப்பதா (அ) சுடுவதா என

ஐயுற்றதாகவும் பேரெயில் முறுவலார் இரண்டனுள் ஏதேனும் ஒன்று செய்யலாம் எனக் கூறியதாகவும் புறநானூற்றால் அறிகிறோம்."[33]

பலர் கூடும் இடத்தில் முரணான விருப்பமும் கருத்தும் தோன்றுவதுண்டு. நோக்கத்தின் வேறுபாட்டிற்கு ஏற்பத்தோன்றும் இருவகைக் கருத்து நிலைகளை உளவியலார் உள்ளப்போராட்டம் என்பதில்லை. அவை கருத்து வேறுபாடுகளே ஆகும் என்பர்.

பெருங்கடுங்கோவின் பாட்டில் கடன் பெறுபவன் மகிழ்ந்து பெறுதலும் பெற்ற கடனைத் திருப்பி அளிக்கும்போது வெறுத்தலும் உலகியற்கையாகக் கூறப்படுகிறது. இதனை,

"உண்கடன் வழிமொழிந் திரங்குங்கால் முகனுந்தான்
கொண்டது கொடுக்குங்கால் முகனும்வே றாகுதல்
பண்டுமிவ் வுலகத் தியற்கை"[34]

எனும் அடிகள் சுட்டும்.

இம்முரண்பாடு ஒரே உள்ளத்தின் இருவேறு நிலைகள் ஆகும். ஆயினும் மகிழ்வும் மகிழ்வின்மையும் ஒரே நேரத்தில் தோன்றவில்லை. இதனையும் உளவியலார் உள்ளப்போராட்டம் என்பதில்லை.

உள்ளத்தின் நோக்கமும் ஊக்கமும் மனிதனைச் செயல்படுத்துகின்றன. "ஒரே நேரத்தில் ஒன்றற்கு மேற்பட்ட விருப்பங்கள் உடனிகழ்வாய்த் தோன்றுமாயின்; எதனை ஏற்பது, எதனை விடுப்பது என்னும் ஐயம் தோன்றும். இதன் அடிப்படையில் முடிவெடுக்க இயலாநிலையும் செயற்பட இயலா நிலையும் தோன்றும். இத்தகைய நிலையே உள்ளப் போராட்டம் எனப்படும்"[35] என்பர் து.சிவராஜ். இருவேறு நோக்கமும்

ஊக்கமும் ஒரே நேரத்தில் ஒரே உள்ளத்தில் தோன்றி மோதுகின்றன என்பது கருதத்தக்கது.

"ஒரே நேரத்தில் நிறைவுற இயலாததும் ஒன்றற்கொன்று தனித்தனியானதுமான செயல் நோக்கமும் ஊக்கமும் உள்ளத்தில் இருப்பதனால் விளைவதே உள்ளப்போராட்டம் என உளவியலார் விளக்குவர்."[36]

இருவகை விருப்பங்களில் எதனைக் கொள்வது என்பதும் இருவகைத் துன்பங்களில் எதனைத் தவிர்ப்பது என்பதும் இன்பம், துன்பம் இரண்டில் எந்த ஒன்றைக் கொள்வது என்பதுமாகிய மன நிலைகள் போராட்ட வகைகளுக்கு வித்திடுகின்றன என உளவியலார் கூறுகின்றனர்.

"அகமன உறவுகளில் ஒன்றான உளப்போராட்டம் உள்ளுக்குள் நிகழ்வதால் செயல்வடிவில் வெளியே தெரிவதில்லை. உள்ளத்தின் முரண்பட்ட கருத்துக்களுக்கு இடையிலான போராட்டம் நிகழ்வதற்குப் புறநிலைத் தூண்டல் அவசியமாகும். குறிப்பாகப் பாலியல் புறநிலையை (Sexual Object) இப்பணியைச் செய்கிறது"[37] என்கிறார் தி.கு.இரவிச்சந்திரன்.

உளப்போராட்டத்திற்கு மூலமாக முரண்பாடும் அமுக்கத்திற்கு ஆதாரமாக உளப்போராட்டமும் அகமனப் படிமுறையில் அமைகின்றன. முரண்பாடு, போராட்டம், அமுக்கம் ஆகிய மூன்றும் சேர்ந்த உள இயக்கம் முக்கியமான அகமனப் படிமுறையாகும்.

"உள்ளப் போராட்டத்தைக் கர்ட் லீவின் என்னும் உளவியல் அறிஞர் மூவகைப்படுத்தியுள்ளார்."[38] "இப்பாகுபாடு முரண்படும் நோக்கங்களோடு

இயைந்த வெகுமதி அல்லது பெறலாகும் தண்டனையைச் சார்ந்த அடிப்படையில் செய்யப்பட்டுள்ளது"[39] என்பர். மூவகைப் பாகுபாடுகளாவன,

1) "அணுகுதல் - அணுகுதல் போராட்டம்
(Approach Approach Conflict)

2) அணுகுதல் - விலகுதல் போராட்டம்
(Approach Avoidance Conflict)

3) விலகுதல் - விலகுதல் போராட்டம்
(Avoidance Avoidance Conflict)"[40]

என்பனவாகும்.

## 1) அணுகுதல் - அணுகுதல் போராட்டம்

**(Approach Approach Conflict)**

"விரும்பத் தகுந்த இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட மாற்றுகளிடையே நிகழலாகும் போட்டியை உள்ளடக்கியதே அணுகுதல்-அணுகுதல் போராட்டம் என உளவியல் விளக்குகிறது."[41] "விரும்பத் தகுந்த இரண்டு இலக்குகளை ஒரே நேரத்தில் அடைய முயல்வதில் ஏற்படும் உள்ள நிலையே இத்தகைய உள்ளப் போராட்டம் என வரையறை செய்வர்."[42] இரண்டு இலக்குகளும் விரும்பத்தக்கனவாய் உள்ளன. ஒரே நேரத்தில் அவற்றைப் பெற விழையும் போக்கினால் போராட்டம் தோன்றுகிறது.

இம்முறையில் இரண்டு நேர் ஊக்கிகள் பங்குபெறுகின்றன. ஏதேனும் ஒன்றில் சாதனை புரிய நினைக்கும் ஒருவன் இரண்டு நல்ல சம இலக்குகளைப் பெற்றிருப்பானாகில் அங்கு எந்த இலக்கினை அடைய முயற்சிப்பது என்பதில் அவனுக்கு மனப்போராட்டம் உண்டாகிறது.



உதாரணமாக ஒருவனுக்குக் கேட்கப்பட்ட இரண்டு வினாக்களுமே நன்கு தெரிந்திருந்தால் அவன் அந்த இரண்டு வினாக்களில் ஒன்றினைத் தேர்வுசெய்வதில் மனப்போராட்டம் உண்டாகிறது. இத்தகைய ஒரு மனப்போராட்ட சூழ்நிலையை மேற்கண்ட வரைபடம் விளக்குகிறது.

## 2) அணுகுதல் - விலகுதல் போராட்டம்

**(Approach Avoidance Conflict)**

"ஓர் இலக்கினை அணுகவும் விலகவும் தூண்டும் வலிவான போக்குகள் ஒரே நேரத்தில் நிலவுவதே அணுகுதல் - விலகுதல் போராட்டம் எனப்படும்."[43] ஓர் இலக்கினை அடைவதில் நேர் நிலையான தூண்டல் ஒன்றும் எதிர்மறையான தூண்டல் ஒன்றும் செயல்படுகின்றன. அப்போது அந்த இலக்கினை அணுகுவதா விலகுவதா என்னும் போராட்டம் தோன்றுகிறது.

இம்முறையில் நேர், எதிர் ஊக்கிகள் பங்கு பெறுகின்றன. உதாரணமாக ஒருவன் பள்ளியில் வகுப்பிற்குச் செல்லாது, சினிமா பார்க்க விரும்புகிறான் என வைத்துக்கொண்டால், அவன் சினிமா பார்த்து இன்பம் துய்த்தாலும் கூட உண்மையில் தனது கல்வியை இழக்கிறான். இந்நிலையில் இவன் மனப்போராட்டமுள்ளவனாகிறான். இதனை,




என்ற வரைபடம் விளக்கும்.

## 3) விலகுதல் - விலகுதல் போராட்டம்

**(Avoidance Avoidance Conflict)**

"இரண்டு விரும்பத்தகாத இலக்குகளில் ஏதாவது ஒன்றை அடைந்தே ஆக வேண்டிய நிலையை விலகுதல் - விலகுதல் உள்ளப் போராட்டம்

என்பர்."[44] இத்தகைய போராட்டத்திற்கு ஆட்பட்டவன் "பூதத்திற்கும் பெருங்கடலுக்கும் இடையே அகப்பட்டவன் போல இரு தீமைகளுக்கு இடையே குறைவான தீமையைத் தேர்ந்தெடுத்ததாக வேண்டிய நிலையில் உள்ளான்."[45]

ஒரு மாணவன் பள்ளிக்குத் தாமதமாக வருகிற நிலையில், அவன் பள்ளிக்குச் சென்றால் ஆசிரியர் ஏன் தாமதமாக வருகிறாய்? எனக் கேட்கும் கேள்விக்குப் பதில் அளிக்கவேண்டும். ஒருவேளை வீட்டிற்குத் திரும்பிச் செல்ல நினைத்தாலும் வீட்டில் பெற்றோர் திட்டுவார்கள் எனப் பயந்து மதில்மேல் பூனையாக இரண்டும் கெட்டான் நிலையில் இருப்பான். இவ்வாறு அவன் பள்ளிக்கும், வீட்டிற்கும் செல்லாமல் இடையில் நிற்கக்கூடிய சூழ்நிலைதான் விலகுதல் - விலகுதல் மனப்போராட்டம் என்கிறோம்.




இதனை மேற்கூறிய படம் விளக்குகிறது.

மேற்கூறிய மூன்று மனப்போராட்டங்களும் Three Categories of Conflicts சங்க அக இலக்கியங்களில் மிகுதியாகப் பயின்று வந்துள்ளன.

மேனாட்டின் உள இயலார் மனதை ஓர் பனிக்கட்டிப் பாறைக்கு (Ice berg) ஒப்பிட்டுள்ளனர். "இந்தப் பனிக்கட்டிப் பாறையின் பத்தில் ஒரு பங்கு மட்டுமே மிதந்து கொண்டிருக்கும். மீதமுள்ள ஒன்பது பங்கு நீரில் மூழ்கி இருக்கும். மேலே தோன்றுவதைக் கொண்டு 'ஓ! இவ்வளவு சிறிய பனிப்பாறைதானே' என்று எவரும் அதை அணுகமாட்டார்"[46] என குறிப்பிடுகின்றது சக்தி களஞ்சியம். இதனைப் போன்றே மனித உள்ளமும்

இவ்வளவுதான் என்று எண்ணமுடியாத பரந்துபட்ட நிலையைக் கொண்டிருக்கிறது என்றால் அது மிகையல்ல.

மனம் என்பதும் உள்ளம் என்பதும் ஒத்த பொருளையே கொண்டுள்ளன. இதனை, வின்சுலோவின் தமிழ் ஆங்கில அகராதி மனம் என்பதற்கு "நெஞ்சு, உள்ளம், எண்ணம், விருப்பம்"[47] என்று குறிக்கிறது (mind, heart, feeling, inclination of the mind).

நர்மதாவின் தமிழ் அகராதி உளம் என்பதற்கு "ஆன்மா, உட்பக்கம், மனம், மார்பகம்"[48] Soul, inside, mind, breast என்றும், உள்ளமனம் என்பதற்கு "உள்ளுணர்வு, அடிமனம் instinct, Subconscious mind எனவும், உணர்ச்சிக்கு- உடம்பில் மனதில் உண்டாகும் நிலையை அறிந்திடும் அனுபவம் எனவும் மன எழுச்சி, ஒன்றின் தன்மையைப் புரிந்திடும் மனப்பாங்கு, அழுத்தமான எண்ணம் feeling, Sensation, emotion, Sense of houmour, ferrour என்று பொருள் தருகிறது."[49]

மேலும் உணர்ச்சி வசப்படு என்பதற்கு "வலுவான மனநிலைக்கு ஆட்படுதல் to get mored, be overwhelmed with emotion"[50] என்று உளம், உள்மனம், உணர்ச்சி, உணர்ச்சி வசப்படு போன்றவற்றுக்கு விளக்கம் தருகிறது.

"ஒருவருடைய உணர்வு, எண்ணம் ஆகியவற்றிற்குக் காரணமாக அமைவது உள்ளம், விருப்பம். the reasoning faculty, mind, intention"[51] என்று மனம் என்பதற்கு நர்மதாவின் தமிழ் அகராதி விளக்கம் தருகிறது.

உள்ளம் என்பதற்கு "மனம்"[52] எனவும், உளம் என்பதற்கு "மனம்"[53] எனவும், மனம் என்பதற்கு "உள்ளம்"[54] எனவும் விளக்கம் தருகிறது பவானந்தர் தமிழ்ச் சொல்லகராதி.

கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி உள்ளம் என்பதற்கு "மனம்"[55] mind எனவும், உளம் என்பதற்கு "உள்ளம்"[56] எனவும், மனம் என்பதற்கு "ஒருவரின் எண்ணம், உணர்வு போன்றவற்றுக்குக் காரணமாக இருப்பிடமாக அமைவது உள்ளம்"[57] mind the reasoning faculty எனச் சுட்டுகிறது.

"உள்ளம், நெஞ்சு, இதயம், இருதயம், அகம், அந்தராத்மா"[58] என மனத்திற்குப் பொருள் கூறுகிறது தற்காலத் தமிழ்ச் சொற்களஞ்சியம்.

இவ்வாறு மனம் என்பதற்கும் உள்ளம் என்பதற்கும் ஒத்த (அ) ஒரே பொருளையே அகராதிகள் தருகின்றன.

மனம் மூன்று நிலைகளில் அமைந்துள்ளது. அவை, மேல்மனம் (Conscious), அடிமனம் (Un conscious), நடுமனம் (Sub conscious) எனப்படும். "நம்முடைய நினைவுக்கு வரக்கூடியவை எல்லாம் மேல்மனத்தில் பதிந்தவை. குழந்தைப் பருவத்தில் தோன்றிய கருத்துக்கள், ஆசாபாசங்கள், வெறிகள் இவை எல்லாம் அடிமனதில் புதைந்துகிடக்கின்றன. இவற்றோடு சமூகம் வெறுக்கின்ற பற்பல பாப எண்ணங்களும் அடிமனதில் புதைந்து கிடக்கின்றன. இந்த இருமன நிலைகளையும் கூட்டி வைப்பது நடுமனம்"[59] என்றுரைக்கிறது சக்தி களஞ்சியம். சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் உள்ளம் என்பதற்கு "நெஞ்சம்"[60] எனப் பொருள்தருகிறது.

தலைவனாக (அ) தலைவியாக (அ) பிறர் யாராக இருந்தாலும் அவர் மனத்தில் எழும் நிகழ்வுகள், எண்ணங்கள், உணர்வுகள் மேல்மனத்தில் பதிந்தவை என்பது மேற்கூறிய கருத்தால் புலனாகிறது. ஏனென்றால் தலைவன், தலைவியிடையே எழும் உணர்வுகள், கூற்றாளரிடம் எழும் உணர்வுகள் எல்லாம் மேல்மனத்தில் தோன்றியவை (அ) பதிந்தவையாக அமைந்துள்ளன.

## தொகுப்புரை

♦ உணர்ச்சி, உணர்வு என்ற இரண்டு சொற்களும் வேறுபாடின்றி ஒரே நிலையில் தொடக்ககாலத்தில் பயின்றுவந்துள்ளன.

♦ தொல்காப்பியம் உணர்வுகளையும் அவற்றை இலக்கியத்தில் பயின்றுவரும் முறைகளையும் பற்றிக் கூறுகின்றது.

♦ உணர்வுப் போராட்டங்கள் உள்ளம், உடலியல் தேவைகளைச் சார்ந்து அமைவன. இவை பெரும்பான்மை பாலுணர்வை அடிப்படையாகக் கொண்டு எழுகின்றன.

♦ உள்ளப் போராட்டம் என உளவியலார் கூறும் தொடரொடும் கருத்தொடும் ஒன்றி நிற்கும் சூழல்கள் பல சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளன.

♦ சங்க இலக்கியத்தில் உள்ளப் போராட்டத்தைக் குறிக்கும் தொடர்களும் சூழல்களும் உளவியல் நுட்பம் மிக்கனவாக அமைந்துள்ளன.

♦ அணுகுதல் - அணுகுதல் போராட்டம், அணுகுதல் - விலகுதல் போராட்டம், விலகுதல் - விலகுதல் போராட்டம் என போராட்டங்களை மூன்று வகைப்படுத்துகின்றனர். இவை மூன்றுமே சங்கப் பாடல்களில் பயின்றுவந்துள்ளன.

♦ மனம் என்பதும் உள்ளம் என்பதும் ஒரு பொருளையே தருகின்றதைப் பல அகராதிகள் நமக்கு எடுத்துக்காட்டியுள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. பாஞ்.இராமலிங்கம், குழந்தை உளவியல், ப.13
2. மேலது, ப.14
3. மேலது, ப.15
4. மேலது, ப.18
5. மேலது, பக்.18-19
6. பாஞ்.இராமலிங்கம், மானிட உளவியல், ப.14
7. மேலது, ப.14
8. தொல்.பொருள்.களவியல், நூ.1062
9. தொல்.பொருள்.நூ.114, இளம்.உரை, ப.238
10. தொல்.பொருள்.நூ.116, நச்.உரை, ப.145
11. தொல்.பொருள்.நூ.கள்.269, 271, இளம்.உரை, பக்.392-393
12. தொல்.பொருள்.நூ.271, இளம்.உரை, ப.393
13. தொல்.பொருள்.நூ.274, பேரா.உரை, ப.56
14. தொல்.பொருள்.நூ.505, இளம்.உரை, ப.537
15. தொல்.பொருள்.நூ.112, இளம்.உரை, ப.213
16. தொல்.பொருள்.நூ.114, நச்.உரை, ப.97
17. தொல்.பொருள்.நூ.49, பேரா.உரை, பக்.1-2
18. Morgan & King, Introduction to Psychology, P.275
19. பெ.திருஞானசம்பந்தன், இந்திய எழிற்கலை, ப.22
20. மேலது, ப.41
21. மேலது, ப.42
22. மேலது, ப.42
23. மேலது, ப.42

24. A.Berridale, Classical Sanskrit Literature, P.111

25. Rakesh Guptha, Psychological Studies in Rasa Benarus, P.119

26. உ.வே.சாமிநாத அய்யர் (ப.ஆ.), சிலப்பதிகாரம் (அடி.நல்.உரை), பக்.81-82

27. M.Carney Zandis and Majorie Bolles, A test Book of Abnormal Psychology, P.434

28. J.Loplanche and J.B. Pontalis, The Language of psycho - Analysis, P.360

29. தி.கு.இரவிச்சந்திரன், சிக்மண்ட் ஃப்ராய்ட் உளப்பகுப்பாய்வு அறிவியல், பக்.159-160

30. தா.ஏ.சண்முகம், உளநலவியல், ப.39

31. டி.ஈ.ஷண்முகம், உளப்போராட்டம், கலைக்களஞ்சியம் தொகுதி பத்து, ப.134

32. பெருங்கேழி நாய்கன்மகள் நக்கண்ணை, புறம்.85:3-4

33. பேரெயில் முறுவலார், புறம் 239:20-21

34. பெருங்கடுங்கோ, கலி.22:1-3

35. து.சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல், ப.16

36. ".......A Conflict is created by the existence of mutually exclusive drives or motives which can not be satisfied at the Same time " - Mani Bhushan Presad, Reactions to Threat, P.1

37. "...... Contlict evoke fealings of exasperations and frustration, because Satisfaction of one motive will lead to the frustration of the other " - ibid

38. தி.கு.இரவிச்சந்திரன், சிக்மண்ட் ஃப்ராய்ட் உளப்பகுப்பாய்வு அறிவியல், ப.160

39. "Lewin (1935) identified three different ways in which motives can come into conflict with one anuther" - ibid

40. James C. Coleman, Psychology and Effective Behavior, P.179 Mani Bhushan Prasad, Reactions to Threat, P.1

41. "As the name implies, double - approach conflicts involve Competion between two or more desireble alternatives" - James C.Coleman, Psycology and Effective Behavior, P.179

42. தா.ஏ.சண்முகம், உளநலவியல், ப.41

43. "In an approach - avoident Conflict there are Strong tendencies both to approach and to avoid the same goal" - Ibid

44. டி.ஈ.ஷண்முகம், உளப்போராட்டம், கலைக்களஞ்சியம் தொகுதி பத்து, ப.135

45. "In a double - avoident conflict we are caught" between the deril and deep blue sea" and must try to choose the lesser of two evils - James C.Coleman, Psychology and Effective Behavior, P.180

46. வ.விஜய்பாஸ்கரன், வை.கோ.அழகப்பன் (தொ.ஆ.), சக்தி களஞ்சியம் பாகம் - 1, ப.854

47. M.Winslow, A Comprehensive Tamil and English Dictionary, P.854

48. நர்மதாவின் தமிழ் அகராதி, ப.154

49. மேலது, ப.135

50. மேலது, ப.135

51. மேலது, ப.731

52. திவான் பகதூர் ச. பவானந்தம் பிள்ளை, பவானந்தர் தமிழ்ச்சொல்லகராதி, ப.82

53. மேலது, ப.81

54. மேலது, ப.382

55. கிரியாவின் தற்காலத் தமிழ்அகராதி, ப.155

56. மேலது, ப.156

57. மேலது, ப.156

58. ச.இராஜேந்திரன், தற்காலத் தமிழ்ச் சொற்களஞ்சியம், ப.312

59. வ.விஜய்பாஸ்கர், வை.கோ.அழகப்பன், சக்தி களஞ்சியம், பாகம் - 1, ப.257

60. இரா.சாரங்கபாணி, (ப.ஆ.), சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் தொகுதி-1, ப.391.

இயல் - 2

# தலைவன் கூற்றில் உள்ளப் போராட்டம்

சங்க அகப்பாடல்களை ஒருபாற் கூற்று நாடகப் பாடல்கள் என்பர். இக்கூற்றுக்களுக்குரியோர் பலராவர். மாந்தர்களின் கூற்று எனும் நிலையில் அவர்களின் உணர்வுகள் அடிப்படையாக அமைகின்றன. இவ்வுணர்வுகளின் வழி இம் மாந்தர்களின் உள்ளக் கிடக்கைகளைத் தெள்ளிதின் அறியமுடியும். புலம்பெயர்வு, பொருள்தேடல், போர் போன்ற காரணங்களால் தலைவியைப் பிரியும் தலைவனின் கூற்று அகப்பாடல்களின் வழி வெளிப்படுவனவற்றைக் கண்டறிவது இவ்வியலின் நோக்கமாகும்.

அகப்பாடல்களிலுள்ள உணர்வுப் போராட்டங்களைக் கூற்று அடிப்படையில் ஆராய்வது இன்றியமையாததாகும். சங்க இலக்கியங்கள் தொல்காப்பிய இலக்கணங்களைத் தழுவி அமைந்துள்ளன. சங்க இலக்கியத்துள் அமைந்துள்ள பாடல்கள் பல புலவர்களால் பல்வேறு நிலைகளில் பாடப்பட்டவையாகும். "கூற்று நிகழ்த்துதற்குரியோரைப் பன்னிருவர் எனப் பட்டியலிடுகிறது தொல்காப்பியம்."[1] இவர்களில் "களவில் கூற்று நிகழ்த்துவோர்க்குரியோராக பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி, தலைவன், தலைவி ஆகிய அறுவர் அமைகின்றனர்"[2] "கற்பில் கூற்றுக்குரியோராக மேற்கூரிய அறுவரோடு பாணன், கூத்தன், விறலி, பரத்தை, அறிவர், கண்டோர் ஆகியோர் விளங்குகின்றனர்"[3] இப்பன்னிருவருள் தலைவன், தலைவி, பரத்தை, நற்றாய், செவிலி ஆகிய ஐவரின் பாடல்களிடையே செறிவுடைய போராட்டக் களம் (Field Contlict) அமைந்துள்ளன.

தோழி உணர்வு நிலையில் இல்லாமல் அறிவு நிலையில் செயல்படுபவளாவாள். ஆகவே இவளின் கூற்றுப் பாடல்களில் பெரும்பான்மை உணர்வுப் போராட்டங்களைக் காணஇயலாது. செறிவார்ந்த உணர்வுகளைப் பிரதிபலிக்கும் கூற்றாளர்கள் ஐவரில் தலைவன் குறிப்பிடத்தக்கவன் ஆவான். இவன் கூற்றில் பரணர், ஔவையார் இவ்விரு புலவர்களுமே பாடல்களைப் பாடியுள்ளனர்.

## தலைவன் கூற்றுப் பாடல்கள்

தலைவனின் பண்பைத் தொல்காப்பியரும், இறையனாரும் முறையே

"பெருமையும் உரனும் ஆடுஉ மேன"[4]

"புகழும் கொடுமையும் கிழவோன் மேன"[5]

எனக் கூறியுள்ளார். இத்தன்மைகளையுடைய தலைவன் கூற்றுப் பாடல்கள் நற்றிணையில் ஐந்தும், குறுந்தொகையில் ஏழும், அகநானூற்றில் பன்னிரெண்டும் என இருபத்தி நான்கு பாடல்கள் அமைந்துள்ளன. இவற்றுள் இருபத்திரண்டு பாடல்களில் தலைவனின் கீழ்க்கண்ட உணர்வு நிலைகள் வெளிப்படுகின்றன. அவை,

1. ஆற்றாமை
2. ஏக்கம்
3. ஏமாற்றம்
4. கலக்கம்
5. நிகழ்ந்தது நினைத்தல்
6. வருத்தம்

என்பனவாகும். இவ்வுணர்வுகள் தலைவன் கூற்றில் செறிவார்ந்துள்ளன. ஆறு பாடல்களில் ஒன்றுக்கும் மேற்பட்ட உணர்வுகள் அமைந்துள்ளன.

## தனித்து வெளிப்படும் உணர்வுகள்

### ஆற்றாமை

*தலைவன் கூற்றில் அமைந்துள்ள பாடல்களில் (குறுந்.19, 29, 128 அகநா.152, 181) ஐந்து பாடல்களில் ஆற்றாமை என்ற உணர்வு தனித்து வெளிப்படுகிறது.*

*தலைவியின் ஊடலைத் தீர்க்க உரைத்த மொழிகள் பயனின்றிப் போகவே தலைவன் தன் நெஞ்சை நோக்கிக் கூறுவதை (குறுந்.19),*

*"எவ்வி இழந்த வறுமையர் பாணர்*
*பூ இல் வறுந்தலை போலப் புல்லென்று*
*இனைமதி வாழியர் நெஞ்சே! மனைமரத்து*
*எல்லுறும் மௌவல் நாறும்*
*பல்இருங் கூந்தல் யாரளோ நமக்கே?"[6]*

*என்ற பாடல் உணர்த்துகிறது.*

*நெஞ்சே! நீ வாழ்வாயாக. எவ்வி எனும் வள்ளல் இறந்தமையால் பாணர்கள் வறுமையுடையராயினர். அவர்களுடைய பொற்பூ அணியப் பெறாத வறிய தலையைப் போல நீயும் பொலிவிழந்து வருந்துவாயாக. மனைத் தோட்டத்திலுள்ள மரத்தின் மீது படர்ந்த ஒளியுடைய முல்லை மலரின் மணம் கமழும் பலவாகிய கரிய கூந்தலையுடைய இவள் நமக்கு எந்நிலையில் உறவுடையவளோ என தலைவனின் ஆற்றாமை உணர்வை பரணர் வெளிப்படுத்துகிறார்.*

*எவ்வி என்ற வள்ளல் இறந்தமையால் பாணர்கள் வறுமையுற்றனர். அப்பாணர்களின் பொலிவிழந்த தலைபோல நெஞ்சே, நீயும் உடல் மெலிந்து, உள்ளம் தளர்ந்து வருந்துக எனத் தலைவன் கூறுகிறான்.*

தலைவியின் ஊடல் நீங்கி அவளைப் பெறாமைக்கு எவ்வியின் இழப்பையும், அதனால் வருந்துகின்ற பாணர்களின் நிலைக்குத் தன் நெஞ்சின் நிலையையும் கூறி ஆற்றாமையுறுகிறான். இப்பாடலில் எவ்வி மன்னன் பற்றிய வரலாற்றுச் செய்தியும் இடம்பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது.

தலைவன் இரவுக்குறி வேண்டிய பொழுது தோழி அதனை மறுத்து விரைந்து தலைவியை மணந்துகொள்ளுமாறு வேண்டுகிறாள். இந்நிலையில் தலைவன் தன் ஆற்றாமையை நெஞ்சிடம் சொல்லி (குறுந்.29) புலம்புகிறான். இதனை ஔவையார்,

"நல்உரை இகழ்ந்து புல் உரை தாய்ப்
பெயல் நீர்க்கு ஏற்ற பசுங்கலம் போல
உள்ளம் தாங்கா வெள்ளம் நீந்தி
அரிது அவாவுற்றனை - நெஞ்சே! நன்றும்
பெரிதால் அம்ம நின்பூசல், உயர் கோட்டு
மகவுடை மந்தி போல
அகன் உளத் தழீஇக் கேட்குநர்ப் பெறினே"[7]

எனக் கூறுகின்றார்.

மழைநீரை ஏற்றுக்கொண்ட பசுமட்கலம் கரையாமல் தாங்க முயல்வதைப் போன்றது தன்னுடைய முயற்சி. பசுமட்கலம் அழிதல் ஒருதலை ஆதலின் காமத்தால் நன்மைதரும் சொற்கள் நீங்கிப், புல்லிய பழிச்சொற்கள் பரவி தன் நெஞ்சு அழிதலும் ஒருதலை என்று தலைவன் வருந்துகின்றான். ஏற இயலாத மரக்கிளைகளில் ஏறும் மந்தி தன்னுடைய குட்டியைக் கீழே விழாதவாறு அணைத்துச் செல்லும் செயல் போல என்னுடைய குறைகளைக் கேட்டு அதனை நீக்கப் பெறுவாரைப் பெறின்

நன்று. அவ்வாறு நமக்கு வாய்க்கப்பெறவில்லையே என்று நெஞ்சை நோக்கிக் கூறுகிறான். வரைந்து கொள்ளாது களவு நீட்டிக்க விரும்பிய தலைவன் அது தடைபடும்போது தன்னுடைய ஆற்றாமையை வெளிப்படுத்துகிறான்.

அல்லற்குறிப்பட்டு மீளும் தலைமகன் தன் நெஞ்சினை நோக்கிக் (குறுந்.128) கூறுவதை,

"குண கடற் திரையது பறைதபு நாரை
திண்தேர்ப் பொறையன் தொண்டி முன்துறை
அயிரை ஆர் இரைக்கு அணவந்தா அங்குச்
சேயள் அரியோட் படர்தி
நோயை - நெஞ்சே! - நோய்ப் பாலோயே"[8]

என்ற பாடலின் வழி பரணர் புலப்படுத்துகிறார்.

கிழக்குக் கடல் அலைகளின் அருகிலுள்ள முதுமையால் சிறகுகள் நீங்கப்பெற்ற நாரை, வலிமை வாய்ந்த தேரையுடைய சேரனது கடற்கரையில் அமைந்துள்ள தொண்டி என்னும் கடல் துறையில் கிடைக்கும் அயிரை மீனாகிய உணவினை உண்ணும் ஆசையால் தலையை மேலே தூக்கினாற்போல, நமக்கு நெடுந்தொலைவில் உள்ளவளும் பெறுவதற்கு அரியவளுமாகிய தலைவியை அடைவதற்கு நீ நினைத்தாய். அதனால் நீ வருத்தத்தை அடைந்தாய் நீ அடைந்தது மட்டுமல்லாது என்னையும் வருத்தத்திற்கு உள்ளாக்கினாய் என்று தன் ஆற்றாமையைத் தலைவன் புலப்படுத்துகிறான்.

முதுமையால் பறக்க இயலாத நாரை காமத்தால் மெலிந்த தலைவனின் உள்ளத்திற்கும், அயிரை உணங்கலாகிய இரை தலைவனின்

பிரிதலால் மெலிந்த தலைவியின் நலத்திற்கும் உவமையாகக் கூறப்பட்டுள்ளன. குணகடல் பகுதியில் வாழும் சிறகிழந்த முதுநாரை மேற்குக் கடலில் பொறையனது தொண்டியில் கிடைக்கும் அயிரை மீனை உண்ணும் ஆசையைப் போல தலைவியின் நலனை நுகர விரும்பிய நெஞ்சின் நிலை உள்ளதாக தலைவன் தன் ஆற்றாமை உணர்வை வெளிப்படுத்துகிறான். இங்குச் சேரன் பற்றிய வரலாற்றுக் குறிப்பும் (காலம்) இடம்பெற்றுள்ளது.

களவொழுக்கத்தில் தோழியின் துணையோடு இரவுக்குறியிடத்துத் தலைவியைக் கண்டு கூடிக்களித்துப் பிரிந்த தலைவன், அவள் பிரிவைத் தாங்க ஆற்றாது வருந்தி தன்னெஞ்சிற்குக் குறிப்பிடுவதை,

"தலையாற்று நிலைஇய சேயுயர் பிறங்கல்
வேய்அமைக் கண்இடை புரைஇச்
சேய ஆயினும் நடுங்குதுயர் தருமே"[9]

என்ற அடிகளில் பரணர் சுட்டுகிறார். நெஞ்சே! மயில் தோகை போன்ற கூந்தலும், தோளும் மணம் கமழ்ந்து இன்பம் தருவனவை அல்லாது மலையுச்சியிலுள்ள மூங்கிலின் இடையிலுள்ள கணுப்போன்று நமக்கு அடைவதற்கு அரிய துன்பத்தையும் செய்கின்றன! எனத் தலைவன் தன் நெஞ்சை நோக்கித் தன் ஆற்றாமை உணர்வை வெளிப்படுத்துகிறான். தலைவியின் ஊர் நெடுந்தொலைவில் இருப்பதால் தமக்குத் துன்பம் தருவதாகக் குறிப்பிடுகிறான்.

வினைமேற் செல்லும் தலைவன் இடைவழியில் தலைவியை நினைத்து மீளக் கருதிய தன் நெஞ்சை இடித்துரைக்கும் நிலையில் (அகநா.181) ஆற்றாமை உணர்வு வெளிப்படுகிறது. இதனை,

*"துன்அருங் கானமும் துணிதல் ஆற்றாய்*

*பின்நின்று பெயரச் சூழ்ந்தனை ஆயின்*

*என்நிலை உரைமோ நெஞ்சே"*[10]

*என்ற அடிகளில் பரணர் குறிப்பிடுகிறார். நெஞ்சே! அணுகுதற்குரிய காட்டைக் கடக்கவும் துணிகின்றாய் இல்லை. பின்னே நின்று மீண்டும் நம் தலைவி பால் செல்லவும் எண்ணிவிட்டாய். அவ்வாறு நினைந்துவிட்டாய் என்றால், எம் தலைவி தங்கியிருக்கும் மணற்குன்று புகார் நாட்டிலுள்ளது. அக்குன்றத்தை அடைந்து எம் நிலையினை அவளிடம் உரைப்பாயாக என்று தனது ஆற்றாமை உணர்வை நெஞ்சிடம் புலப்படுத்துகிறான்.*

## ஏக்கம்

*தலைவன் கூற்றில் அமைந்துள்ள மூன்று பாடல்களில் (குறுந்.120, 165, 199) ஏக்கம் என்ற உணர்வு தனித்து வெளிப்படுகிறது. இதனைப் பரணர்,*

*"இல்லோன் இன்பம் காமுற்றா அங்கு*

*அரிது வேட்டனையால் - நெஞ்சே! காதலி*

*நல்லள் ஆகுதல் அறிந்தாங்கு*

*அரியள் ஆகுதல் அறியாதோயே"*[11]

*என்ற பாடலில் உணர்த்துகிறார்.*

*நெஞ்சே! பொருள் இல்லாதவன் அப்பொருளால் பெறலாகும் இன்பத்தை விரும்புவதுபோல, நீ பெறுவதற்கு அரிய ஒன்றை விரும்புகின்றாய். உன்னால் விரும்பப்பட்டவள் எனக்கு நல்ல இன்பத்தை வழங்குபவள் என்பதை அறிந்ததைப் போல எனக்கு எய்துவதற்கு அரியவள் என்பதை நீ உணரவில்லை என்று குறிப்பிடுகிறான்.*

“குறுந்தொகையில் பரணர் பாடிய 16 பாடல்களில் இப்பாடலில் தான் காமம் பற்றிய குறிப்பு வருகிறது. அதுவும் பொருளில்லாதவன் பொருளை விரும்பினது போன்று தலைவியிடம் இன்பம் துய்த்தலை விரும்பியது. இதனை முதல் இரண்டு அடிகளில் தலைவன் தன் நெஞ்சுக்கு வருந்திக் கூறுவதாக அமைந்துள்ளது.”[12]

இயற்கைப் புணர்ச்சியில் தலைவியைப் புணர்ந்த தலைவன் தலைவிப் பிரிந்தவுடன் கலங்கிய நிலையில் தனது ஏக்கத்தை நெஞ்சிடம் சொல்லி புலம்புகின்றான். இங்கு ஏக்கம் என்ற உணர்வு வெளிப்படுகிறது.

தலைவன் பாங்கியின் துணையால் தலைவியை அடைய விரும்பிக் குறையிரந்த போது அவள் மறுத்தாள். தலைவன் காமத்தால் நாண் அழிந்து விருப்பம் மிகுந்த தன் நெஞ்சை நோக்கித் தன் ஏக்கத்தைக் கூறுவதாய் (குறுந்.165) இப்பாடல் அமைந்துள்ளது. இதனைப் பரணர்,

“மகிழ்ந்ததன் தலையும் நற உண்டாங்கு
விழைந்ததன் தலையும் நீ வெய்துற்றனை
இருங்கரை நின்ற உப்புஒய் சகடம்
பெரும்பெயல் தலைய வீஇந்தாங்கு, இவள்
இரும்பல் கூந்தல், இயல் அணி கண்டே”[13]

என்ற பாடலில் புலப்படுத்துகிறார்.

கள் உண்பார் உணர்விழந்த போதிலும் மீண்டும் அதனையே உண்ணும் வேட்கையுடையராவர். எதனால் அறிவழிந்தார்களோ அதனையே மீண்டும் பெறவேண்டும் என்ற வேட்கை ஒன்றே அவர்கள் உள்ளத்தில் காணப்படும். பிற எவையும் தோன்றா. தலைவி மீது கொண்ட காமத்தால் நாணழிந்த தலைவனுக்கு, அவள் மீது கொண்ட காமம் ஒன்றே

தோன்றுவதாயிற்று. பிற எவையும் தோன்றவில்லை என உவமைகள் குறிப்பிட்டுள்ளார்.

சகடத்தில் ஏற்றப்பட்ட உப்பு, பெருமழையில் சிறுகச் சிறுகக் கரைந்து அழிந்து பின் இல்லாமல் போகும். பெருமழையில் வண்டியும் அடித்துச் செல்லப்படும். அதுபோல நாணத்தோடு அதனைத் தாங்கிய தன் உயிரும் அழிவதாயிற்று எனத் தலைவன் நெஞ்சிடம் குறிப்பிடுகின்றான்.

வண்டி நிற்க உப்பு அழிவது போல உடல் நிற்க உள்ளம் அழிவதாகத் தன் நெஞ்சிடம் தனது ஏக்கத்தை உணர்வாக வெளிப்படுத்துகிறான்.

தலைவி அலர் எழுந்தவழி இயற்செறிக்கப்பட்டமையால் தலைவனால் அவளைக் காண இயலவில்லை. காம வேட்கை மிக்க தன் நெஞ்சை நோக்கி இவ்வுலகில் தலைவியை அடைதல் இல்லையாயினும் மறுமை உலகில் அவளைப் பெறுதல் உறுதி என கூறும் முகமாக இப்பாடல் (குறுந்.199) அமைந்துள்ளது. இதனைப் பரணர்,

"பெறுவது இயையாது ஆயினும், உறுவது ஒன்று
உண்டுமன் வாழிய - நெஞ்சே!.....
................ ................ ................
................ ................ ................
இன்றை அன்ன நட்பின் இந்நோய்
இருமுறை என ஒன்று இன்றி
மறுமை உலகத்து மன்னுதல் பெறினே"[14]

என்ற அடிகளில் குறிப்பிடுகிறார்.

திண்ணிய தேரினையும் வள்ளன்மையுடைய கையினையும் உடைய ஓரி என்பவனுடைய கொல்லி மலையைத் தடவி வீசுகின்ற கோடைக் காற்றின் மணம் கமழும் நெறித்த கூந்தலையும், வகிர்த்த முன்மயிரினையும் உடைய மாமை நிறம் கொண்ட தலைவியிடம் இப்பொழுது நட்பினால் இக்காம நோய் நீங்கும் உபாயம் ஒன்றில்லாமல் மறுபிறப்பையுடைய அவ்வுலகத்தும் எனக்கு அவளுடன் நட்பு நிலைபெறுதல் கூடும். ஆதலால் தலைவியை இவ்வுலகில் அடைவது இல்லையாயினும் மறுமை உலகில் அவளைப் பெறுதல் உறுதி. ஆதலால் நெஞ்சே நீ! அவள் நினைப்பில் வாழ்வாய் என்று தனது உள்ள ஏக்கத்தைத் தலைவன் குறிப்பிடுகிறான். உடலோடு கூடிய நோய் அழிந்தாலும் உயிரோடு இயைந்த நட்பு அழியாது தொடரும். தலைவியை இப்போது அடையாவிட்டாலும் மறுமையில் அடைவேன் என தன் ஏக்க உணர்வை நெஞ்சிடம் வெளிப்படுத்துகிறான்.

## ஏமாற்றம்

தலைவன் கூற்றில் (அகநா.258) ஒரு பாடலில் மட்டும் ஏமாற்றம் என்னும் உணர்வு தனித்து வெளிப்படுகிறது. இரவுக்குறியின்கண் தலைவன் செய்வதாகக் கூறியிருந்த குறிகள், அவன் வரும் முன்னரே இயற்கையில் நிகழ, அதனைக் கேட்டுவந்த தலைவியும் தோழியும் தலைவனைக் காணாது இல்லம் திரும்பினர். பின்னர் வந்த தலைவன் குறிகள் எழுப்ப; அவை முன்னர் கேட்ட இயற்கைக் குறிகள் என்றெண்ணி இருவரும் வராது போகவே; ஏமாற்றம் அடைந்த தலைவன் தன் நெஞ்சிடம் சொல்லிப் புலம்புவதை,

"நன்னன் உதியன் அருங்கடிப் பாழி
தொல்முதிர் வேளிர் ஓம்பினர் வைத்த
பொன்னினும் அருமைநற்கு அறிந்தும், அன்னோள்

துன்னலம் மாதோ எனினும் அஃதுஒல்லாய்
தண்மழை தவழும் தாழ்நீர் நனந்தலைக்
கடுங்காற்று எடுக்கும் நெடும்பெருங் குன்றத்து
மாய இருள்அளை மாய்கல் போல
மாய்கதில் வாழிய, நெஞ்சே"[15]

என்ற அடிகளில் பரணர் புலப்படுத்தகிறார்.

நெஞ்சே! நீ வாழ்க. நன்னன் உதியன் பாழி என்னும் இடத்தில் வேளிர் சேர்த்து வைத்த பொன்னைக் காட்டிலும் அடைதற்கு அறியவள் தலைவி என்று கூறியும் நீ ஏற்றுக்கொள்ளவில்லை, பாம்பு இரைதேடித் திரியும் இரவுப் பொழுதில் தலைவியை நான் பெறாமை கண்டார்க்கு நகை தோன்றும்படியாயிற்று. அரிய துயரத்தை நான் அடையச் செய்தாய், இருளையுடைய குகையில் ஒளியின்றி மறையும் மணியைப்போல நீ மறைந்தொழிக! என்று தலைவியைக் காணாது ஏமாற்றமடைந்த நிலையில் தன் நெஞ்சைச் சுட்டி தனது ஏமாற்ற உணர்வை வெளிப்படுத்துகிறான்.

## நிகழ்ந்தது நினைத்தல்

இறந்த காலத்தில் நடந்த செயல்களை நிகழ்காலத்தில் நினைத்துப்பார்த்தல் நிகழ்ந்தது நினைத்தலாகும். இதனைத் தொல்காப்பியர் "நிகழ்ந்தது நினைத்தல் ஏதுவுமாகும்"[16] என்பர். இது 'நிகழ்ந்தது கூறல் எனவும் கூறப்படுகிறது. இவ்விரண்டும் 'பின்னோக்கம்' என்று உளவியலாரால் சுட்டப்படுகிறது.

"வாழ்வில் விரும்பத்தகாத நிகழ்ச்சிகள் நிகழும்போதும், தம் விருப்பங்கள் முறிவுற்று உள்ளப்போராட்டம் மிகும்போதும் உள்ளம் தன்னையறியாமல் இறந்தகாலத்தின் இயல்பிற்குச் சென்றுவிடுகின்றது.

இத்தகைய நிலையைப் 'பின்னோக்கம்' (Regression) என்பர். வளர்ந்த வயதில் இடையூறுகள் அல்லது போராட்டங்கள் எழும் சூழ்நிலையில் முன்னர் நிறைவளித்ததும், பின் காலப்போக்கில் கைவிடப்பட்டதுமான நிலைகளுக்குத் திரும்புதலாகிய நடத்தையை அகம் நிறுவிக்கொள்கிறது"[17] எனப் பிரிட்டானியக் கலைக்களஞ்சியம் விளக்குகிறது. மனமுறிவுற்ற நிலையிலும், மனத்தில் போராட்டங்கள், துன்ப உணர்வுகள் எழுந்த நிலையிலும் நிகழ்ந்தது நினைத்தல் வெளிப்படும் என்ற கருத்து ஈண்டு புலனாகிறது.

தலைவன் கூற்றில் அமைந்துள்ள ஐந்து பாடல்களில் (அகநா.142, 162, 198, 208, 262) நிகழ்ந்தது நினைத்தல் எனும் உணர்வு வெளிப்படுகிறது.

நம் காதலைப் பலரும் அறிவர் என்று அஞ்சித் தலைவி நள்ளிரவில் யாரும் அறியாமல் மெல்ல வந்து இனிய மொழியைப் பேசி நம்மைத் தழுவினாள். அந்த இன்பத்தை நினைத்து நீ மகிழ்ந்திருப்பாயாக எனத் தலைவன் தலைவியுடன் இன்பமடைந்து செல்லும்போது தன் நெஞ்சிடம் கூறுவதாக இப்பாடல் (அகநா.142) அமைந்துள்ளது. இதனைப் பரணர்,

"பலர்அறி வுறுதல் அஞ்சிப் பைப்பய
நீர்த்திரள் கடுக்கும் மாசுஇல் வெள்ளிச்
சூர்ப்புறு கோல்வளை செறித்த முன்கைக்
குறைஅறல் அன்ன இரும்பல் கூந்தல்
இடன்இல் சிறுபுறத்து இழையொடு துயல்வரத்
கடல்மீன் துஞ்சும் நள்ளென் யாமத்து
உருவுகிளர் ஏர்வினைப் பொலிந்த பாவை
இயல்கற் றன்ன ஒதுக்கினள் வந்து

பெயல்அலைக் கலங்கிய மலைப் பூங்கோதை
இயல்எறி பொன்னின் கொங்குசோர்பு உறைப்ப
தொடிக்கண் வடுக்கொள மயங்கினள்
வடிப்புஉறு நரம்பில் தீவிய மொழிந்தே"[18]

என்ற அடிகளில் சுட்டுகிறார். "ஒரு குறிப்பிட்ட உள்ளப்போராட்டம் மிக்கச் சூழலைச் சமாளிப்பதற்காக முன்னிருந்த நிலைக்குத் திரும்புதல் பின்னோக்கம் என்ற உளவியல் கருத்து ஈண்டு ஒப்பு நோக்கற்பாலது."[19]

நீரைத் திரட்டியது போன்று வளைவு, அகலம் இல்லாது விளங்கம் சிறிய முதுகு, கரிய மணற்போன்ற நள் என்ற ஒலியை உடைய நடு இரவு, பாவையின் நடையைப் போன்று மெல்ல மெல்ல நடந்துவந்தாள். தலைவி அணிந்த மாலையினின்று தேன்துளி சிந்தியது. இது கொல்லன் உலைக்களத்தில் தெளிக்கும் பொன் துகள் போல் விளங்கியது. மீட்டப்படும் யாழ் நரம்பினின்று எழும்பும்படியான இனிய ஓசை போன்று இனிய சொற்களைச் சொல்லி என்னைத் தழுவிக்கொண்டாள் என தலைவன் தன் நெஞ்சிடம் குறிப்பிடுகின்றான்.

தலைவன் இரவுக்குறி வந்து தலைவியைக் கூடிக் களித்துத் திரும்புகின்ற வேளையில்; முன்பு தான் அவளுடன் பெற்ற இன்பத்தை நினைத்துப்பார்க்கும்போது 'நிகழ்ந்தது நினைத்தல்' எனும் உணர்வு மேலிடுகிறது.

பெறுவதற்கு அரியவளாயிருந்தும் மழை பெய்யும் இரவில் குறியிடத்தே வந்து தன் துன்பம் கெடச் செய்த தலைவியின் பண்பினை இரவுக்குறியில் அவளைக் கண்டு பின் தன் ஊர் செல்லும் முன்னர் நிகழ்ந்த நிகழ்வைத் தன் நெஞ்சிடம் சொல்லி (அகநா.162) இன்புறுவதைப் பரணர்,

"அறல்என அவிர்வரும் கூந்தல் மலர்என
வாள் முகத்து அலமரும் மாஇதழ் மழைக்கண்
முகைநிரைத் தன்ன மாவீழ் வெண்பல்
நகைமாண்டு இலங்கும் நலம்கெழு துவர்வாய்
கொல் அமை விழுத்தொடி விளங்க வீசி
கால்உறு தளிரின் நடுங்கி, ஆனது
நோய்அசா வீட முயங்கினள் வாய்மொழி"[20]

என்ற அடிகளில் சுட்டுவர்.

கருமணலைப் போன்ற கூந்தலையும், நீலமலர் போன்ற ஒளிபொருந்திய முகத்தில் சுழலும் கண்ணையும், வண்டுகள் விரும்பும் முல்லை அரும்பை வரிசையாய் வைத்தது போன்ற பல்லினையும், புன்னகையால் சிறந்து விளங்கும் நன்மையுடைய பவளம் போன்ற வாயையும் உடையவளாய், வளையல் விளங்கக் கையை வீசி, காற்றில் அசையும் தளிரைப் போன்று நடுங்கிவந்தாள் தலைவி. நம் நோயான வருத்தம் நீங்க இடைவிடாது என்னைத் தழுவிக்கொண்டாள் என இரவுக்குறியில் இன்பமுடன் இருந்ததைத் தன் ஊருக்குத் திரும்பும் நிலையில் நினைத்துப்பார்க்கும் சூழலில் நிகழ்ந்தது நினைத்தல் உணர்வு வெளிப்படுவதை உணரமுடிகிறது.

என் நெஞ்சே! நாம் சொன்ன மொழியை நம்பி இரவில் மழையில் ஒதுங்கி மயில் போன்று வந்து நம்மைத் தழுவித் திரும்புபவள் மானிட மகள் அல்லள். அவள் சுனையிடத்தே உறையும் சூரர மகளே என்று இரவுக்குறியில் தன்னுடன் இன்பம் அடைந்திருந்து மீண்டும் வீடு புகும் தலைவியின் பண்பை நினைத்து (அகநா.198) நெஞ்சிடம் கூறும் வேளையில் நிகழ்ந்தது நினைத்தல் எனும் உணர்வு வெளிப்படுகிறது. இதனை,

"கூறுவம் கொல்லோ? கூறலம் கொல்? எனக்
கரந்த காமம் கைந்நிறுக் கல்லாது
நயத்து நாம் விட்ட நல்மொழி நம்பி
அரைநாள் யாமத்து விழுமழை கரந்து
கார் விரை கமழும் கூந்தல், தூவினை
................ ................ ................
................ ................ ................
அம் சிலம்பு ஒடுக்கி அஞ்சினள் வந்து
துஞ்சுஊர் யாமத்து முயங்கினள்"[21]

என்ற அடிகளில் பரணர் காட்டுகிறார். நம்முள் மறைந்துள்ள காமத்தை இவளுக்குச் சொல்லலாமா அல்லது சொல்லாமல் விடலாமா என்று நினைத்து, முடிவில் அடக்க இயலாது நாம் வெளியிட்ட இனிய மொழியை விரும்பி, அரை இரவில் பெய்யும் மிக்க மழையில் மறைந்து கார்காலத்து மணம் கமழும் கூந்தலுடன், தூய நுட்பமான நூலால் ஆன ஆடையால் உடம்பைப் போர்த்தியவளாய் மலையில் மடப்பத்தை உடைய மயிலைப் போன்று வண்டுகள் பின் தொடர்ந்து வந்து மொய்க்க மலர்களைச் சூடி, வில்லினைப் போன்று தொழில் அமைந்த குடச்சூல் ஆகிய சிலம்பு ஒலியானது அடக்கி நடந்து அச்சத்துடன் வருவாள். ஊர் துயிலும் இரவிலே நம்மைத் தழுவி மீண்டு செல்வாள் தலைவி என முன்னர் நிகழ்ந்த நிகழ்வைத் தன் மனக்கண் முன்கொண்டுவந்து காட்சிப்படிமமாக நெஞ்சிடம் தலைவன் கூறுகிறான்.

தான் செல்லும் கடிய பாதையில் இன்ப நிகழ்வை நினைத்துக்கொண்டே செல்வதிலிருந்து 'நிகழ்ந்தது நினைத்தல்' எனும் உணர்வு தலைவனின் மனத்தில் இயல்பாகவே வெளிப்படுகிறது.

காமம் உயிரியல் சார்ந்த இயல்புணர்வு ஆகும். நாணம் சமுதாயம் கற்பித்து வலியுறுத்தியமையால் விளைந்த மரபுணர்வாகும். எனவே நாணம் பண்பாட்டுத் தொடர்புடையது. இங்கே நிகழும் போராட்டம் உயிரியல் இயற்கைக்கும் சமுதாயவியல் பண்பாட்டிற்கும் இடையே நிகழ்வதாகும். "உளவியல் அறிஞர் ஃபிராய்டு இத்தகைய போராட்டங்களைத் தவிர்க்க இயலாதன எனக் கருதுகிறார்."[22]

"காமமா, நாணமா எனத் தயங்கும் நேரத்தில் முடிவெடுக்க இயலாமையால் தவிப்பு நேர்கின்றது. இத்தவிப்பால் தயக்கமும், ஊசலாட்டமும், துயரமும் தோன்றுகின்றன. நெஞ்சம் தலைவனிடம் எய்தியதோ காமம் செப்பியதோ என்னும் வினாக்களில் அத்தயக்கம் உள்ளது. தயக்கத்தில் நேர்ந்த துயரத்தில் நெஞ்சம் "நிறையில் நெஞ்சம்" ஆகிறது. காமத்திற்கும் தயக்கத்திற்கும் இடைப்பட்டுத் தடுமாறும் தலைவன் ஒருவன் தன் அவாவினைத் தலைவியிடம் "கூறுவங் கொல்லோ கூறலங் கொல்" எனப் போராடுவதிலிருந்து அணுகுதல் - அணுகுதல் போராட்டம் நிகழ்வதை உணரமுடிகிறது."[23]

உளவியல் அறிஞர் ஒருவர், "உள்ளப் போராட்டத்தையும் மன முறிவையும் வேறுபடுத்திக்காணுதல் இயல்வதாயினும் உள்ளமுறிவு பற்றி அச்சமே போராட்டத்தைக் கடுமையாக்கி உள்ள இறுக்கத்தை விளைவித்துவிடுகிறது எனத் தெளிவுபடுத்துகிறார்."[24]

"பெருமளவில் சில எளிய அணுகுதல் - அணுகுதல் போராட்ட வகைகள் நேரம், இடம், ஆற்றல், சொந்தத் திறமைகள் ஆகியவை ஒரு வரையறையான எல்லைக்குட்பட்டவைகளாக உள்ளமையால் தோன்றுவன என்பர்"[25]

புணர்ந்து நீங்கும் தலைவன் தன் நெஞ்சிற்குச் சொல்லிய நிலையில் நிகழ்ந்தது நினைத்தல்' எனும் உணர்வு (அகநா.208) வெளிப்படுவதை,

"........................ மிகுபெயல்
உப்புச் சிறை நில்லா வெள்ளம் போல
நாணுவரை நில்லாக் காமம் நண்ணி
நல்கினள், வாழியர், வந்தே"[26]

என்ற அடிகளில் பரணர் சுட்டுகிறார்.

எண்ணற்ற பழங்களைக் கொண்ட பலா மரங்கள் நிறைந்த பயன்மிக்க கொல்லி மலையில் கார்காலத்தில் பூக்கும் மலர் போல் மணம் கமழும் அழகும் மென்மையும் உடைய கூந்தலையுடைய மாமை நிறத் தலைவி உப்பினால் கட்டப்பட்ட அணையில் தடைபட்டு நில்லாது அவ்வணையை உடைத்துக்கொண்டு பெருகிச் செல்லும் பெருமழை வெள்ளம் போல நாணத்தின் எல்லையில் கட்டுப்பட்டு நில்லாது காமம் கடும்புனல் பெருகப் பெற்றவளாய் இரவில் வந்து இன்பம் தந்து நம் துன்பம் களைந்து அருள் செய்தாள். அவள் வாழ்வாளாக என்று குறிப்பிடுகின்றான்.

உப்பால் கட்டப்பட்ட அணையை உடைத்துக்கொண்டு வரும் வெள்ளம் போல நாணம் என்ற எல்லையில் கட்டுப்பட்டு நில்லாது காமம் என்ற கடும்புனலாய் வந்து என்னை அருள் செய்தாள் என தலைவியின் செயலை நினைத்துப் போற்றுகிறான். தலைவன் தனித்து இல்லம் திரும்பும் வழியில் முன்னர் நிகழ்ந்த நிகழ்வை நினைந்துகொண்டே செல்லும்போது நிகழ்ந்தது நினைத்தல் எனும் உள்ள உணர்வு வெளிப்படுவது ஈண்டு புலனாகும்.

இரவுக்குறியின் கண் தலைவியின் நலன் நுகர்ந்து மீளுகின்ற தலைவன் புணர்ச்சி இன்பத்தால் பெரிதும் மகிழ்ந்து தன் நெஞ்சிற்குச் சொல்லிய நிலையில் (அகநா.262) நிகழ்ந்தது நினைத்தல் எனும் உணர்வு வெளிப்படுவதை,

"இன்உயிர் செகுப்பக் கண்டுசினம் மாறிய
அன்னி மிஞலி போல, மெய்மலிந்து
ஆனா உவகையேம் ஆயினெம் பூமலிந்து
அருவி ஆர்க்கும் அயம்திகழ் சிலம்பின்
நுண்பல் துவலை புதல்மிசை நனைக்கும்
வண்டுபடு நறவின் வண்மகிழ்ப் பேகன்
கொண்டல் மாமலை நாறி
அம்தீம் கிளவி வந்த மாறே"[27]

என்ற அடிகளில் பரணர் வெளிப்படுத்துகிறார்.

பேகனின் மாமலை போன்ற இனிய சொல்லையுடைய தலைவி வந்து என்னைப் புணர்ந்தாள். தன் தந்தையினது கண்ணைப் பிடுங்கிய கோசரைக் கலத்தில் உணவை உண்ணாமலும் தூய உடை உடுக்காமலும் இருந்து திதியன் மூலமாக அவனைக் கொன்று பெருமகிழ்வு அடைந்த மிஞிலி போன்று நான் தலைவியின் மூலமாகப் பெருமகிழ்வு அடைந்தேன் என்று தலைவன் தலைவியைப் புணர்ந்தபோது பெற்ற மகிழ்வை நினைத்துப் பார்க்கும்போது நிகழ்ந்தது நினைத்தல் எனும் உள்ள உணர்வைத் தலைவன் வெளிப்படுத்துகிறான்.

## வருத்தம்

தலைவன் கூற்றுப் பாடல்களில் (நற்.6, 265, 371) மூன்றில் வருத்தம் என்ற உள்ளுணர்வு வெளிப்படுகிறது. இரவுக்குறி வேண்டிச் சென்ற

தலைவன் தன்னை உடன்படுத்துமாறு யாம் வந்திருக்கின்றோம் என்று தலைவியிடத்து ஒருவர் சென்று கூறினால் யாரோ என்று என்னாது; யான் வந்துள்ளேன் என மகிழ்ந்து, களிப்பில் மயங்கவாள். அவ்வாறு கூறுவோரை நான் பெறவில்லையே என்று தலைவியைக் காணாத நிலையில் (நற்.6) தனது வருத்தத்தைத் தன் நெஞ்சிடம் சொல்லிப் புலம்புகின்றான். பரணர் இதனை,

"நீர் வளர் ஆம்பல் தூம்புடைத் திரள் கால்
நார் உரித்தன்ன மதன் இல் மாமை
குவளை அன்ன ஏந்து எழில் மழைக் கண்,
திதலை அல்குல் பெருந்தோள் குறுமகட்கு
எய்தச் சென்று செப்புகர்ப் பெறினே
இவர் யார்? என்குவள் அல்லள் ; முனாஅது
................ ................ ................
................ ................ ................
இரும் பல் ஒலிவரும் கூந்தல்
பெரும் பேதுருவள், யாம் வந்தனம் எனவே"[28]

என்னும் பாடலின் மூலம் பதிவுசெய்துள்ளார்.

நீரில் வளர்கின்ற அல்லியின் உள்ளே துளையுடைய திரண்ட தண்டினை நாருரித்தாற்போன்ற பசலை படர்ந்த மாநிறம்; குவளை போன்ற அழகு தங்கப்பெற்ற குளிர்ந்த கண்; திதலையுடைய அல்குல்; பெரியதோள் ஆகியவற்றைக் கொண்ட இளம் பெண்ணாகிய தலைவியிடம் நெருங்கச் சென்று எம் வருகையை நினையாமல் சொல்வார் இருப்பின் அவரை நோக்கி இவர் யார்? என்று அவள் கேட்கமாட்டாள். மணம் வீசுவதும் கருமையாய்த் திரண்டு தழைத்ததுமாகிய கூந்தலையுடைய

தலைவி யான் வந்துள்ளேன் என்று தெரிந்தால் மகிழ்ச்சியால் பெரிதும் மயக்கம் அடைவாள். அப்படிச் சென்று கூறுவாரை நான் பெறவில்லையே என வருந்துகிறான்.

பகற்குறிக்கண் கண்டு தழுவி நீங்கிய தலைவன் இரவுக்குறியிடத்தில் தலைவி வரவில்லையே என வருந்தி தன் வரவைத் தலைவிக்கு அறிவிப்பார் இல்லையே என வருத்தம் அடைந்து, தன் நெஞ்சிடம் கூறும் நிலையில் இவ்வுள்ள உணர்வு வெளிப்படுகிறது.

தலைவன் இவனுற்ற குறையாதோ என்று தோழி ஆராயும் காலம் வரப்பொறாதவனாய் வருந்தித் தன் நெஞ்சிடம் நெஞ்சமே! இவளுடைய தலைவியான மெல்லிய கூந்தலாள் நம்மிடம் அன்புடையள். எனவே, வருந்தவேண்டாம் என உரைக்கும் நிலையில் (நற்.265) வருத்தம் என்ற உணர்வு வெளிப்படுகிறது. இதனை,

"கலி மயில் கலாவத்து அன்ன, இவள்
ஒலி மென் கூந்தல் நம் வயினானே"[29]

என்ற அடியில் பரணர் உணர்த்துகிறார்.

மழைபோன்ற கொடையையும் கள்ளுணவையுமுடைய ஓரியின் கொல்லி மலையில் செருக்கிய மயிலின் தோகையைப் போலவும் தழைத்த மெல்லிய கூந்தலையுமுடையவள் நம் தலைவி ஆவாள். அவள் நம்மிடம் அன்பு உடையவள். எனவே, நெஞ்சே நீ! தலைவியை நினைத்து வருந்தவேண்டாம் என தன் வருத்த உணர்வை நெஞ்சிடம் சொல்லிப் புலம்புகின்றான்.

வினைமுடித்து மீளுகின்ற தலைவன் தேர்ப்பாகனிடம் பாக! மழை மேகம் தொடங்கிற்று. நம் காதலி இதனைக் கண்டு அழத்தொடங்கியிருப்பாள். ஆயர் குழலோசை அவள் அழுகையை மிகுவிக்கும். எனவே, விரைந்து தேரைச் செலுத்து என தன் வருத்தத்தை (நற்.371) வெளிப்படுத்துகிறான். இதனை,

"காயாங் குன்றத்துக் கொன்றை போல
மா மலை விடர் அகம் விளங்க மின்னி
மாயோள் இருந்த தேஎம் நோக்கி
வியல் இரு விசும்பு அகம் புதையப் பாஅய்
பெயல் தொடங்கினவே, பெய்யா வானம்
நிழல் திகழ் சுடர்த் தொடி ஞெகிழ ஏங்கி
அழல் தொடங்கினாளே ஆயிழை; அதன் எதிர்
குழல் தொடங்கினரே கோவலர்
தழங்கு குரல் உருமின் கங்குலானே"[30]

என்ற பாடல் உணர்த்தும்.

வானம் நம் தலைவி இருக்குமிடமாகச் சென்று மழைபெய்து இது கார்காலம் எனக் காட்டியது. இக்காலத்தில் வருவதாகக் கூறிய தலைவன் வரக் காணாததால் தலைவி அழத் தொடங்கினாள். தலைவி வருத்தமுற்றிருக்கும் காலத்தில் அதை உணராது கோவலர் குழல் இசைக்கத் தொடங்கினர். மழை நான் இருக்கும் பகுதியில் மட்டும் பெய்யுமானால் கவலையில்லை. ஆனால் தலைவி நிலத்திலும் இதுவரை பெய்யாது இருந்த மேகம் இப்போது பெய்யத் தொடங்கியது என வருந்துகின்றான். நெகிழ்ந்த வளை செறிக்கவும், ஒழுகிய கண்ணீரைத் துடைக்கவும் தலைவன் வரவு வேண்டும். இந்நிலையில் தனிமைத் துயரைக் கோவலர் குழல் இசையும்

மிகுதியாக்கியது. இருண்ட மலைப்பகுதியில் மின்னுவது காயாங் குன்றத்துக் கொன்றை போல இருப்பதாகக் குறிப்பிடுகின்றான். காயா இருண்ட நிறத்திற்கும் கொன்றை மஞ்சள் நிறத்திற்கும் உவமை கூறப்பட்டுள்ளது.

கார்காலம் தலைவியின் துன்பத்தை அதிகரிக்கச் செய்யும். எனவே, பாகனே தேரை விரைந்து செலுத்துக என்று தனது வருத்தத்தைப் பாகனிடம் சொல்லிப் புலம்புகின்றான். மேற்கண்ட பாடல்களில் தலைவனின் உள்ள உணர்வுகள் தனித்துப் புலப்படுகின்றன.

## ஒன்றிற்கும் மேற்பட்ட உணர்வுகள் வெளிப்படுதல்

தலைவன் கூற்றுப் பாடல்கள் ஆறில் ஒன்றிற்கும் மேற்பட்ட உணர்வுகள் கலந்து வெளிப்படுகின்றன.

## ஆற்றாமை + ஏக்கம்

தலைவன் தலைவியின் தமரிடம் வரைவுவேண்டி நின்றான். வரைவு மறுக்கப்படவே வருந்திய தன் நெஞ்சிடம் நம் காதலி நம்மருகில் இருக்குமாறு கிடைப்பாளோ என்று தலைவியின் சகோதரர்கள் வரைவு மறுத்தலால் உண்டான ஆற்றாமையும் அதனால் ஏற்பட்ட ஏக்கமும் தலைவன் கூற்றின் மூலமாக அவன் உள்ள உணர்வைக் கூறுகின்றன.

“நிலம் தாழ் மருங்கின் தெண் கடல் மேய்ந்த
விலங்கு மென் தூவிச் செங் கால் அன்னம்
பொன் படு நெடுங் கோட்டு இமயத்து உச்சி
வான் அரமகளிர்க்கு மேவல் ஆகும்
வளராப் பார்ப்பிற்கு அலகு இரை ஒய்யும்

அசைவு இல் நோன் பறைபோல, செல வர

வருந்தினை - வாழி என் உள்ளம்! ஒரு நாள்

காதலி உழையளாக

குணக்குத் தோன்று வெள்ளியின் எமக்குமார் வருமே?"[31]

என இங்குப் பரணர் இரு உணர்வுகளைச் சுட்டுகிறார்.

அன்னம் பார்ப்புகட்கு இரைதேடி அலையும். அதன் பார்ப்புகள் இமயமலையில் இருப்பதால் இரை தேடிக்கொண்டு வந்து ஊட்டும் செயலால் அன்னமானது வருந்தும். அது போலத் தலைவிபால் காதலெனும் இரை கொண்டு என்நெஞ்சு அலைந்தலைந்து மெலிந்தது. அவள் என் அருகில் இருப்பின் இத்துயர் இல்லை என்று கூறுகிறான். அன்னம் வளராத பார்ப்புகட்கு இரையூட்டும் நிகழ்வு வழித் தலைவி காதல் நோக்கம் முதிர்ந்து தன்னைத் தேடிவரும் நிலையில் அவள் இல்லை என்பதைத் தலைவன் உணர்த்துகின்றான். தலைவியின் தமர் வரைவு மறுத்தமையால் அவள் அருகில் வரவும் கூடுமோ என தான் தலைவியை அடையமுடியாததை ஆற்றாமையுடன் கூடிய ஏக்கத்துடன் வெளிப்படுத்துகின்றான்.

அன்னம் இரைதேடுவது போல நானும் பொருள் தேடும் முயற்சியில் இறங்கித் துன்புறுவோன் என வருத்தத்தை ஆற்றாமையாக உணர்த்துகிறான். தலைவி தன் அருகில் வரக்கூடுமோ என்பதில் வரவேண்டும் என்ற அவனது உள்ளத்தின் ஏக்கம் என்ற உணர்வு வெளிப்படுவதை உணரலாம்.

## ஏமாற்றம் + ஏக்கம்

இரவுக்குறியில் தலைவன் செல்வதற்கு முன்பே தலைவி அக்குறியிடத்து வந்தாள். அவனைக் காணாமல் தன் இல்லம் திரும்பினாள். பின் தலைவன் குறியிடத்து வந்தான். சில குறிகளை எழுப்ப அவற்றைக்

கேட்ட தலைவி அவை முன்னர் கேட்ட இயற்கை ஒலிகள் என நினைத்துத் தலைவனைக் காண வரவில்லை. இதனை எதிர்பார்க்காத தலைவன் ஏமாற்றம் அடைகின்றான். கூடவே தலைவியைக் காணவில்லை என்ற ஏக்கமும் சேர்ந்துகொள்கிறது. இதனைக் கூறும் நிலையில் (அகநா.62) இப்பாடல் அமைந்துள்ளது. இதனைப் பரணர்,

"அயத்து வளர் பைஞ்சாய் முருந்தின் அன்ன
நகைப் பொலிந்து இலங்கும் எயிறு கெழு துவர்வாய்
அகத்து அரும்பிய முலையள், பணைத் தோள்
மாத்தாட் குவளை மலர் பிணைத்தன்ன
................ ................ ................
................ ................ ................
நெடுஞ் சுழி நீத்தம் மண்ணுநள் போல
நடுங்கு அஞர் தீர முயங்கி நெருநல்
ஆகம் அடைதந்தோளே"[32]

என்ற அடிகளில் உணர்த்துகிறார்.

ஓரிமன்னனின் கொல்லிப் பாவை போன்றவள். பவளம் போன்ற வாயினள்; மார்பில் பொருந்திய கொங்கையள், பருத்த தோளினள். அவளுடன் நான் நிகழ்த்திய புணர்ச்சி பேயும் அறியாதது. இன்று ஊர் பெண்டிர் அலர் தூற்றியதால் அப்புணர்ச்சிக்கும் இடையூறு ஏற்பட்டது. நேற்று அவள் காவிரி ஆற்றில் கிடப்பவள் போல என் மார்பில் தழுவிக்கிடந்தாள். அது இன்று அல்லற்குறிப் பட்டதனால் தடைபட்டது. அவள் வரவில்லை. என்ன செய்வது என்று ஏமாற்றத்துடன் கூடிய ஏக்கத்தை வெளிப்படுத்துகிறான்.

நாம் காலந்தாழ்ந்து வந்ததால் அவள் அல்லற் குறிப்பட்டுச் சென்றதே அவள் வராமைக்குக் காரணம் என தலைவியைக் காணாத ஏமாற்றத்தையும் அவளுடன் இன்பம் துய்க்கமுடியவில்லையே என்ற ஏக்கத்தையும் இத்தலைவன் நெஞ்சிடம் கூறும் நிலையில் தலைவனின் உள்ள உணர்வைப் பரணர் பதிவுசெய்துள்ளார்.

## ஏமாற்றம் + ஆற்றாமை

இரவுக்குறியில் தான் செய்வதாகக் கூறிச்சென்ற குறிகள் இயற்கையில் நிகழ்ந்தமையால் தலைவியும் தோழியும் குறியிடத்து வந்து மீண்டு இல்லம் திரும்பினர். பின்வந்த தலைவன் குறிகள் பல நிகழ்த்தியும் தலைவி வராததைக் கண்டு தன் நெஞ்சிடம் கூறும் நிலையில் (அகநா.258) ஏமாற்றம், ஆற்றாமை என்ற இரு உணர்வுகள் வெளிப்படுகிறது. இதனை,

"நன்னன் உதியன் அருங்கடிப் பாழி
தொல்முதிர் வேளிர் ஓம்பினர் வைத்த
பொன்னினும் அருமைநற்கு அறிந்தும் அன்னோள்
துன்னலம் மாதோ எனினும் அஃது ஒல்லாய்
தண்மழை தவழும் தாழ்நீர் நனந்தலைக்
கடுங்காற்று எடுக்கும் நெடும்பெருங் குன்றத்து
மாய இருள் அளை மாய்கல் போல
மாய்கதில் வாழிய நெஞ்சே!"[33]

என்ற அடிகளில் பரணர் சுட்டுகிறார்.

என் நெஞ்சே! நீ வாழ்க! நன்னன் உதியன் பாழி என்னும் இடத்தில் வேளிர் சேர்த்து வைத்த பொன்னைக் காட்டிலும் அடைதற்கு அரியவள் தலைவி என்று கூறியும் நீ ஏற்றுக்கொள்ளவில்லை. பாம்பு இரை தேடித்

திரியும் இரவுப் பொழுதில் தலைவியைப் பெறாமல் கண்டார்க்கு நகைதோன்றும் படியாயிற்று. அரிய துயரத்தை நான் அடையச் செய்தாய். இருளையுடைய குகையில் ஒளியின்றி மறையும் மணியைப்போல் நீ மறைந்தொழிக! என்று தலைவன் தன் நெஞ்சை நோக்கிச் சொன்னான்.

குறி நிகழ்த்தியும் தலைவி வராததைக் கண்ட தலைவன் ஏமாற்றமடைகின்றான். மேலும் தலைவியுடன் இன்பம் துய்க்க முடியாமையை மனத்தில் கொண்டு தனது ஆற்றாமையை வெளிப்படுத்துகிறான்.

இவ்வாறு ஏமாற்றம், ஏமாற்றத்தால் உண்டான ஆற்றாமை என இவ்விரண்டு உள்ள உணர்வுகளையும் பரணர் தலைவன் கூற்றில் படைத்துள்ளார்.

## ஏமாற்றம் + கலக்கம்

தலைவன் கூற்றில் இடம்பெற்ற பாடல்களில் மூன்றில் (அகநா.212, 322, 372) ஏமாற்றம், கலக்கம் என்ற இவ்விரு உள்ள உணர்வுகளும் காணப்படுகின்றன.

அல்லல் குறிப்பட்டு நீங்கும் தலைவன் தன்னெஞ்சினை நெருங்கிச் சொல்லிய நிலையில் ஏமாற்றம், கலக்கம் என்ற இரு உணர்வுகளும் (அகநா.212) வெளித்தோன்றுகின்றன. இதனை,

"ஓங்குதிரைப் பௌவம் நீங்க ஒட்டிய
நீர்மாண் எஃகம் நிறத்துச்சென்று அழுத்தக்
கூர்மதன் அழியரோ நெஞ்சே! ஆனாது
எளியள் அல்லோள் கருதி
விளியா எவ்வம் தலைத்தந் தோயே"[34]

என்ற அடிகளில் பரணர் புலப்படுத்துகிறார்.

தலைவியானவள் அழகு பொருந்தியவள், திரண்ட கூந்தலை உடையவள், கூரிய பற்களையுடைய சிவந்த வாயினள், செவ்வழிப் பண்ணின் இசையைப்போன்று இனிய சொற்களைப் பேசுபவள். இத்தன்மைகளையுடைய பெண்ணை விரும்பிப் பெரிய ஆண்யானைக் கூட்டம் படிந்து கலக்கிய நீரைப் போன்று நான் கலக்கம் அடைந்தபோது 'இவள் பெறுவதற்கு அரியவள்' என்று நீ எண்ணவில்லை. நாள்தோறும் இடுக்கண் பொருந்திய அரிய அறநெறியைக் கடந்துவந்து என்னைத் துன்பத்துக்குள் ஆக்கினாய்.

இடைவிடாமல் காண்பதற்கு எளியவள் அல்லாத ஒருத்தியை எண்ணிக்கெடாத துன்பத்தை என்னிடத்துக்கொணர்ந்துவிட்டாய். இத்தகைய நீ கடலைப் பிறக்கிட்டு ஓடச்செய்த செங்குட்டுவனின் வேல் நின்மார்பில் பாய; உன்னுடைய செருக்கு அழிவதாக என தலைவன் தன் நெஞ்சைப் பார்த்துக் கூறுகின்றான்.

தலைவன் குறி நிகழ்த்தியும் தலைவியைக் காணாத நிலையில் ஏமாற்றத்தையும், நெஞ்சைப் பழித்துக் கூறும்போது ஏமாற்றத்தால் உண்டான கலக்கத்தையும் தலைவன் கூற்றின் வழி பரணர் வெளிப்படுத்துகிறார். இதனை,

"வயங்க வெயில் ஞெமியப் பாஅய் மின்னு வசிபு
மயங்கு துளி பொழிந்த பானாட் கங்குல்
ஆராக் காமம் அடூஉ நின்று அலைப்ப
இறு வரை வீழ்நரின் நடுங்கி தெறுவர்
பாம்பு எறி கோலின் தமிழை வைகி
தேம்புதி கொல்லோ? - நெஞ்சே!"[35]

என்ற பாடல் அடிகளில் உணரலாம். இங்குக் கதிரவனின் ஒளியானது மறைந்திட; மேகம் வானத்தில் பரவுகிறது. மின்னல் பிளந்திட்ட மிக்க மழையைப் பெய்த நள்ளிரவில் காமம் வருத்தி அலைத்திட மலை உச்சியினின்று கீழே விழுந்து இறப்பவர் போல் அச்சம் ஏற்பட நடுங்கிக் கோலால் அடிக்கப்பட்ட பாம்பைப் போன்று வேறே துணையில்லாமல் நெஞ்சே வாட்டம் அடைவாயோ என்றுரைக்கின்றான். "பரணர் பாடலில் ஆராக்காமம் என்று 'காமத்தின் வேட்கை' கூறப்பட்டுள்ளதாக செ.சாரதாம்பாள் தன்னுடைய பெண்ணிய உளப்பகுப்பாய்வும் பெண் எழுத்தும் என்ற நூலில் குறிப்பிடுவார்."[36]

ஆனால் ஔவையார் பாடல்களில் தலைவிக் கூற்றுக்களாக வரும் மெய்ம்மொழி காமம், வான் தோய்வற்றே காமம், உள்ளின் உள்ளம் வேமே என்று காமத்தின் மிகுதியைச் சொல்லும் இடங்களில் காமத்தினால் எழுந்த ஆழ்மன வருத்தம் விஞ்சி நிற்பதாகக் குறிப்பிடுகிறார்.

இங்குத் தலைவியைக் காணாத ஏமாற்றம் என்ற உணர்வு புலப்படுகிறது. அடிபட்ட பாம்பு செயலற்றுக்கிடப்பதைப் போல நெஞ்சே நீயும் செயலற்றுக் கிடப்பாயோ? என்பதில் தலைவனின் கலக்க உணர்வையும் புலப்படுத்துகிறார் ஆசிரியர். மற்றுமொரு பாடலில் இதே உணர்வு (அகநா.372) வெளிப்படுகிறது.

"................... வாழி, என் நெஞ்சே! - வேந்தர்
கோண் தணி எயிலின் காப்புச் சிறந்து
ஈண்டு அருங்கரையள், நம் அணங்கியோளே"[37]

என்ற அடிகளில் என் நெஞ்சே வாழ்க! எய்தற்கரிய தலைவியின் பண்புநினைந்து வருந்தினோம். ஆனாலும் அதைக் கைவிடுதற்குப்

பொருந்தாய். ஏறியும் இறங்கியும் ஆடும் கயிற்றைப் போல் செல்கையாலும் வருகையாலும் வருந்தினாய். மணியை இழந்த நாகம் போன்று நீ வாடினாய். தலைவி காவல் மிக்க மதில் போன்று காவலைத் தாண்டிப் பெறுவதற்கு அரியவளாய் உள்ளாள் என வருத்தப்படுகின்றான்.

தலைவியைக் காணாத நிலையில் அவளைப் பெறுவதற்கு அரியவள் என்று தலைவன் ஏமாற்றமடைகின்றான். தலைவியை எளிதில் காவலைக் கடந்து பெறமுடியாது என கலக்கமடைந்த நிலையில் நெஞ்சிடம் சொல்லிப் புலம்புகின்றான். இவ்வாறு மூன்று பாடல்களில் இவ்வுணர்வானது இணைந்து வெளிப்படுகிறது.

ஔவையார் தலைவன் கூற்றுப் பாடல்களாக நற்றிணையில் ஒன்றும், குறுந்தொகையில் இரண்டும் என மூன்று பாடல்களைப் பாடியுள்ளார். பரணர் நற்றிணையில் நான்கும் குறுந்தொகையில் ஐந்தும் அகநானூற்றில் பனிரெண்டுமாக மொத்தம் இருபத்தியொரு ஒன்று பாடல்களைப் பாடியுள்ளனர்.

இப்பாடல்களில் ஆற்றாமை என்ற உணர்வு அதிகளவாக ஏழு பாடல்களில் இடம்பெற்று தலவனின் உணர்வை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது. இவ்ஏழு பாடல்களில் ஆறு பாடல்கள் பரணர் பாடியவை என்பது குறிப்பிடத்தக்கது.

களவை நீட்டிக்க விரும்பிய தலைவன்; அவனது எண்ணம் நிறைவேறாது தடைபட்ட நிலையில் தலைவியுடன் இன்பம் துய்க்க இயலவில்லை. இந்நிலையில் தலைவன் அதனைப் பொருக்கமுடியாமல் தனது ஆற்றாமையை வெளிப்படுத்துகிறான். இதுவே இவ்வுணர்வு அதிகம் தோன்றுவதற்குக் காரணமாக அமைகின்றது.

தலைவன் காதலில் வயப்பட்டிருந்த போது ஆற்றாமை, ஏக்கம், ஏமாற்றம், நிகழ்ந்தது நினைத்தல் ஆகிய உணர்வுகள் மிகுந்து காணப்படுகின்றன. இவற்றிற்குக் காரணம் களவுக் காலத்தில் தலைவனின் எண்ணமெல்லாம் தலைவியுடன் இன்பம் துய்க்கவேண்டும் என்ற காம உணர்வு தடைபடும்பொழுது இவ்வுணர்வுகள் அதிகம் மேலிடுகின்றன என்பது இதன் முடிவாகும்.

தலைவன் கூற்றில் பெரும்பான்மையான பாடல்கள் பாடிய பரணர் ஓர் ஆணின் மனஉணர்வுகளைத் தெள்ளிதின் வெளிப்படுத்தியிருக்கிறார்.

ஔவையின் இரண்டு பாடல்களில் ஆற்றாமையும் வருத்தமும் வெளிப்படுகின்றன. இதில் ஆற்றாமை உணர்வால் இரவுக்குறி நீட்டிக்க விரும்பிய பொழுது; தோழி மறுத்து விரைந்து மணம் செய்துகொள்ளுமாறு வேண்டுகிறாள். இங்குத் தனது விருப்பமானது தடைபடும்போது ஆற்றாமையைத் தன் நெஞ்சிடம் உரைக்கின்றான்.

மற்றொன்று தான் திரும்பி வரும் காலம் தொடங்கியதைக் கண்டு தலைவி வருந்துவாள், அதனால் பாகனே விரைவில் விரைந்து தேரைச் செலுத்துக என வேண்டும் பொழுது அவனின் வருத்தம் புலப்படுகிறது.

இங்கு ஔவையார் தலைவனின் உணர்வைத் தலைவியின் செயலோடு பொருத்திக் காட்டியிருப்பது புலப்படுகிறது. தலைவியின் நிலையைத் தலைவன் மூலமாக வெளிப்படுத்துகிறார்.

தலைவன் கூற்றில் இன்பத்தினைவிட பிரிவும், வருத்தமும், ஏக்கமுமே அதிக அளவில் அவனின் உணர்வுகளாக வெளிப்படுகின்றன.

பரணர், ஔவையார் பாடல்கள்ள நோக்கும்பொழுது தலவன் கூற்றில் பரணரே அதிகப்பாடல்களைப் பாடியுள்ளார். அவர் ஓர் ஆணின் உள்ள உணர்வையே அதிகமாகப் பதிவுசெய்துள்ளார்.

காதல் வயப்படும் ஆணின் உள்ளப்போராட்டத்தைப் பதிவு செய்வதன் நோக்கம், எந்தச் சூழலில், எந்த நிலையில் அவனது மனமானது அதிகம் பாதிப்புக்குள்ளாகிறது என்பதைக் கண்டறிவதற்காகும்.

ஆண் கூற்று நிலையில் பார்க்கும்பொழுது ஆணுக்கேயுரிய மனப்பாதிப்புகள் அவன் மனத்தில் ஏற்படும் எண்ணங்கள் உளப்போராட்டம் ஆகியவற்றின் அடிப்படையில் வெளிப்படுவதைக் காணமுடிகிறது.

## தொகுப்புரை

♦ பரணர், ஔவையார் பாடிய அகப்பாடல்களில் தலைவன் கூற்றுக்குரிய பாடல்கள் மட்டும் இருபத்தி நான்காகும்.

♦ திணை அடிப்படையில் குறிஞ்சியில் பத்தொன்பது, முல்லையில் இரண்டு, மருதத்தில் ஒன்று, நெய்தலில் ஒன்று, பாலையில் ஒன்று என அமைந்துள்ளன.

♦ இவ்இருபத்திநான்கு பாடல்களில் இருபத்திரண்டில் மட்டும் தலைவனுக்குரிய உள்ள உணர்வுகள் வெளிப்படுகின்றன.

♦ செறிவார்ந்த உணர்வுகளைப் பிரதிபலிக்கும் கூற்றாளர் ஐவரில் தலைவன் குறிப்பிடத்தக்கவன்.

- தலைவன் கூற்றில் ஆற்றாமை, ஏக்கம், ஏமாற்றம், கலக்கம், நிகழ்ந்தது நினைத்தல், வருத்தம் என ஆறு உள்ள உணர்வுகள் தனித்தும், ஒன்றிற்கு மேற்பட்ட நிலையில் இணைந்தும் அமைந்துள்ளன.

- தலைவியின் ஊடலைத் தீர்க்க உரைத்த மொழிகள் பயனின்றி போன நிலையிலும், இரவுக்குறி வேண்டிய பொழுது அதனை மறுத்தபோதும், இரவுக்குறி சென்று தலைவியைக் காணாது திரும்பிய நிலையிலும், இரவுக்குறியில் தலைவியுடன் கூடி இன்பம் துய்த்துப் பின் பிரிந்த நிலையிலும் அப்பிரிவைத் தாங்காது துன்பமடைந்த நிலையிலும், பொருள் தேடிச்சென்ற தலைவன் வழியில் தலைவியை நினைத்த நெஞ்சை இடித்துரைத்த நிலையிலும் ஆற்றாமை என்ற உள்ள உணர்வு இருப்பது புலப்படுகிறது.

- இயற்கைப் புணர்ச்சியில் தலைவியைப் புணர்ந்த தலைவன் தலைவியைப் பிரிந்தவுடன் கலங்கிய நிலையிலும், தலைவியை அடைய விரும்பிய தலைவன் அது நிகழாமல்போகவே, காமத்தால் நாண் இழந்து விருப்பம் மிகுந்த தன் நெஞ்சுக்குக் கூறும் நிலையிலும், உப்பு ஏற்றப்பட்ட வண்டி எவ்வாறு பெருமழையில் கரைந்து இறுதியில் வண்டி நீரில் இழுத்துச்செல்லப்படுவதுபோல நாணத்தோடு காதலை (காமம்) தாங்கிய என் உயிரும் அழியும் என உவமையுடன் கூறுகின்றான். தலைவி அலர் எழுந்தவழி இற்செறிக்கப்பட்டமையால் அவளைக் காணமுயலும் காம வேட்கை மிக்க தன் நெஞ்சிடம் இவ்வுலகில் தலைவியை அடையவில்லையாயினும் மறுமை உலகில் அவளை அடைவேன் என்று கூறும் நிலையிலும் ஏக்கம் என்ற உள்ளுணர்வு தின்னிதின் புலப்படுகிறது.

- இரவுக்குறியில் தலைவன் செய்வதாகக் கூறியிருந்த குறிகள் இயற்கையில் நிகழ்ந்தமையால் தலைவி அவ்விடம் வந்து அவனைக் காணாது இல்லம்

திரும்புகின்றாள். பின் வந்த தலைவன் குறிகள் பல நிகழ்த்தியும் தலைவியைக் காணாத நிலையில் அவனின் ஏமாற்றம் என்ற உணர்வு வெளிப்படுகிறது.

- இறந்த காலத்தில் நிகழ்ந்த செயல்களை நிகழ்காலத்தில் நினைத்துப் பார்த்தல் நிகழ்ந்தது நினைத்தலாகும். இதனைப் பின்னோக்கம் என்றும் கூறுவர். இரவுக்குறியில் தலைவியின் நலனை நுகர்ந்த தலைவன் புணர்ச்சியின் இன்பத்தால் பெரிதும் மகிழ்ந்து தலைவியின் பண்பைப் பாராட்டிய நிலையில் ஐந்து பாடல்களில் இவ்வுணர்வைத் தன் கூற்றில் புலப்படுத்துகிறான்.

- இங்குத் தலைவியின் பண்பைக் குறிக்க உப்பால் கட்டப்பட்ட அணையை உடைத்துக்கொண்டு வரும் வெள்ளம்போல நாணம் என்ற எல்லையில் கட்டுப்பட்டு நில்லாது காமம் என்ற கடும் புனலாய் வந்து எனக்கு அருள் செய்தாள் என்ற உவமையின் மூலம் புலப்படுத்துகிறார்.

- தான் இரவுக்குறி வந்துள்ளதைத் தலைவிக்கு அறிவிப்பவர் யாரும் இல்லை என்று கூறும் நிலையிலும், இவன் உற்ற குறையாது என தோழி ஆராயும் வரை பொருத்திருக்காது வருந்தும் நிலையிலும் வருத்தம் ஏற்படுகிறது. பொருள் தேடி ஊர் திரும்புகின்ற தலைவன் வரும் வழியில் மேகமானது மழையைப் பொழிய இம்மழை தனது தலைவி நிலத்திலும் பெய்து அவள் என்னை நினைத்து அழத் தொடங்குவாள்; அவளை ஆறுதல் படுத்த யாரும் இல்லை. எனவே, பாகனே தேரை விரைந்து செலுத்து என தலைவியின் துன்பத்தை நினைத்து வருந்தும் நிலையிலும் வருத்தம் என்ற உணர்வு மேலோங்கியிருக்கிறது.

♦ பதினாறு பாடல்களில் ஆற்றாமை, ஏக்கம், நிகழ்ந்தது நினைத்தல், வருத்தம் என்ற நான்கு உணர்வுகள் தனித்து வெளிப்படுகின்றன.

♦ தலைவியின் தமரிடம் வரைவு வேண்ட அது தடைபடும் நிலையில், ஆற்றாமை, ஏக்கம் என்ற உணர்வுகளும், அல்லற்குறிபட்டு மீளும் தலைவன் தான் தாமதமே தலைவி வராமைக்குக் காரணம் எனக் கூறும் நிலையில் ஏமாற்றம், ஏக்கம்; ஏமாற்றம், ஆற்றாமை என்ற உணர்வுகளும், அல்லற் குறிபட்டு மீளும் தலைவன் கூறும் நிலையில் ஏமாற்றம், கலக்கம் என்ற உணர்வுகளும் மூன்று பாடல்களிலும் காணமுடிகிறது.

♦ ஆறு பாடல்களில் ஆற்றாமை + ஏக்கம், ஏமாற்றம் + ஏக்கம், ஏமாற்றம் + ஆற்றாமை, ஏமாற்றம் + கலக்கம் என்ற ஒன்றிற்கும் மேற்பட்ட உணர்வுகள் தோன்றுகின்றன.

♦ தலைவன் கூற்றில் உள்ள அனைத்துப் பாடல்களும் தலைவன் தன் நெஞ்சிடம் கூற்றுநிகழ்த்துவதாக அமைந்துள்ளது இங்கு நோக்கத்தக்கது. குறிஞ்சித்திணையில் அதிகப் பாடல்கள் இடம்பெற்றிருப்பதும் சுட்டத்தக்கது.

♦ பரணர், ஔவையார் இருவரில் பரணரே அதிகத் தலைவன் கூற்றுப் பாடல்களைப் பாடி தலைவனின் உள்ளக் கிடக்கையை உள்ள உணர்வை தெள்ளிதின் புலப்படுத்தியிருக்கிறார்.

♦ எவ்வி, சேரன், பேகன், ஓரி, நன்னன், வேளிர், திதியன், மிஞீலி போன்ற அக்கால மன்னர்களின் சிறப்பியல்புகள் மற்றும் வரலாற்றுக் கூறுகள் இங்கு சிறப்புற வெளிப்பட்டுள்ளன.

♦ தொண்டி, புகார், உதியன் பாழி, ஓரியூர் கொல்லி, காவிரி போன்ற இடங்களின் பெயர்களையும், தலைவி குடச்சூழ் எனும் அணிகலன் அணிந்திருந்தாள் என்பதில் அக்காலப் பழக்கவழக்கங்களையும் நன்கு அறியமுடிகின்றது.

## சான்றெண் விளக்கம்

1. *தொல்.பொருள்.நூ.கள்.490, 492*

2. *தொல்.பொருள்.நூ.490*

3. *தொல்.பொருள்.நூ.491*

4. *தொல்.பொருள். நூ.95*

5. *இறையனார் களவியல் உரை, ப.86*

6. *குறுந்.19*

7. *குறுந்.29*

8. *குறுந்.128*

9. *அகம்.152:22-24*

10. *அகம்.181:1-3*

11. *குறுந்.120*

12. *செ.சாரதாம்பாள், பெண்ணிய உளப்பகுப்பாய்வும் பெண் எழுத்தும், ப.44*

13. *குறுந்.165*

14. *குறுந்.199*

15. *அகம்.258:1-8*

16. *தொல்.989*

17. Regresscon - "When dangers of conflicts arise at one of the latter stages of development the ego can constitute a return to earlier stages and abondoned forms of gratification belonging to them"-Anna freud, Defense - mechanism Encylopedia Britannica, Vol.7, P.171

18. *அகம்.142:15-26*

19. Regression is a return either to previous stage of functioning earlier points of firation to deal purposively a specific conflicting situation" - Mani Bhushan Prasad, reactions to Threat, P.6

20. அகம்.162:10-16

21. அகம்.198:1-11

22. து.சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல், ப.14

23. மேலது, ப.18

24. மேலது, ப.29

25. மேலது, ப.30

26. அகம்.208:18-21

27. அகம்.262:11-18

28. நற்.6

29. நற்.265:8-9

30. நற்.371

31. நற்.356

32. அகம்.62:11-12

33. அகம்.258:1-8

34. அகம்.212:19-23

35. அகம்.322:1-6

36. சே.சாரதாம்பாள், பெண்ணிய உளப்பகுப்பாய்வும் பெண் எழுத்தும், ப.44

37. அகம்.372:14-16.

இயல் - 3

# தலைவி கூற்றில் உள்ளப் போராட்டம்

இலக்கியங்கள் அவ்வக் காலச்சமுதாயப் பண்பாட்டு (Social Culture) நிலைகளைப் பிரதிபலிப்பன. இவை சமுதாயத்தின் இயல்புப் போக்கிற்குத் தக உருப்பெற்று காலப் போக்கிற்குத்தக மாறுபடுகின்றன. இத்தன்மையுடைய இலக்கிய வகைப்பாட்டுள், சங்க இலக்கியங்கள் சிறப்பிடம் பெறுகின்றன. அவை அக இலக்கியம், புற இலக்கியம் எனப் பாடுபொருள் அடிப்படையில் பகுக்கப்பட்டுள்ளன. அவ்வகைப்பாட்டுள் அக இலக்கியம் மேன்மையுடையது, அவ்விலக்கியத்துள் உரிப்பொருளே உயிர்நாடியாக விளங்குகிறது. அதன்கண் உணர்ச்சி வெளிப்படுத்தப்பெறுகிறது. இக்கருத்தை "உணர்ச்சி அனுபவமே உரிப்பொருள்"[1] என்ற மு.வரதராசனாரின் கருத்து மெய்ப்பிக்கும். இவ்வுணர்ச்சியைச் சங்கப் புலவோர், கூற்றாளர்களின் வாயிலாகப் புலப்படுத்தியுள்ளனர். அக்கூற்றாளர்களில் தலைவியும் ஒருத்தியாவாள். அகத்திணைத் தலைவி மாசு மறுவற்ற ஓர் அற்புதப் படைப்பு, இவளைக் குறை கூறுவதாக அமைந்த ஒரு பாடலையேனும் சங்க இலக்கியத்துள் காண்பது அரிது. இவள் ஒரு குறிக்கோள் மகளாகவே படைக்கப்பெற்றிருக்கின்றாள். இல்லத்தில் சொல்லுரிமை உடையவள் இவள் என்பதைத் தொல்காப்பியர் "அஞ்சவந்த உரிமை"[2] எனக் கூறுவதன் மூலம் உணரமுடியும். அவள் பல்வேறு சூழலில் உணர்வுவயப்படுகிறாள்.

இலக்கணம் மீறா இலக்கியத் தலைவியின் கூற்றுக்கள் உண்மை வாழ்விலும் நிகழக்கூடியவை. கற்பனைத் தலைவியை உண்மையான பாத்திரமாகக் கொண்டு அவளது வாய்மொழி மூலம் வெளிப்படலாகும் அவளது பண்புகளை உளவியல் நோக்குடன் காணலாம். இந்த உணர்வுகள்

சூழலுக்குத் தக யாங்கனம் வெளிப்படுகின்றன என்பதைக் கண்டறிவது இவ்வியலின் நோக்கமாகும்.

## தலைவி உள்ளத்தில் எழும் உணர்வுகள்

தலைவி தலைவன் மீது கொண்ட காதலை நிறைவேற்றுவதைக் கடமையாகக் கொண்டவள். "நாண், கற்பு, அச்சம், செறிவு, செம்மை, அறிவு, அருமை, காமம், பொறை முதலிய பண்புகளே தலைவிக்குரிய பண்புகளாகத் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்."[3] இத்தகையவள் தலைவனின் பிரிவால் வருத்தம் எய்துவதைச் சங்கப் புலவர் பலரும் எடுத்துரைத்துள்ளனர். அவர்களுள் பரணர், ஔவையார் இருவரும் குறிப்பிடத்தக்கவர்கள். இவ்விரு புலவர்களும் தலைவி கூற்றில் 29 பாடல்களைப் பாடியுள்ளனர். அவை நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு ஆகிய மூன்று அகநூல்களில் இடம்பெற்றுள்ளன. திணை அடிப்படையில் இப்பாடல்கள் (29) குறிஞ்சித்திணையில் நான்கும், முல்லைத்திணையில் மூன்றும், மருதத்திணையில் பத்தும், நெய்தல்திணையில் மூன்றும், பாலைத்திணையில் ஒன்பதுமாக அமைந்துள்ளன. இப்பாடல்களில் தலைவியின் உள்ளப்போராட்டம் - உணர்வுப் போராட்டம் 24 பாடல்களில் வெளிப்படுகின்றது. ஐந்து பாடல்களில் உணர்வுப் போராட்டம் வெளிப்படவில்லை. உணர்வுப் போராட்டங்கள் அமைந்துள்ள 24 தலைவி கூற்றுப் பாடல்களில் உள்ள உணர்வு நிலைகளை

- ஆற்றாமை
- ஏக்கம்
- ஏமாற்றம்
- கலக்கம்
- வருத்தம்

- ஆற்றாமை + எக்கம்
- ஆற்றாமை + ஏமாற்றம்
- ஆற்றாமை + வருத்தம்
- ஏமாற்றம் + கலக்கம்

எனப் பகுத்து விளக்க இடமுண்டு. இப்பாகுபாட்டில் முதல் ஐந்தும் ஒவ்வொரு பாடலிலும் தனி உணர்வுகளாக வெளிப்படுவன. பின்னர் கூறப்பட்ட நான்கும் ஒவ்வொரு பாடலிலும் ஒன்றிற்கு மேற்பட்ட உணர்வுகளாக வெளிப்படுவனவாகும்.

## ஆற்றாமை

தலைவி கூற்றாக அமைந்துள்ள 29 பாடல்களில் ஐந்து பாடல்களில் இவ்வுணர்வு, தனிநிலையில் ஒவ்வொரு பாடலிலும் வெளிப்படுகின்றது. இது பாலைத்திணையில் இரண்டும், குறிஞ்சித்திணையில் ஒன்றும், மருதத்திணையில் இரண்டுமாக (குறுந்.39, 60, 91, அகநா.236, 367) ஐந்து பாடல்களில் பயின்று வந்துள்ளது. இவ்வைந்து பாடல்களிலும் தலைவனது பிரிவாற்றாது தலைவி தன் துன்பம் தோன்றக் கூறுவதாக அமைந்துள்ளது. அவற்றுள் ஆற்றாமை என்ற உணர்வு வெளிப்படுகிறது. தலைவன் பிரிவைத் தலைவி நீ ஆற்றவேண்டும் என்று கூறும் தோழியிடம் எங்ஙனம் அப்பிரிவை ஆற்றுவேன் என வருந்திக் குறிப்பிடுகிறாள். அதனை ஒளவையார்,

“வெந்திறல் கடுவளி பொங்கர்ப் போந்தென
நெற்று விளை உழிஞ்சில் வற்றல் ஆர்க்கும்
மலையுடை அருஞ்சுரம் என்ப”[4]

என விளக்குவர். பாலை நிலத்தில் காற்று வெம்மையாகவும் வலிமையாகவும், வேகமாகவும் வீசும். தான் சென்றறியாத பாலை நிலம் ஆதலால் அருஞ்சுரங்களையுடையது என முன்னர் தலைவன் கூறியதைக்

கேட்டு கூறுகிறாள். இன்பம் துய்த்து இங்கு தங்காமல் கொடிய பாலையில் செலவு மேற்கொண்டு துயருற்று வருந்துகிறாரே என தலைவி தலைவனை நினைந்து வருந்துகிறாள்.

கொடிய தீங்குகள் நிகழும் பாலை நிலம் வழியாகச் சென்ற தலைவனை நினைந்துத் தலைவி ஆற்றாது துன்புறும் பொழுது ஆற்றாமை என்ற உள்ள உணர்வு தலைவி கூற்றில் வெளிப்படுகிறது.

தலைவன் பிரிவால் ஆற்றாத தலைவி தோழிக்கு உரைக்கும் நிலையில் ஆற்றாமை உணர்வு வெளிப்படுகின்றது. குறுகிய தாளினை உடைய கூதளங்கொடி காற்றால் அசையும் உயர்ந்த மலைச் சிகரத்தில் இருக்கும் தேனைப் பார்த்து முடவன் கையை நக்குவதைப் போல தலைவன் அத்தேன் போலத் தன்னைத் தருதலும் செய்யாது, நம்மை விரும்புதலும் செய்யாது பல காலங்கள் அவரைக் கண்ணால் கண்டிருத்தல் நம் உள்ளத்திற்கு இன்பம் தருவதாக அமைகிறது என தலைவனின் பிரிவை ஆற்றாது தன் உணர்வை வெளிப்படுத்துகிறாள். இதனைப் பரணர்,

"குறுந்தாட் கூதளி ஆடிய நெடுவரைப்
பெருந்தேன் கண்ட இருங்கால் முடவன்
உட்கை சிறுகுடை கோலி, கீழ் இருந்து
சுட்டுபு நக்கியாங்கு, காதலர்
நல்கார் நயவார் ஆயினும்
பல்கால் கண்டலும் உள்ளத்துக்கு இனிதே"[5]

என்றுரைக்கிறார்.

கண்ட அளவிலேயே தனக்கு உள்ளத்துள் இன்பம் தோன்றுவதாகக் கூறிய தலைவி, தலைவன் விரும்பும் பரத்தையர்க்கு மெய்யுற்றாலும்

உள்ளம் இனிப்பதில்லை என்பதனைக் குறிப்பால் உணர்த்துகிறாள். கூதளங்கொடி காற்றில் நிலையின்றி அசைந்தாலும் அதனைப் பற்றிக்கொண்டு மலையில் ஏறமுடியாததையும் முடவனிடம் அதற்குரிய வலிமை இன்மையாலும் முடவன் சுவைத்துப் பெறும் இன்பத்தைவிட தலைவி கண்டே பெறும் இன்பம் சிறந்தது என முடவனை, பரத்தையாக நினைத்துத் தலைவன் பிரிவை நினைவுகூர்ந்து தனது ஆற்றாமையை வெளிப்படுத்துகிறாள்.

தலைவி நெஞ்சை முன்னிலைப்படுத்தி உணர்வுடையது போல கூறுவதாக இப்பாடல் (குறுந்.91) அமைந்துள்ளது. தலைவனுக்கு உடன்பட்டு அவனோடு கூடி மகிழ்ந்தால், பிரிவு என்ற ஒன்று தோன்றி மீண்டும் துன்புறுத்தும். அதனால் துயிலும் நாளும் சிலவேயாகும் என தலைவி நினைந்து வருந்துகிறாள். இதனை ஔவையார்,

"அரில் பவர்ப் பிரம்பின் வரிப்புற விளை கனி
குண்டுநீர் இலஞ்சிக் கெண்டை கதூஉம்
தண்துறை ஊரன் பெண்டினை ஆயின்
பல ஆகுக, நுான் நெஞ்சில் படரே!"[6]

என்ற அடிகளில் உணர்த்துகிறார்.

பிரம்பில் பழுத்த கனியைக் கெண்டை மீன் எளிதில் கவர்வது போலப் பரத்தையரும் அழகும் செல்வமும் நிறைந்த தலைவனை எளிதில் கவர்ந்துசெல்வர் என்கிறார்.

அதியமான் அஞ்சியின் பகைப்புலத்து ஊர் போல நின் நெஞ்சில் துன்பம் உண்டாகும். அதனால் நீ துயிலும் நாளும் சிலவே ஆகும் என்பதை

‘கொன்முனை இரவு ஊர் போல’ என்ற உவமை மூலம் தன் ஆற்றாமை உணர்வை தலைவி புலப்படுத்துகிறாள்.

தலைவன் பரத்தமை ஒழுக்கத்தை மேற்கொண்டான். அதனை அறிந்து ஊடியிருந்த தலைவி, தலைவன் இல்லம் வந்தபோது ஊடாது அவனுடன் மகிழ்ந்திருந்தாள். மறுநாள் தலைவன் தலைவியை நீங்கியிருந்தபோது தோழிக்கு முதல்நாள் தான் தலைவனுடன் ஊடாமைக்குக் காரணத்தைக் கூறும் நிலையில் (அகநா.236) இவ்வுணர்வு வெளிப்படுகின்றது. இதனை,

“அணிகிளர் சாந்தின் அம்பட்டு இமைப்பக்
கொடுங்குழை மகளிரின் ஒடுங்கிய இருக்கை
அறியாமையின் அழிந்த நெஞ்சின்
ஏற்றுஇயல் எழில்நடைப் பொலிந்த மொய்ம்பின்
தோட்டுஇருஞ் சுரியல் மணந்த பித்தை”[7]

என்ற அடிகளில் பரணர் வெளிப்படுத்துகிறார். இரவில் அழகுடன் விளங்கும் சாந்துடன் அழகிய பட்டாடை ஒளிசெய்ய, வளைவான காதணி அணிந்த மகளிரைப்போல் நம் தலைவன் நாணத்துடன் இருந்த இருப்பைப் பார்த்து என் மடமையால் உருகிய நெஞ்சினேன் ஆனேன். ஆதலால் ஆதிமந்தியைப் போல் அல்லாது தன் கணவனைத் தேடி அலையாது தப்பினேன் என்று தலைவனைத் தான் ஊடாமைக்குரிய காரணத்தைக் கூறுமிடத்து ஆற்றாமை என்ற உணர்வைத் தலைவி கூற்றின் மூலம் வெளிப்படுவதை அறியமுடிகிறது. தலைவனை ஊடியிருந்தால் நானும் ஆற்றாமையால் துன்பப்படுவேன் என்பதை நன்கு புலப்படுத்துகிறாள்.

தலைவன் தலைவியைப் பிரிந்து பொருள் ஈட்டச் சென்றான். அதனால் தலைவி வருந்தினாள். தோழி தலைவியின் துன்பத்தைக் கண்டு

‘நீ ஆற்றியிருப்பது நின் கடன்’ என்கிறாள். அப்போது தலைவி ‘மாலைப் பொழுது வாராதிருந்தால் ஆற்றியிருப்பேன்’ என்று தன் ஆற்றாமையைக் குறிக்கின்றாள். இதனைப் பரணர்,

“புல்லென் மாலையும் இனிது மன்றம்ம
நல் அக வன முலை அடையப் புல்லுதொறும்
உயிர் குழைப்பன்ன சாயல்
செயிர் தீர், இன் துணைப் புணர்ந்திசினோர்க்கே”[8]

என்ற பாடலடிகளில் சுட்டுவர். நல்ல மார்பிலுள்ள கொங்கைகள் பொருந்தத் தழுவுந்தோறும் உயிர்குழைவதைப் போன்ற மென்மையான இனிய துணையைச் சேர்ந்திருப்பவர்க்கு இம்மாலைப் பொழுது இனியதாகும். நான் தலைவனைப் பிரிந்திருப்பதால் இம்மாலைப் பொழுது துன்பத்தைத் தருகிறது என்று தலைவனைப் பிரிந்த நிலையில் இன்பம் துய்க்கமுடியவில்லையே என தன் ஆற்றாமையுணர்வைத் தோழியிடம் பதிவுசெய்கிறாள்.

இவ்வாறு ஐந்து பாடல்களில் தலைவி தன் ஆற்றாமையுணர்வைத் தோழியிடமும், தன் நெஞ்சிடமும் வெளிப்படுத்துகிறாள்.

## ஏக்கம்

ஏக்கம் என்ற இவ்வுணர்வு மூன்று பாடல்களில் (குறுந்.28, 102, 183) மட்டும் தனித்த நிலையில் வெளிப்படுகிறது. அவற்றுள் ஒன்று பாலைத்திணையது, மற்றொன்று நெய்தல்திணையது பிறிதொன்று முல்லைத்திணையது.

வரைவிடை ஆற்றாதவளாய் தோழிக்குத் தலைவி சொல்லும் நிலையில் ஏக்கம் என்ற உணர்வு (குறுந்.28) வெளிப்படுகிறது. சுழன்று

அசைந்து வீசும் தென்றல் காற்று என்னை வருத்துகின்றது. என் துன்பத்திற்குக் காரணமாகிய காமநோயின் கொடுமையை உணராமல் இவ்வூராரும் கவலையின்றி தூங்குகின்றனர். அவர்களுக்கு என் நிலையை அறிவிக்க முட்டுவேனோ? தாக்குவேனோ? இல்லை காரணம் ஒன்றைக்கூறி குரல் எழுப்புவேனோ! என ஒன்றும் அறியாதவளாய் நிற்பதாகக் குறிப்பிடுகிறாள்.

பல்லிதழ் உண் கண் அழத் தலைவன் பிரிந்தமையின் தலைவியின் கண்கள் துயில் துறக்கின்றன. மண்ணுயிரெல்லாம் துயின்றிருக்க நள்ளென்ற யாமத்தில் அலர் தூற்றுவதையே தொழிலாகக் கொண்ட மாக்களும் உறங்க, இவ்வுலகம் மட்டும் கவலை இன்றித் தூங்குகிறது. தன்னந்தனியாக நான் மட்டும் உறங்காதிருக்கிறேனே, கொன்னூர் துஞ்சினும் யான் துஞ்சலமே என ஊரும் உலகும் இனிதுறங்க எனக்குத் துணையானல்லது வேறு யாருமில்லையே எனப் பலவாறு எண்ணி எண்ணி மறுகிய தலைவிக்கு, தனக்கு உறுதுணையாய் நின்ற தோழியும் தனக்கு உசாத்துணையாகாது துயில்வது கண்டு மேலும் வருத்தம் ஏற்படுகிறது.

முன்னர் குறியிடர் சேரவிடாது தாய் துஞ்சாது, நாய் துஞ்சாது, காவலர் துஞ்சாது இருக்கின்றனரே என்று வருந்திய இவளே இன்று இவரனைவரும் இனிதே துங்சுவது கண்டு நான் தனியாக விடப்பட்டதாக எண்ணி மறுகும் பொழுது மனமுறிவு ஏற்படுகிறது. தன் சுற்றத்தார் பலரும், தோழியரும் கூட இருந்தும், தான் தனியே விடப்பட்டது போன்ற தனிமை உணர்வை அடைகிறாள் தலைவி. இதனை அந்நியமாதல் என்பர் உளவியலார். இது காதல் வயப்பட்டவருக்கு மட்டுமேயன்றி தன் அடையாளம் காணவிழையும், தேடும் இளைய தலைமுறையினரிடமும் காணக்கூடிய ஒரு மனநிலையே.

*“அந்நியமாதலின் பொழுது எந்த உலகத்திலிருந்து தம்மை அந்நியப்படுத்திக் கொண்டனரோ அந்த உலக மக்களைத் தாக்கவேண்டும் என்ற உணர்வு ஏற்படுவது முதல்நிலை, இரண்டாவது பிற மனிதர்களிடம் ஏற்படும் வெறுப்பை அகமுகமாகத் திருப்பி தன்னைத் தானே தாக்கிக்கொள்ளும் எண்ணமும் ஏற்படலாம். தம் தேவைகள் நிறைவேறாத பொழுதும் உதவிபுரிய துணையேதுமில்லை என்ற உணர்வு மேலெழும்பொழுதும் மனித மனம் அவ்வகை ஏமாற்றங்களைத் தாங்கிக் கொள்ள ஒரு தற்காப்பு உத்தியை மேற்கொள்கிறது. இதை உளவியலறிஞர்கள் ‘தனக்கு எதிராகத்தான்’* (Turning against the self) *எனும் காப்பு உத்தியாகக் குறிப்பிடுவர். இவ்வாறான காப்பு உத்தி நிறைவேறாவிடில் மனமுறிவு ஏற்பட்டுவிடும்.”*[9] *இந்த மனநிலையை,*

*“முட்டுவேன் கொல்? தாக்குவேன் கொல்?*
*ஓரேன், யானும்; ஓர் பெற்றி மேலிட்டு*
*‘ஆஅ! ஒல்’ எனக் கூவுவேன் கொல்? -*
*அலமரல் அசைவளி அலைப்ப, என்*
*உயவு நோய் அறியாது, துஞ்சும் ஊர்க்கே”*[10]

*என்ற பாடலில் ஔவையார் வெளிப்படுத்துவர்.*

*ஊர் துஞ்சுவதைக் கூறி தான் துஞ்சாமையைப் புலப்படுத்தும் தலைவி ஊர் தூங்குவது கண்டு, என் நிலை உரைத்தற்கு இயலாமல், நான் தரையில் அல்லது சுவரில் முட்டிக்கொள்வேனா, தாக்கிக் கொள்வேனா எனக் கூறுகின்றாள். தன் காமநோய் கண்டு வருந்தாமையோடு, தன்னைத் தென்றல் வருத்துவதைக் கண்டு ஊர் கவலையின்றித் துயில்வதால் சினம் கொள்கின்றாள்.*

முட்டுவேன் கொல் எனப் பாடம் கொண்டு நினைவு மூளச்செய்தல் மனத்தின் செயலாகவும், தாக்குதல் உடம்பின் செயலாகவும், கூவுதல் வாயின் செயலாகவும் விளக்கி மனம், மெய், மொழி என்ற மூன்றானும் தான் கொண்ட முயற்சிகளைத் தலைவி குறிப்பிடுவதாக ரா.இராகவையங்கார் உரை வகுத்துள்ளார்.

தென்றலானது தன்னைத் துன்புறுத்தும் அதே நேரத்தில் அத்தென்றலே ஊர் மக்களுக்குத் துயில் கொள்ளச்செய்வதாகவும் அமைந்துள்ளது என்கிறாள். இங்குத் தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவி தலைவனுடன் இன்பம் துய்க்க இயலாது இரவில் தூங்காது துன்பப்படுவதை ஏக்கமாக வெளிப்படுத்துகிறாள். வேட்கை மிகுதியும், அது நிறைவேற வழியில்லாது இருக்கும் நிலையும் சேர்ந்து தலைவியிடம் வெறுப்பு விளைகிறது. தன்னிலை உணராது துஞ்சும் தன் தோழியரையும் தாக்குவோமா என எண்ணுகிறாள். அந்த வெறுப்பு உள்முகமாகத் திருப்பித் தன்னைத்தானே தாக்கிக்கொள்ளலாமா என எண்ணுகிறாள். இந்த மனநிலையே அவள் கூற்றில் 'ஓரேன் யானும்' என வெளிப்படுகிறது.

இங்கு மணமுறிவின் அடிப்படையில் எழுந்த தன்னைத்தானே தாக்கிக்கொள்வதும், தன் சினம் வெளிப்படப் பிறரைத் தாக்குதலும் ஆகிய ஆதிக்கச் செயலூக்க மனநிலையைப் படம்பிடித்துக் காட்டுகிறார் ஔவையார். ஆயின் அவ்வாறு செய்ததாகக் கூறவில்லை. பாடல் மனமுறிவு எற்படக்கூடிய எல்லைக்கே சென்றாலும்கூட அதைக் கடந்துவிடவில்லை.

"மன்னுயிர் எல்லாம் துயிற்றி அளித்திரா
என்னல்ல தில்லை துணை"[11] *(1168)*

எனும் குறட்பாவில் சுட்டப்படும் தலைவியும் இம்மனநிலை உடையவளே.

அவளது ஏக்கத்தைத் தூண்டுவதாக தென்றல் இருப்பதைப் புலப்படுத்துகிறாள்.

தலைவன் பிரிவால் வருந்திய தலைவியை ஆற்றுவித்த தோழிக்கு நான் எங்ஙனம் ஆற்றுவேன் என்று (குறுந்.102) கூறும் நிலையில் இவ்வுணர்வு வெளிப்படுகின்றது. காதலரை நினைத்தால் அவர் பிரிவு என்னும் தீயினால் நினைக்கின்ற என்மனம் வேகாநிற்கும். அவரை நினையாமல் உயிர் வைத்திருந்தால் எம்முடைய ஆற்றலுக்கு உட்பட்டதன்று, காமநோய் எம்மைச் சாகும்படி வருந்தச் செய்து வானத்திலும் தோய்வதுபோன்ற பெருக்கத்தை உடையது. என் உள்ளம் பொருந்தியவர் நம்மை அருளாமையால் சால்புடையவர் அல்லர் என்றுரைக்கிறாள். பிரிவுத்துன்பத்தில் வருந்தும் தலைவி நினைந்தால் நெஞ்சு சுடுகின்றது. நினையாது இருப்பதும் இயலவில்லை எனக் கூறுகிறாள். இதனை,

"உள்ளின் உள்ளம் வேமே; உள்ளாது
இருப்பின், எம் அளவைத்து அன்றே; வருத்தி
வான் தோய்வற்றே காமம்;
சான்றோர் அல்லர், யாம் மரீஇயோரே"[12]

என்ற பாடலில் சுட்டுவார் ஔவையார். சான்றோராயின் பொருட் செல்வத்தை மதிக்காது, அருட்செல்வத்தையே மதிப்பர். ஆதலால் என்னால் விரும்பப்பெற்ற தலைவன் பொருள்மீது பற்றுக்கொண்டு சென்றதால் 'சான்றோர் அல்லர்' என்பதைக் குறிக்கின்றாள். காதலுடைய நினைப்பும் வருத்துகின்றது. அவனை நினையாமையும் வருத்துகின்றது. குறித்த பருவத்தில் தலைவன் வராத நிலையையும், தன் எதிர்பார்ப்புத் தன்மையும் பிரிவினால் கொன்றை பூப்போல மேனி பசலைபாய்ந்த தன்மையினையும்

ஔவை வருத்தத்துடன் குறிப்பிடுகிறார். உயிர்நீத்து வானில் சென்றாலும் இக்காமம் அங்கும் வந்தும் வருத்தும் என தலைவனைப் பிரிந்த வழி தன் உள்ள ஏக்கத்தைத் தலைவி குறிக்கின்றாள். "பிரிவுத்துன்பத்தில் வருந்தும் தலைவி நினைந்தால் நெஞ்சு சுடுகின்றது, நினையாதிருப்பதும் இயலவில்லை என தலைவியின் உள்ளப்போராட்டத்தால் கனலும் நெஞ்சு ஔவையாரின் அழுத்தமிக்க சொற்களில் வெளிப்படுகின்றது."[13]

"காமம் தன்னை வருத்தும் நிலையினை மேற்கண்ட பாடலின் மூலம் சுட்டுகிறார். மறைத்து வைத்ததினால் அவ்வுணர்வு பெருகியதே அன்றிக் குறையவில்லை. அத்துடன் அது அலராகப் பெருகியது. ஒரு பெண் தன் உள்ளத்து உணர்வுகளைப் பொத்தி வைக்கமுடியாது என்று ஔவையார் சொல்லாமலே சொல்லிவிடுகிறார். காமம் பெருகினால் அடக்கமுடியாத நெஞ்சத்து உணர்வுகளை மெய்ம்மலி காமம், வான்தோய்வற்றே காமம், அனைபெருங் காமம் (குறுந்.99) என்று நெஞ்சத்தின் உள்ளே உறைந்துகிடக்கும் உணர்வுகளைக் கோடிட்டுக் காட்டி விடுகிறார்."[14]

தனது உள்ளத்து வேட்கை உணர்வுகளை வெளிப்படையாகப் பெண்கள் சொல்லக்கூடாது. ஆனால் ஔவையார் இங்கு மரபை மீறிச் சொல்லும் திறன் உணரத்தக்கது. உள்ளத்து உணர்வின் உண்மை நிலையானது உணர்ந்தவாறு அப்படியே இங்குக் கூறப்பட்டுள்ளது.

குறித்த பருவம் கண்டு தலைவி தோழியிடம் புலம்பும் நிலையில் (குறுந்.183) இவ்வுணர்வு வெளிப்படுகிறது. கார் பருவத்தில் கொன்றை மலர்கள் நம்மைப் போல் பசந்து காணப்படும். மழை பெய்வதற்குமுன் பொழிவு இழந்து காணப்பட்ட காயாஞ் செடி மழைக்குப்பின் மயிலின்

கழுத்தைப் போல தோன்றும். அத்தகைய காட்டில் என்னைப் போல தனித்த சிறிய தலையையுடைய பெண்மானின் நீங்கிய, நெறித்தக் கொம்பினையுடைய ஆண்மானைத் தலைவன் காண்பாரோ? என ஏக்கத்தோடு குறிப்பிடுகின்றாள். இதனை ஔவையார்,

"சென்ற நாட்ட கொன்றைஅம் பசுவீ
நம்போல் பசக்கும் காலை, தம் போல்
சிறுதலைப் பிணையின் தீர்ந்த நெறி கோட்டு
இரலை மானையும் காண்பர் கொல் நமரே!"[15]

என்பர். பொன்போலப் பூத்த கொன்றையின் மலர்கள் அம்மரம் கார்பருவத்தில் தலைவன் வருகையை எண்ணி பசலை பூத்தது போலிருந்ததாகக் கற்பனை செய்யப்பட்டுள்ளது. கொன்றை கார்பருவத்தில் மட்டுமே பசக்கும்; தலைவியோ தலைவன் பிரிந்த அன்றே பசப்பாள் என்பது 'கொன்றை பசக்கும்' என்ற தொடரால் உணர்த்தப்பட்டது. தன்போல எந்த ஒரு விலங்கும் தன் துணையைப் பிரிந்திருப்பதில்லை என்பது இரலை பிணையொடு கூடி மகிழும் வாழ்வினால் சுட்டப்பெறுகின்றது. அதுபோலத் தானும் தன்னுடைய காதலியைப் பிரிந்திருத்தல் இயலாது என்று தலைவன் உணர்ந்து கொள்வான் எனத் தலைவி நினைத்தாள்.

குறித்த பருவத்தில் தலைவன் வருவான் என்பதையும், இரலை மான், பிணையொடு மகிழும் காட்சி தலைவியொடு இப்பருவத்தில் கூடி உறைதல் வேண்டும் என்ற வேட்கையைத் தூண்டுவனவாக அமைகின்றன. இங்குத் தலைவனைப் பிரிந்த தலைவியின் ஏக்கவுணர்வை நாம் உணரமுடிகிறது.

## ஏமாற்றம்

தலைவி கூற்றுப் பாடல்கள் மூன்றில் (குறுந்.36, 200, 399) தனித்த நிலையில் இவ்வுணர்வு புலப்படுகிறது. "மகளிர் மனம் போன்ற மென்மை உள்ளம் தலைவனுக்கு இல்லை எனத் தலைவி கூற்றாக ஔவையார் குறிப்பிடுவர்."[16] களவுக் காலத்தில் தலைவியொடு கூடிய தலைவன் உரைத்த சூளுரைகள் பொய்த்தபோது தலைவி தோழிக்கு ஆறுதல் மொழிவதாக இப்பாடல் அமைகின்றது. தோழியே எப்போதும் தலைவிக்கு ஆறுதல் கூறுவாள். ஆனால் இப்பாடல் தலைவி தோழிக்கு ஆறுதல் கூறுவதாக (குறுந்.36) அமைந்துள்ளது. இதனை,

"துறுகல் அயலது மாணை மாக் கொடி
துஞ்சு களிறு இவரும் குன்ற நாடன்
நெஞ்சு களனாக 'நீயலென் யான்' என
நற்றோள் மணந்த ஞான்றே மற்று - அவன்
தாவா வஞ்சினம் உரைத்தது"[17]

என்பர் பரணர். சங்க இலக்கியத் தலைவனும் தலைவியும் ஒருவரை ஒருவர் பிரியாத இனிய வாழ்வை உள்ளார்ந்து விரும்புகின்றனர். தலைவனைப் பிரிந்து தனிமையிலிருக்கும் தலைவியிடம் துன்பம் மிகுதலுண்டு. பிரிவுத்துன்பம் பெருகும்போது தலைவியின் உள்ளம் கிளர்ச்சிக்குத் தள்ளப்படுகிறது. உணர்ச்சிக்கும் (Feeling) உள்ளக் கிளர்ச்சிக்கும் (Emotion) வேறுபாடுண்டு. "நனவு நிலையில் நம்முடைய செயல்களையெல்லாம் பாதித்து நிற்கும் பொது நிலைக்கு உணர்ச்சி என்று பெயர்."[18] "இவ்வுணர்ச்சிகள் சில ஆழமாய்ப் பதிந்து நம்மை ஆட்டிவைக்கும் தன்மை அடையும் போது அவற்றை உள்ளக்கிளர்ச்சி என்பர்."[19] இவ்விரு நிலைகளையும் தலைவி அடைந்து பிதற்றுகிறாள். இதனால் உடல் அழிந்து நலனழிகிறாள்.

மாணைக் கொடி தன் அருகே உறங்கிக்கிடக்கும் யானை மீது படர்வது, களவில் தலைவி தலைவனைத் தழுவிக் கிடந்தமையைச் சுட்டுகிறது. துறுகல் அருகே தூங்கும் யானை போல தலைவனும் களவிற்கூட்டம் முடித்துக் கிடப்பது குறிக்கப்பட்டது. மாணைக் கொடி துறுகல்லிற்கும் யானைக்கும் வேறுபாடறியாது படர்ந்தமை போல பெயராத பற்றுக்கோடு உடையவன் என எண்ணிப் பெயர்ந்த தலைமகனை அணைத்து மகிழ்ந்த தன்னுடைய ஏமாற்றத்தைப் புலப்படுத்தினாள். யானை துயில் நீங்கி எழுந்த வழி கொடி பற்றுக்கோடு இல்லாமல் தவிப்பது போல தலைவன் புணர்ந்து நீங்கியவழி வருந்தும் தலைவி நிலை இருந்தது.

படர்ந்தவழி தழைத்த கொடிகள், யானை நீங்கிய வழி வாடுதல் போல, காமக் கூட்டத்தால் பொலிவு பெற்ற தலைவியின் எழில் நலம் அவன் பிரிவினால் நலிவுறுதல் உணர்த்தப்பட்டது. இந்நிலையில் ஏமாற்றம் என்ற உணர்வு தலைவியின் கூற்றில் வெளிப்படுகிறது.

கார்காலத்து மாலைப்பொழுதில் இடியுடன் பெய்யும் மழைநீரில் மலையில் பூத்த பூக்கள் மிதந்து வருகின்றது. கார் பருவத்திற்கு முன்பே வருவதாகச் சொன்ன தலைவர் குறித்த பருவம் வந்தும் இன்னும் வரவில்லை. அவர் நம்மை மறந்திருத்தல் வேண்டும் என ஏமாற்றமடைந்து குறிப்பிடுகிறாள். இதனை (குறு.200) ஔவையார்,

"பெய்த குன்றத்துப் பூநாறு தண் கலுழ்
மீமிசைத் தாஅய், வீசும்வளி கலந்து
இழிதரும் புனலும்; வாரார் - தோழி"[20]

என்றுரைக்கிறார்.

தலைவன் கார்காலம் தொடங்குவதற்குமுன் வருவதாகக் கூறிய மொழிகள் தலைவியின் உயிர்க்குப் பாதுகாப்பாய் அமைந்தன. கார்காலம் வந்தபின்பு தலைவன் வாராமையால் அவர் தன்னை உறுதியாக மறந்தவராதல் வேண்டும் எனக் கருதினாள். இடிமுழக்கமும் அருவியின் நீர்ப்பெருக்கும் கார்காலம் வந்தமையை உறுதிசெய்தன. "மன்ற மறந்தார் என்றது மழை முரலுமுன் வருவோம் என நங்கண் ஏமஞ் செய்ததையும் மறந்தார் என மு.இராகவையங்கார் குறிப்பிடுவர். சுருக்கமாகச் சொன்னால் வாக்குத் தவறிவிட்டான் அவன். தன் வாக்குப்படி மழை காலத்திற்கு முன் அவன் வரவேண்டும். ஆனால் வரவில்லை இங்கு தலைவியின் ஏமாற்றம் அதன் விளைவாக பெருந்துன்பம் வெளிப்படுகிறது"[21] என்கிறார் ஐ.க.பாண்டியன்.

ஆனால் 'மன்ற மறந்தார்,' 'நாம் மறவாம் என்பது அவளின் தற்காலதல் எழுச்சியைக் காட்டுகிறது. "இது பெண்ணிய வகை சார்ந்த பினைப்புத் தற்காதல் (Anaclytic (Attachment) Narcissism) என்கிறார் ஃபிராய்டு."[22]

ஃபிராய்டு தற்காதலின் ஒரு குணாம்சத்தை குறிப்பிடுவது இங்கு பொருத்தமாக இருக்கக்கூடும். "தன்னின் சொந்த சுயத்தின் ஒரு பகுதியாக இந்த நபரையே நேசிக்கிறாள்/றான். இது தற்காதலின் ஒருவகை" என்கிறார்.

இங்கு தலைவியின் மனத்தை ஔவையின் தன்னிலையானது தற்காதலை உடையதாகவும், அவளின் நனவிலி ஆசையானது கார்கால வரவால் அதற்காக ஏங்குபவளாகவும், கைவிடப்பட்ட துன்பத்தில் உள்ளவளாகவும் பார்க்கிறது. இந்நிலை தலைவன் வராததற்கான உண்மை

நிலையை அறிய முயற்சிக்க அனுமதிக்கவில்லை. அத்தோடு அவனை வாக்குத் தவறியவன் என்ற குற்றத்தையும் சுமத்துகிறது எனலாம்.

தலைவன் வாராமையால் அவனுடன் புதுப்புனல் ஆடுதலும், அருவி தந்த மலர்களைப் புனைதலும் இல்லையாயின எனக் கலங்கினாள். உடற்கினியதாய் வீசும் காற்றும், வாய்க்கு இனிய அருவி நீரும், கண்ணுக்கு இனிய குன்றத்து வெள்ளப்பெருக்கும், மூக்கிற்கினிய பூமணமும், செவிக்கினிய இடியின் ஓசையும் ஆகிய ஐம்புல இன்பங்களும் தலைவன் உடன் இல்லாமையால் அதனைத் துய்க்கப்பெறாது அழிவன என்று குறித்தப் பருவம் வந்தும் தலைவன் வராததைக் கண்டு ஏமாற்றமடைந்து வருந்துகிறாள்.

ஊரார் நீர் உண்ணும் துறையில் பாசியானது நீரில் பரவிக்கிடப்பதைக் காண்பாராயின் உடனே அதனை நீக்கி உண்பதற்கு ஏற்ற நன்னீராக்க முயலுவர். ஆனால் அப்பாசி போன்ற தொடுவுழி நீங்கி, விடுவுழிப் பரவும் பசலையை என் மேனியில் கண்டும் நீக்க முயலாது, வரைவு நீட்டிப்பது ஏன் எனத் தலைவி வருந்துகிறாள். இங்கு வரைவு நீட்டித்த தலைவனின் செயல் கண்டு ஏமாற்றமடைந்த தலைவி தோழியிடம் கூறும் போது (குறுந்.399) இவ்வுணர்வு மேலோங்குகிறது. இதனை,

"ஊர் உண் கேணி உண்துறைத் தொக்க
பாசி அற்றே பசலை - காதலர்"[23]

என்று பரணர் உரைக்கின்றார்.

பாசி படர்ந்த நீர் உண்பதற்குப் பயன்படாதது போல பசலை படர்ந்த மேனி தலைவனால் இன்பம் பெறுவதற்கு இயலாததைக் குறிக்கின்றது. நீர்த்துறையின் பாசியை யாவரும் வெறுத்தல் போலத் தன்

மேனியின் பசலையும் வெறுப்பர் என்றாள். உண்துறையின் நீரில் பாசி பரவியமை பலரால் அறியப்பட்டுப் பிறர்க்கு உரைக்கப்படுதல் போலத் தன்னுடைய மேனியின் பசலையும் பலரால் அறியப்பட்டு அலர் உரைக்க ஏதுவாயிற்று என்கிறாள். "தலைவனோடு தலைவி காதல் கொள்கிறாள். இந்நிலையில் தலைவியை விட்டுத் தலைவன் பிரிந்து சென்றுவிடுகின்றான். இதனால் தலைவியின் உடல் மெலிவுற்றுப் பசலை படர்கிறது. தலைவியின் எழில் நலம் பொலிவிழக்கிறது. தலைவியின் இம்மாறுபாட்டைக் கண்ட ஊரார் தலைவனாலே இது ஏற்பட்டது எனப் பழிதூற்றுவர். ஊரின் இப்பழிச் சொல்லே 'அலர்' எனப்படும்."[24] பாசியை நீரிலிருந்து முற்றிலுமாகக் களைவாரைப் போலத் தன்னுடைய மேனியின் பசலையும் தோன்றா வகையில் தலைவன் மணம் முடித்து முற்றிலுமாகக் களையப்படுதலை விரும்பினாள். ஆனால் தலைவன் விரைந்துவந்து வரைந்துகொள்ளாது களவு நீட்டித்ததால் ஏமாற்றமடைந்து வருந்துகிறாள்.

## கலக்கம்

தலைவி கூற்றுப் பாடல்களில் கலக்கம் என்ற இவ்வுணர்வு தனித்த நிலையில் (குறுந்.158) குறிஞ்சித்திணையில் வெளிப்படுகிறது.

தலைவன் இரவுக்குறி வரும்போது ஏற்படும் இயற்கைத் துன்பங்களை நினைந்துத் தலைவி கூறுமிடத்து இவ்வுணர்வு வெளிப்படுகின்றது. இதனை ஔவையார்,

"ஆர் அளி இலையோ நீயே? பேர் இசை
இமயமும் துளக்கும் பண்பினை
துணைஇலர், அளியர், பெண்டிர்; இஃது எவனே?"[25]

என்றுரைக்கிறார்.

தலைவி, தலைவன் இரவுக்குறியில் வருவதால் மழை, இடி, காற்று ஆகியவற்றால் வரும் ஏதங்கள் குறித்து அஞ்சுகிறாள். நடுக்கமின்றி நிலைத்த இமயமும் உன்னால் துன்பம் அடையும் என்றால் துணையற்ற நாங்கள் எங்ஙனம் இருப்போம் என்றாள். இங்குப் பெண்டிர், துணை இல்லாதவர், அளியர் என பொதுப்படையாகக் குறித்தாலும் அவை தலைவியையே குறித்தன. அருள் உள்ளம் உடைய வலியவனாகிய நீ மெலியவர்களைத் துன்புறுத்துவது அறமாகுமா என கலக்கமடைகிறாள். எப்பொழுதும் எல்லா உயிர்களையும் வாழ்விக்கும் காற்று, இப்பொழுது சினம் கொண்டு வீசுவதால் 'ஆரளி இலையோ' என தலைவி வினவுகிறாள்.

ஔவையார், "காதலால் மனங்கலங்கிய நிலையில் இயற்கைச் சக்திகளோடு - உயிரில்லாப் பொருள்களோடு உரையாடுவதுபோலப் புனைந்துரைப்பது உலகப் பொதுமையான கவிதை மரபே ஆகும்"[26] என பெ.சு.மணி குறிப்பிடுகிறார்.

இங்குத் தன்னைச் சந்திக்க இரவுக் குறியில் வரும்போது தலைவனுக்கு ஏற்படும் இயற்கைத் துன்பங்களை நினைத்துக் கலக்கமடைவது ஈண்டு புலனாகிறது.

## வருத்தம்

தலைவி கூற்றுப் பாடல்கள் எட்டில் (அகம்.6, 11, 122, 135, 147, 266, 273, 303) வருத்தம் என்ற உணர்வு வெளிப்படுகிறது. இவை பாலைத் திணையில் ஐந்தும், மருதத்திணையில் இரண்டும், குறிஞ்சித்திணையில் ஒன்றுமாக இடம்பெற்றுள்ளது. நினைந்தது நடக்காமலிருக்கும் தருணத்திலும், தொடரும் செயல்களுக்குக் குறுக்கீடு ஏற்படுந்தருணத்திலும் வருத்தம் மிகுதலுண்டு.

தலைவனின் பரத்தையர் ஒழுக்கம் சங்க இலக்கியத்தில் பரவலான பழக்கமாக இடம்பெறுகிறது. குடும்ப வாழ்க்கை நடத்தும் தலைவன் பரத்தையரொழுக்கம் மேற்கொள்வதற்குப் பல காரணங்கள் உண்டு. அவற்றுள் ஒன்று தலைவியிடம் நேர்ந்த சலிப்பே ஆகுமெனத் தோழி "நீர்நீ டாடின் கண்ணுஞ் சிவக்கும் ஆர்ந்தோர் வாயில் தேனும் புளிக்கும்"[27] எனக் கூறுகிறாள். ஒன்றன் ஈடுபாடு காலப்போக்கில் ஓர் எதிர்மறையான நாட்டத்தை ஏற்படுத்தலாம். சலிப்பால் ஏற்படும் சோர்வு (Monotony) என இதனை உளவியலார் குறிப்பர். இக்கருத்தை "ஈடுபட்டுள்ள செயலில் மாற்றத்தை விரும்பும்போது சோர்வு ஏற்படுகின்றது. அதாவது இப்பொழுது ஈடுபட்டுள்ள செயலிலிருந்து விலகி வேறு ஒரு செயலில் ஈடுபடவேண்டும் என்பதைக் காட்டுகின்றது"[28] என்ற கருத்து அரண் செய்யும்.

தலைவன் தலைவியைப் பிரிந்து சென்று பரத்தையுடன் நீராடித் திரும்பிவந்தான். தலைவியைப் பாராட்டினான். அப்போது தலைவி அவன் பரத்தையுடன் நீராடிய செயலை அறிந்திருந்ததால் அவனுடன் ஊடல் கொண்டு கூறும் நிலையில் (அகம்.6) வருத்த உணர்வு வெளிப்படுகிறது. இதனைப் பரணர்,

"ஏந்து எழில் அகத்துப் பூந் தார் குழைய
நெருநல் ஆடினை, புனலே; இன்று வந்து
'ஆக வனமுலை அரும்பிய சுணங்கின்
மாசு இல் கற்பின், புதல்வன் தாய்!' என
மாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றி, எம்
முதுமை எள்ளல்; அஃது அமைகும்தில்ல!
சுடர்ப் பூந் தாமரை நீர் முதிர் பழனத்து
அம் தூம்பு வள்ளை ஆய் கொடி மயக்கி

வாளை மேய்ந்த வள் எயிற்று நீர் நாய்

முள் அரைப் பிரம்பின் மூதரில் செறியும்

பல் வேல் மத்தி, கழா அர் அன்ன எம்

இளமை சென்று தவத் தொல்லஃதே

இனிமை எவன் செய்வது, பொய்ம் மொழி, எமக்கே?”[29]

என்றுரைக்கிறார்.

தலைவனே உன்னுடைய உயர்ந்த மார்பில் அணிந்த பூமாலை குழைய பரத்தையுடன் நீராடினாய். இன்று இங்கே வந்து ‘மார்பில் உள்ள அழகிய கொங்கையில் தோன்றிய தேமலையும் குற்றமில்லாத கற்பையும் உடைய, என் மைந்தனின் தாயே’ என்று வஞ்சனையுடைய பொய்யான சொற்களை வணங்கிப் பலகாலும் கூறி என் முதுமையை இகழாதே! அம் முதுமைக்கு யாம் பொருத்தமாவோம். உன்னுடைய பொய் மொழி எப்படி எனக்கு இன்பத்தைத் தரும் என்று கூறும் தலைவியின் கூற்றில் தன்னை விடுத்துப் பரத்தையுடன் நீராடிய தலைவன் இப்பொழுது இங்கு வந்து நம்மை பாராட்டுகிறானே என்று வருந்திய நிலையில் அவளுடைய உள்ள உணர்வு வெளிப்படுகின்றது.

தலைவன் பொருள்வயிற் பிரிந்த நிலையில் தலைவியின் வேறுபாடு கண்டு ஆற்றாளாய தோழிக்குத் தலைமகள் ஆற்றுவள் என்பதனை,

“................. ................. நயவர

நீர் வார் நிகர் மலர் மடுப்ப, ஓ மறந்து

அறுகுளம் நிறைக்குந போல, அல்கலும்

அழுதல் மேவல ஆகி,

பழிதீர் கண்ணும் படுகுவமன்னே!”[30]

என்றுரைக்கிறார் ஔவையார்.

என் குற்றம் இல்லாத கண்களும் நீரைச் சிந்தும் மலரைப் போன்று ஒழிதலின்றி, நீர் வற்றிய குளத்தை நிறைக்கும் கால்வாய்களைப் போன்ற நாள்தோறும் அழுது கண்ணீர் வடித்தலைப் பொருந்தாதனவாக இன்பம் உண்டாகத் துயில்வோம். மேற்கூறிய இன்பம் உண்டாகும் செயலைச் செய்திலர் என்பதற்கே வருந்துகிறேன். பிரிவாற்றாமையால் வருந்தவில்லை என்று தனது வருத்தத்தை வெளிப்படுத்துகிறாள்.

மேலும் அவர் என்னை உடன் அழைத்துப்போயிருப்பின் அவரும் வருந்தார், நானும் வருந்தேன் எனக் குறிப்பிடுவது தலைவியின் உள்ள உணர்வை வெளிப்படுத்துகிறது.

ஒவ்வொரு பெண்ணிற்கும் தன் காதலனுடன் சேரவேண்டும். தன் கணவனுடன் சேர்ந்து இன்பமுடன் வாழ்தல் வேண்டும் என்பதே ஆழ்மன விருப்பமாகும். அவ்வாறு எழும் மன உணர்வுகளைத் தலைவி, தலைவன் முன் வெளிப்படையாகச் சொல்லுதல் தலைவிக்கு இல்லை என்பதைத் தொல்காப்பியம்,

"தன்னுறு வேட்கை தலைவன் முன் கிளத்தல்
எண்ணுாங் காலைக் கிழத்திக்கு இல்லை" (கிளவி.1064)

என்று தலைவி கூற்றாகச் சொல்கிறது. ஆனால் இங்கு ஔவையார், தலைவி கூற்றாக தன் ஆழ்மன விருப்பத்தை வெளிப்படுத்தும் முறை மனதில் நிறுத்தத்தக்கது. தலைவன் பொருள்வயிற் பிரிந்தவிடத்து எவ்வாறு ஆற்றுவாய் என்பதற்கு எவ்வாறாகினும் நான் ஆற்றி இருப்பேன் என்று பதிலிறுக்கிறார். அவ்வாறு பதிலிறுத்தாலும் வேகமாக எழும் தன் மன உணர்வினைச் சொல்ல வருபவர்,

"மெய்புகுவ அன்ன கை கவர் முயக்கம்

அவரும் பெறுகுவர் மன்னே" (அகம்.11)

என ஆற்றி இருத்தலின் எதிர்பார்ப்பைச் சொல்லிவிடுகிறார். இங்கு விருப்பத்தை வெளிப்படையாகச் சொல்ல இயலாது, ஆணின் மரபு சார்ந்த போர்வைக்குள் ஔவையும் பதுங்கிக் கொள்ள நேரிடுகிறது. ஆழ்மன விருப்பத்தைச் சொல்வதின் வழித் தன் பிரிவுத்துயருக்கு வடிகால் தேடும் இடமாக இது உள்ளது.

ஊர் உறங்காமை, அன்னை உறங்காமை, காவர் வருதல், நிலவு வெளிப்படுதல், நாய் உறங்காமை முதலியவற்றால் தலைவன் குறியின் கண் தலைவி வரப்பெறாத போது மீண்டும் தலைவன் சிறைப்புறமாக நிற்க, தலைவி அவன் கேட்கும்படித் தான் அடைந்த துன்பங்களைத் தோழிக்குச் சொல்லிய நிலையில் இவ்வுணர்வு வெளிப்படுகிறது. இதனை,

"இரும்பிழி மகாஅர் இவ் அழுங்கல் மூதூர்

விழவு இன்று ஆயினும் துஞ்சாது ஆகும்

மல்லல் ஆவண மருகுஉடன் மடியின்

வல்உரைக் கடுங்சொல் அன்னை துஞ்சாள்

பிணிகோள் அருஞ்சிறை அன்னை துஞ்சின்

............ ............ ............

............ ............ ............

............ ............ ............

மனைச்செறி கோழி மாண்குரல் இயம்பும்

எல்லாம் மடிந்த காலை, ஒருநாள்

நில்லா நெஞ்சத்து அவர் வாரலரே"[31]

என்று பரணர் உரைக்கின்றார். தோழி இந்த மூதூர் உறங்காது, இவ்வூர் உறங்கினும் அன்னை உறங்காள். அவள் உறங்கின் காவலர் வருவர். காவலர் உறங்கினும் நாய் குரைக்கும். நாய் உறங்கின் நிலவு வெளிப்படும். நிலவு மறையின் கூகை குழறும். கூகை உறங்கின் கோழி கூவும். இவை எல்லாம் முடிந்த பின்போ தலைவன் வரமாட்டார். எனவே நம் களவொழுக்கம் தித்தன் என்பானின் உறையூர்ப் புறங்காட்டைப் போல துன்பம் தருவதாக உள்ளது என்று தன் உள்ள வெளிப்பாட்டைப் புலப்படுத்துகிறாள் தலைவி.

தலைவன் பொருள் ஈட்டும் பொருட்டுத் தலைவியைப் பிரிந்தான். அவன் பிரிவினை ஆற்றாத தலைவி வருந்தி உடல்வேறுபட்டாள். அதனை அறிந்த தோழி ஆறுதல் கூற அத்தோழியை நோக்கித் தலைவி கூறும் நிலையில் இவ்வுணர்வு மேலோங்குகிறது. இதனை பரணர்,

"திதலை மாமை தளிர்வனப்பு அழுங்க
புதல் இவர் பீரின் எதிர்மலர் கடுப்பப்
பசலை பாய்ந்த நுதலேன் ஆகி,
எழுது எழில் மழைக்கண் கலுழ, நோய் கூர்ந்து
ஆதிமந்தியின் அறிவு பிறிது ஆகி
பேதுற் றிசினே - காதல்அம் தோழி!"[32]

என்றுரைக்கிறார். எனது தேமல் பொருந்திய மாமை நிறமும், தளிர் போன்ற அழகும் கெட்டொழிந்தன. புதர்களில் படர்ந்து கிடக்கும் பீர்க்கம் பூவினைப் போன்று பசலை நிறம் படர்ந்த நெற்றியை உடையவள் ஆனேன். ஓவியம் எழுத வல்லார் பார்த்து எழுதுவதற்குரிய அழகிய குளிர்ந்த கண்கள் அழுமாறு துன்பம் மிக, ஆதிமந்தியைப் போல நான் அறிவு திரிந்து மயங்கித் துன்புற்றேன் என்கிறாள்.

மேலும் கழுவுள் என்பவனுக்குரிய காமூரைப் பதினான்கு வேளிர் ஒன்று சேர்ந்து தாக்கியதைப் போல எம்மை விட்டுப் பிரிந்த எம் தலைவர் விரைந்து வருவார் என்று தெளிவுற்று இருந்த என் நெஞ்சம் கலங்குவதாகக் குறிப்பிடும் நிலையில் அவளின் உள்ள உணர்வு வருத்தத்தை வெளிப்படுத்துகிறது.

தலைவன் பொருள் காரணமாகப் பிரிய வேண்டிய நேரங்களில் உள்ளப்போராட்டம் நிகழ்தல் இயல்பேயாகும். தலைவியுடன் சேர்ந்து உறைந்தால் பொருள் சேராது; பொருள் வேண்டிப் பிரிந்தால் தலைவியுடன் இனித்திருக்க இயலாது. இதனை தமிழ் அகவியல் அறிஞர் "குடும்பமாவது இளமையும் வளமையும் மோதிக் கொள்ளும் போர்க்களம் என்று சங்கச் சான்றோர் கண்டனர்"[33] என்றும் "பொருள் வயிற் பிரிவுத்துறை இன்பமும் கடமையும் போராடும் இடமாக நல்ல உணர்ச்சிகள் மோதிக்கொள்ளும் இடமாக அமைந்துள்ளது என்றும் கூறியுள்ளமை நினைவில் கொள்ளத்தக்கதாகும்."[34]

தலைவன் பொருள்வயிற் பிரிந்தமையைத் தோழி கூற அதற்குத் தலைவி மறுமொழி கூறுகிறாள். தலைவன் நம்பைப் பிரிந்தார், அதனால் நான் வருந்தினேன். என் வருத்தத்திற்கு மருந்தில்லை. அதனால் செயலற்றேன் என்கிறாள். வெள்ளிவீதி என்ற மங்கை காட்டில் தன் கணவனைத் தேடிச் சென்றதைப் போல நானும் செல்லுதலை விரும்பினேன் என்று குறிப்பிடுகிறாள். இதனை ஔவையார்,

"செலவு அயர்ந்திசினால் யானே பலபுலந்து
உண்ணா உயக்கமொடு உயிர்செலச் சாஅய்த்
தோளும் தொல்கவின் தொலைய நாளும்

பிரிந்தோர் பெயர்வுக்கு இரங்கி

மருந்துபிறிது இன்மையின் இருந்துவினை இலனே"[35]

என உரைக்கின்றார். நம் தலைவன் நம்மைப் பிரிதலால் பலவற்றையும் வெறுத்து உணவு உண்ணாத வருத்தத்தால் என் உயிர் செல்லுமளவுக்கு மெலிந்தது. என் தோள்களும் பழைய அழகு இழந்தன. நம்மைப் பிரிந்து சென்ற தலைவரின் நீக்கத்துக்குப் பிரிவைத் தாங்காது அழுது அதனைப் போக்குதற்கு வேறு மருந்து இல்லாமையால் செயலற்றேன் என்றாள்.

"பிளவுபட்ட வழிகள் பொருந்திய காட்டில் தன் கணவனைத் தேடி வெள்ளிவீதி சென்றதைப் போல நானும் தலைவனைத் தேடிச் செல்ல விரும்பியுள்ளேன்"[36] என்று குறிப்பிடுவர் செ.சாரதாம்பாள். இங்குத் தலைவியின் வருத்தத்தை உணர்வாக வெளிப்படுத்துகிறாள். தலைவி தனது வருத்தத்தை நேரடியாகக் குறிப்பிடாமல் தனது உடல் உறுப்புகளின் செயல்களை முன்னிலைப்படுத்தி அதன் வாயிலாகத் தான் வருத்தமுற்றிருப்பதை வெளிப்படுத்தும் தலைவியின் பாங்கு இங்கு நோக்கத்தக்கது.

தலைவியைப் பிரிந்து பரத்தையிடம் சென்ற தலைவன் மீண்டு வந்தபோது அவனோடு கூடிய தலைவி சொல்லும்போது இவ்வுணர்வு மேலோங்குகிறது. இதனை,

"அவலம் அன்றுமன் எமக்கே! அயல
கழனி உழவர் கலிசிறந்து எடுத்த
கறங்கு இசை வெரீஇப் பறந்த தோகை
அணங்குடை வரைப்பகம் பொலியவந்து இறுக்கும்
திருமணி விளக்கின் அலைவாய்ச்
செருமிகு சேஎயொடு உற்ற சூளே!"[37]

என்கிறார் பரணர்.

தலைவனே நீ நேற்று புதுப்புனலில் பரத்தையுடன் நாணிழந்து நீராடினாய். இந்நிகழ்வு ஊரெல்லாம் அலராயிற்று. வேள் எவ்வி என்பான் பகைவரை அழித்த அரிமணவாயில் உறத்தூரில் பெருஞ்சோறு பகலில் அளித்த போது எழுந்த ஆரவாரத்தைவிட அந்த அலர் பெரியதாயிற்று. நான் அதற்காக அஞ்சவில்லை. நீ முருகப்பெருமான் மீது உரைத்த சூள் எமக்குத் துன்பத்தைத் தருவதாக உள்ளது என்று தலைவனைப் பார்த்து நீ செய்த சூள் பொய்த்தால் முருகப் பெருமான் தண்டிப்பாரே என்று நான் அஞ்சுகிறேன் எனும்போது தலைவன் உரைத்த பொய்ச்சூளுக்கே தலைவி வருந்தும் நிலையில் அவளது உணர்வு வெளிப்படுகிறது.

தலைவன் தலைவியைப் பிரிந்து வினைமேற்சென்று காலம் நீட்டித்தான். அதனால் வருந்திய தலைவி தன் நெஞ்சிற்குக் கூறுபவளாய்த் தோழிக்குச் சொல்லுமிடத்து இவ்வுணர்வு வெளிப்படுகிறது. இதனை ஔவையார்,

"புலம்புனிறு தீர்ந்த புதுவரல் அற்சிரம்
நலம்கவர் பசலை நலியவும் நம்துயர்
அறியார் கொல்லோ, தாமே அறியினும்
நம்மனத்து அன்ன மென்மை இன்மையின்
நம்முடை உலகம் உள்ளார் கொல்லோ?
யாங்குஎன உணர்கோ யானே?"[38]

என்றுரைக்கிறார். கழனிகளில் கதிர் ஈன்று முடிந்த காலத்திலே புதிதாய் வந்த முன்பனிக்காலத்தில் நம் அழகைக் கவர்ந்த பசலை நம்மை வருத்தவும் அதனால் நாம் அடையும் துன்பத்தைத் தலைவன் அறிந்திலரோ? அல்லது அவர் அறிந்திருப்பினும் நம் மென்மையான மனத்தைப் போன்று, மென்மை தம் மனத்தின் இல்லாமையால் நம் மங்கையர் உலகத்து இயல்பை

அவர் அறிந்திலரோ! நான் என்னென உணர்வேன்? எனத் தலைவி தனது வருத்தத்தை வெளிப்படுத்துகிறாள்.

இங்குத் தலைவிக்கு வருத்தத்தை உண்டாக்கும் காரணியாக முன்பனிக்காலம் அமைந்துள்ளது குறிக்கத்தக்கது.

தலைவன் பிரிவால் வேட்கை மீதூர்ந்த தலைவி தன் நெஞ்சிற்குச் சொல்லுமிடத்துத் தலைவியின் உணர்வு வெளிப்படுகிறது. இதனை,

“வருவர் என்று உணர்ந்த மடம் கெழுநெஞ்சம்

ஐயம் தெளியரோ நீயே”[39]

என்றுரைக்கிறார் ஔவையார்.

பறம்பு மலையில் வரிசையாய் பறக்கும் குருவிகள் காலையில் சென்று மாலையில் நெற்கதிர்களைக் கொண்டுவந்து தரும்படி அந்நெற்கதிர்கள் உள்ள இடத்தை ஆராய்ந்து திரிந்து சூரியன் மறையும் போது துன்பம் தரும் மாலைப்பொழுதில் தம் இல்லம் நோக்கி அக்குருவி மீண்டு வரும். அவற்றைப் போன்று தலைவன் மீண்டு வருவர் என்று நினைத்த அறியாமை பொருந்திய நெஞ்சமே! உன் ஐயம் நீங்கப்பெற்றுத் தெளிவு அடைவாயாக என்று தன் நெஞ்சிடம் கூறி வருந்துகிறாள். மேலும்,

“............ ............ ............ அவர்

வழிநடைச் சேறல் வலித்திசின் யானே”[40]

என்கிறார். மீனானது நீர் வற்றிய இடத்திலிருந்து நீர் இருக்கும் இடத்துக்குச் செல்வதைப் போல அவர் சென்ற வழியில் நானும் செல்லத் துணிந்துள்ளேன் என்றும் குறிப்பிடுகிறாள். இங்கு ஐந்தறிவு படைத்த அஃறிணை உயிர்கள் கூட மாலைப் பொழுதில் இல்லம் திரும்புகின்றன, ஆனால் ஆறறிவு படைத்த தலைவன் குறித்த காலத்தில் இல்லம்

திரும்பாததைக் குருவியின் மூலம் மறைமுகமாகத் தன் வருத்தத்தைச் சுட்டுகிறாள். இங்கு மாலைப் பொழுதில் இல்லம் திரும்பும் குருவிகள் தலைவியின் வருத்தத்தை ஏற்படுத்தும் காரணியாய் அமைந்துள்ளது. இவ்வாறு தலைவியின் கூற்றில் எட்டு பாடல்களில் இவ்வுணர்வு வெளிப்படுகிறது.

## ஒன்றிற்கும் மேற்பட்ட உணர்வுகள் வெளிப்படுதல்

தலைவி கூற்றுப் பாடல்கள் நான்கில் (நற்.187, 381, குறுந்.24, 43) ஒன்றிற்கும் மேற்பட்ட உணர்வுகள் கலந்து வெளிப்படுகிறது. இவை நெய்தல்திணையில் ஒன்றும், முல்லைத்திணையில் இரண்டும், பாலைத்திணையில் ஒன்றுமாக இடம்பெற்றுள்ளன.

### ஆற்றாமை + ஏக்கம்

தலைவன் பகற்குறி வந்து மீள்கின்றான். அதனைக் கண்ட தலைவி கானற் சோலையும் இருளால் விளக்கம் குறைந்தது. தலைவன் செல்லும் தேரும் மறைந்தது. ஆதலால் இவ்வூரோடு இச்சோலையும் இனி நமக்கு எவ்வகையில் துணையாகுமோ என மனமிழந்து கூறும் நிலையில் இவ்விருவுணர்வுகளும் வெளிப்படுகிறது. இதனை,

“இன மணி ஒலிப்ப, பொழுது படப் பூட்டி
மெய்ம் மலி காமத்து யாம் தொழுது ஒலிய
தேரும் செல் புறம் மறையும்; ஊரொடு
யாங்கு ஆவதுகொல் தானே - தேம் பட
ஊது வண்டு இமிரும் கோதை மார்பின்
மின் இவர் கொடும் பூண், கொண்கனொடு
இன் நகை மேவி நாம் ஆடிய பொழிலே?”[41]

என்னுரைக்கிறார் ஔவையார்.

மேற்க்கில் மறையும் சூரியனால் பல வண்ண மலர்களைக் கொண்ட கடற்கரைச் சோலை தன் தோற்றப் பொழிவை இழந்தது. இப்பொழுது உடம்பின்கண் மிக்குத் தோன்றிய காம உணர்வு, அக்காம உணர்வைத் தணிக்கும் வகையறியாது பின்னே நின்று தொழுது நீங்குமாறு பொழுதும் மறைந்தது.

மணிகள் பல ஒலிக்க குதிரைகள் பூட்டப்பெற்ற தேரும் தான் செல்லுகின்ற புறப்பகுதியும் தெரியாதவாறு மறைகிறது. ஆதலால் இந்த ஊரும், தேனை விரும்பி மலர்களில் படுகின்ற வண்டுகள் ஒலிக்கும் மாலையை அணிந்த மார்பினிடத்தில் ஒளிவிடும் வளைந்த பூணை உடைய நம் கொண்கனுடன் நாம் இனிய மகிழ்ச்சி பெருக விளையாடிய சோலையும், இனி நமக்கு எவ்வகையில் அமையுமோ என வருந்துகிறாள்.

பகற்குறி வந்து மீளும் தலைவனின் பிரிவைத் தாங்காது அவனுடன் கூடி இன்பமடைந்த நிகழ்வுகள் இனி எவ்வாறு நிகழும் என நினைத்து ஏமாற்றமும் அதனால் உண்டான ஏக்கமும் தலைவியை வருத்துகிறது. இங்கு இவ்விருவுணர்வுகளும் மேலிடுவது நோக்கத்தக்கது.

**ஆற்றாமை + வருத்தம்**

தலைவன் வருவதாகக் குறித்த பருவத்தில் வராததைக் கண்டு தலைவி நான் இன்னும் இறந்துபடுதலின்றி உயிரோடு இருக்கிறேன். என் உள்ளமும் நடுங்குகின்றது. இத்துயரை நான் எவ்வாறு ஆற்றியிருப்பேன் என்று கூறுமிடத்து இவ்விரு உணர்வுகளும் வெளிப்படுகின்றன. இங்கு பிரிவிடை ஆற்றாத தலைவியின் துயரை ஔவையார் அருந்துயர் உழத்தல் என்கிறார்.

"நீராலும், காற்றாலும் அலைப்புண்டு நிலை தடுமாறும் மாமரத்தின் தளிரைப் பிரிவுத்துயரில் நடுக்குறும் நெஞ்சுக்கு உவமையாக்கி உணர்த்தும் திறனில் வென்று நிற்கிறார்"[42] என் பெ.சு.மணி குறிப்பிடுகிறார். இதனை,

"அருந்துயர் உழத்தலின் உண்மை சான்ம் எனப்
பெரும் பிறிது இன்மையின் இலேனும் அல்லேன்
கரை பொருது இழிதரும் கான் யாற்று இருகரை
வேர் கிளர் மராஅத்து அம் தளிர் போல
நடுங்கல் ஆனா நெஞ்சமொடு இடும்பை
யாங்கனம் தாங்குவென் மற்றே?"[43]

என்ற அடிகளில் விளக்குகிறார். மேகமானது எல்லாம் ஒன்று திரட்டிப் பெய்யும் கார்காலம் வந்தது. நான் தாங்குவதற்கு அரிய துயரத்தைப் பெற்று வருந்துவதால் அதன் அறிகுறியாக நான் இறந்துவிடின் நான் அவரிடத்து அன்புடையவள் என்பது உறுதியாகும். அவ்வாறு நான் இறக்காததால் அவரிடத்தில் அன்பில்லாதவள் அல்லவா. அத்தகு அன்பில்லாதவளை அவர் அருள் செய்யார் என தனக்குத் தானே ஐயுற்றாள். கரையை மோதி ஓடும் காட்டாற்றின் இடிகரையில் வேர்களெல்லாம் அசைந்து பிடிப்பற்றுத் தோன்றிக் காற்றால் அசையும் மரத்தினது அழகிய தளிரைப் போல நடுக்கம் குறையாத நெஞ்சமொடு இத்துயரை எங்ஙனம் தாங்குவேன் என வருந்துகிறாள். இங்கு "தலைவன் வரவை எதிர்நோக்கி எதிர்நோக்கி வராததினால் ஏமாற்றம் அடைந்திருக்கும் நெஞ்சத்தின் இயல்பைத் தான் நடுங்கும் நெஞ்சம்"[44] என்றுரைக்கிறார் செ.சாரதாம்பாள்.

குறித்த பருவம் வந்தும் மீண்டு வராத தலைவனை நினைத்து ஆற்றாமையும் அதனால் உண்டான வருத்தத்தையும் தலைவி புலப்படுத்துகிறாள். தனது நிலையைக் காட்டாற்று வெள்ளத்தில் மண்

அரிக்கப்பட்டு பிடிப்பற்று கரையில் தள்ளாடும் மரத்தின் வேர்களைப் போல் தான் நடுக்கமுறுவதாக உவமை கூறி தன் உள்ளக்கிடக்கையைப் புலப்படுத்தியிருப்பது சிறப்பிற்குரியது.

## ஆற்றாமை + ஏமாற்றம்

குறித்த பருவம் வந்தும் தலைவன் வினைமுடித்து வரவில்லை. எனவே தலைவியால் பருவத்தில் நிகழும் நுகர்வினைத் துய்க்க முடியவில்லை. தலைவன் வராததால் ஏமாற்றமும் ஆற்றாமையும் கலந்து தலைவியைத் துன்பமடையச் செய்கின்றன. இதனை,

"கருங்கால் வேம்பின் ஒண் பூ யாணர்
என்னை இன்றியும் கழிவது கொல்லோ?
ஆற்றுஅயல் எழுந்த வெண்கோட்டு அதவத்து
எழு குளிறு மிதித்த ஒரு பழம் போல
குழைய கொடியோர் நாவே
காதலர் அகலக் கல்லென் றவ்வே"[45]

என்ற அடிகளில் பரணர் தெளிவுபடுத்துகிறார்.

வேம்பானது இளவேனில் பருவத்தில் பூக்கும் தன்மையுடையது. இப்பருவம் தலைவன் வினைமுடித்து வருவதாகக் கூறிச்சென்ற பருவமாகும். தலைவன் இல்லாமையால் வேனிற்பருவ புதுவரவை (என்னால்) தலைவியால் நுகரப்பெறவில்லை. பூப்பருவம் முடிந்து காய்ப்பருவம் வந்தும் தலைவன் வரவில்லை எனத் தலைவி வருந்துகிறாள், எனவே பிரிவுத் துயரால் மெலிகின்றாள். இதனால் அலர் உண்டாயிற்று.

இங்குத் தலைவியின் மெலிவை ஏழு நண்டுகள் பற்றி மிதித்த ஒரு பழம்போலக் கொடியோர் நாவினால் கூறும் அலர்மொழிகளால் மேலும்

மெலிவுற்றதாகக் கூறுகின்றாள். தலைவன் குறித்தப் பருவத்தில் வராதது கண்டு ஏமாற்றமும் தலைவியின் உடல்மெலிவைக் கண்டு ஊரார் தூற்றும் அலர் இவளது ஆற்றாமை உணர்வையும் வெளிப்படுத்துகிறது.

ஊர் தூற்றும் அலருக்கு ஏழு நண்டுகள் பற்றி சிதைத்த பழத்திற்கு உவமைகூறி தலைவியின் அவல நிலையை வெளிப்படுத்தியிருப்பது நோக்கத்தக்கது.

உரிய காலத்தில் தலைவன் வாராமையால் அவள் உள்ளத்தெழுந்த வருத்தமே முதல்நிலை; அவ்வருத்தத்தால் உடல் மெலிந்து எழுந்த அலரொலி இரண்டாம் நிலை; அதனால் உள்ளம் துன்புற்று தன் நினைவைத் தலைவி பின்னோக்குவது மூன்றாம் நிலையாகும்.

தன் தலைவனின் அருகாமை இன்றிக் கழியும் இந்த இளவேனில் பருவத்தில் உதிர்ந்த அத்திப்பழம் ஒன்றின் மீது ஏழு நண்டுகள் மிதித்து குழைந்ததுபோன்று என் மனதை இவர்களது பேச்சு மேலும் வருத்துகிறது என்கிறாள் தலைவி. "உண்மையிலிருந்து விலகித் தன்னுள் ஆழும் நிலை, புலன் காட்சி (Perception) முழுமையாகச் செயல்படாமையால் தாறுமாறாகவும் கூறுகளாகவும் புலன்காட்சி பெறுதல், ஆரம்பத்தில் கொஞ்சம் கொஞ்சமாகச் சமூகத் தொடர்புகளிலிருந்து விலகி தன்னைத் தானே கூட்டுக்குள் நத்தையாகச் சுருக்கிக் கொள்ளுதல், புற உலகில் ஈடுபாடின்மை, அதிகமாகப் பகற்கனவு காணுதல், இன்ப துன்ப உணர்வுகளை மாற்றி மாற்றி வெளிப்படுத்துதல், பொருத்தமற்ற எதிர்விளைவுகளைத் தோற்றுவித்தல் எனப் படிப்படியாக இந்த மனக்கோட்டம் ஏற்படும் என்பர் உளவியலார்"[46] என இரா.காஞ்சனா

குறிப்பிடுகிறார். இத்தலைவியின் கூற்றில் ஆற்றாமை, ஏமாற்றம் என்ற இவ்விரு உணர்வுகளும் வெளிப்படுவதை உணரமுடிகிறது.

**ஏமாற்றம் + கலக்கம்**

தலைவன் பிரிவால் மெலிந்த தலைவி தன் நிலை குறித்துத் தோழிக்குக் கூறிய நிலையில் இவ்விருவுணர்வுகள் வெளிப்படுகின்றன. தலைவன் நம்மைப் பிரிந்து செல்லமாட்டார் எனக் கருதி நான் அவரது பயணத்தைத் தடுக்காமல் இருந்தேன். நான் துன்பப்படுவேன் என எண்ணி அவர் என்னிடம் சொல்ல மறுத்துவிட்டார். என் நெஞ்சைப் பிரிவுத்துன்பம் மிகவும் கலக்கமடையச் செய்கிறது என்கிறாள். இதனை,

"ஆயிடை இருபேர் ஆண்மை செய்த பூசல்
நல் அராக் கதுவியாங்கு என்
அல்லல் நெஞ்சம் அலமலக்குறுமே"[47]

என்ற அடிகளில் சுட்டுவர் ஔவையார். நானும் தலைவனின் பயணத்தைத் தடுக்கவில்லை, அவரும் என்னிடம் பயணத்தைச் சொல்லவில்லை. இருவர் தங்களுடைய பேராற்றலை வெளிப்படுத்தச் செய்யும் போர்க் களத்தில் ஒருவரைப் பாம்பு தீண்டினாற் போல என நெஞ்சம் துன்பமடைகின்றது என்கிறாள்.

தலைவன் பிரியமாட்டான் என நினைத்த தலைவிக்குத் தலைவனின் பிரிவு ஏமாற்றத்தை உண்டாக்குகிறது. தன்னுடைய அறியாமையால் கலக்கம் அடைவதாகத் தன் உணர்வைப் பிரதிபலிக்கிறாள். இங்கு அவளது கலக்கமுற்ற நெஞ்சிற்குப் போர்க்களத்தில் போர் புரியும் இருவரில் ஒருவரை மட்டும் பாம்பு தீண்டியதைப் போல உள்ளதாக உவமையுடன் ஆசிரியர் சுட்டி தலைவியின் ஏமாற்றத்தையும் அதனால் உண்டான கலக்கத்தையும் நன்கு பதிவுசெய்துள்ளார்.

இவ்வாறு நான்கு பாடல்களில் ஒன்றிற்கும் மேற்பட்ட உணர்வுகள் தலைவி கூற்றில் பதிவுசெய்யப்பட்டுள்ளது.

தலைவிக் கூற்றில் பரணர் பதினைந்து பாடல்களும், ஔவையார் பதினான்கு பாடல்களும் பாடியுள்ளனர். இதில் இருபது பாடல்களில் தலைவியின் உள்ள உணர்வுகள் புலப்படுகின்றன. இங்கு ஒன்பது பாடல்கள் வருத்த உணர்வையும், எட்டுப் பாடல்கள் ஆற்றாமை உணர்வையும் மிகுதியாக வெளிப்படுத்துகின்றன.

தலைவியின் உள்ளத்தில் வருத்த உணர்வு அதிகம் தோன்றுவதற்குத் தலைவன் அவளை விட்டுப் பிரிந்து சென்றதே காரணமாக அமைகின்றது. தலைவன் பொருள் ஈட்டும் நிலையிலும் பரத்தையர்பால் சென்று திரும்பிய நிலையிலும் இவை தோன்றுகின்றன.

காதல் வயப்படும்பொழுது ஆற்றாமை உணர்வும் திருமணத்திற்குப் பிறகு பரத்தையர்பால் தலைவன் பிரிந்து செல்லும் பொழுது வருத்த உணர்வும் மிகுந்து காணப்படுகின்றன. இதற்குத் தலைவியின் புறச்சூழலும், பிரிவால் ஏற்பட்ட உடல் வேறுபாடுமே காரணமாக அமைகின்றன எனலாம்.

தலைவி கூற்றுப் பாடல்களைப் பாடும் பரணர் தலைவியின் உள்ள உணர்வானது குறித்த காலத்தில் வராது காலம் தாழ்த்தும் பொழுது அவள் படும் துன்பத்தையும் தலைவன் பரத்தையர்பால் சென்று திரும்பியபொழுது ஏற்படும் நிலையினையும் ஈண்டு புலப்படுத்தியிருக்கிறார். இங்குத் தலைவனின் செயலையும் அதனால் தலைவிக்கு உண்டாகும் துன்பத்தினையும் ஒரு பெண்ணின் நிலையிலிருந்து ஆண் புலவரான பரணர் பாடியிருக்கின்றார்.

சங்க இலக்கிய அகப்பாடல்கள் தலைவி கூற்றுக் காதல் பாடல்களைப் பற்றிக் கூறும்பொழுது இன்பத்தினை மிகுதியாக வெளிப்படுத்துவதில்லை. மாறாக ஆற்றாமை, வருத்தம், ஏமாற்றம், கலக்கம், பிரிவு போன்ற துன்பத்தைத் தரக்கூடிய உணர்வுகள் அதிகம் மேலிடுகின்றன.

ஔவையாரும் பரணரும் சற்றேரக்குறைய ஒரே அளவிலேயே தலைவி கூற்றுப் பாடல்களைப் பாடியுள்ளனர். இருவரும் தலைவியின் உள்ள உணர்வைப் பெண்ணின் நிலையிலிருந்து வெளிப்படுத்தியுள்ளனர்.

உளவியல் வல்லுநர்கள் மனித உணர்வுகளைப் பற்றிக் கூறும்போது காதலை எல்லா உயிரினங்களுக்கும் இயல்பான ஒன்று என வரையறுக்கின்றனர். இதில் காதல் வயப்படும் பெண்ணானவள் பல இடையூறுகளுக்கு மத்தியில் எவ்வாறு அவள் அதிலிருந்து மீள்கின்றாள். இதில் அவள் அடைந்த துன்பம், ஊரார் பழிச்சொல், பெற்றோர் இற்செறிப்பு போன்றவை நிகழும்பொழுது அவளது மன உணர்வின் மூலமாக உளப்போராட்டத்தைப் பதிவுசெய்வதே இதன் நோக்கமாகும்.

ஆண் கூற்றில் அவனது மனஉணர்வை ஆசிரியர்கள் வெளிப்படுத்துவதைவிட பெண்ணின் மனஉணர்வை வெளிப்படுத்தும் பொழுதுதான் அவர்களுடைய உளப்போராட்ட உணர்வு மேலோங்கிச் சிறப்பாக அமைகிறது எனலாம்.

குறிப்பாகத் தலைவி கூற்றில் தலைவியின் உள்ளமானது தலைவன் பொருள் ஈட்டப் பிரியும்பொழுது ஏற்படும் உள்ளப் போராட்டத்தைவிட பரத்தைமீது காதல் கொண்டு பிரிந்து மீண்டு வரும் நிலையிலேயே

உள்ளப்போராட்ட நிலைக்குத் தலைவியின் உள்ளம் மிக அதிகமாக ஆட்படுகின்றது.

ஔவையார் பாடல்களில் நனவிலி மன உணர்வின் வருத்தங்கள் மிகுதியும் வெளிப்படுகின்றன. இவ்வருத்தங்கள் குவிந்த இடமான நெஞ்சின் இயல்பினை ஔவையாரின் பல பாடல்களில் உணரமுடிகிறது. ஔவைக்கு உவமையும் உருவகமும் வருத்தத்தின் மிகுதியைப் புலப்படுத்த ஓடிவரும் மொழித் திறன்களாகும். நனவிலி மன உணர்வின் வருத்தங்களை உவமை உருவகம் மூலம் கூறல், முரண் சொற்களில் அமைத்தல், ஆண் பெண் மனவேறுபாடுகளைக் கூறல், தன்னிலைக்குத் தானிரங்கும் நிலை, தன்னையே வருத்திக்கொள்ளுதல் போன்ற நிலைகளில் வெளிப்படுத்தும்பொழுது இன்னும் சிறக்கிறது.

## தொகுப்புரை

- பரணர், ஔவையார் பாடிய அகப்பாடல்களில் தலைவி கூற்றுப் பாடல்கள் மட்டும் இருபத்தொன்பதாகும்.

- திணை அடிப்படையில் குறிஞ்சியில் நான்கும், முல்லையில் மூன்றும், மருதத்தில் பத்தும், நெய்தலில் மூன்றும், பாலையில் ஒன்பதுமாக இடம்பெற்றுள்ளன.

- இவ்விருபத்தொன்பது பாடல்களில் இருபத்திநான்கு பாடல்களில் தலைவியின் உள்ள உணர்வுகள் வெளிப்படுகின்றன. ஐந்து பாடல்களில் உணர்வுகள் வெளிப்படவில்லை.

- செறிவார்ந்த உள்ள உணர்வுகளைப் பிரதிபலிக்கும் கூற்றாளர்களில் தலைவி குறிப்பிடத்தக்கவள்.

- தலைவி கூற்றில் ஆற்றாமை, ஏக்கம், ஏமாற்றம், கலக்கம், வருத்தம் எனும் ஐந்து உணர்வுகள் தனித்தும், ஒன்றிற்கு மேற்பட்ட உணர்வுகள் இணைந்தும் வெளிப்படுகின்றன.

- தலைவியின் வருத்த உணர்வு பாலைத்திணைப் பாடல்களிலேயே மிகுதியாக வெளிப்படுகின்றது. அதற்குக் காரணம் தலைவனின் பிரிவே ஆகும்.

- தலைவன் கொடிய பாலைவழியில் சென்றதை நினைத்து வருந்துகின்ற நிலையிலும், தலைவன் பரத்தையின்பால் பிரிந்துசென்றதால் மனம் வருந்திய நிலையில் முடவன் தேனைப் பார்த்துத் தன் உள்ளங்கை நக்குவதுபோல நான் தலைவனை நினைத்தாலே இன்பம் தருவதாகக் கூறும் தலைவி எனக்குக் கண்ட அளவிலேயே இன்பம் தரும் தலைவன் பரத்தையருக்கு மெய்யுற்றாலும் உள்ளம் இனிப்பதில்லை என்பதை முடவன் நிகழ்வைக் கூறி தன் ஆற்றாமையைப் புலப்படுத்துகிறாள்.

- தன் நெஞ்சை முன்னிலைப்படுத்தி அதற்கு உணர்வுடையதுபோல கூறும் நிலையிலும், தலைவன் பரத்தையர் இல்லம் சென்று மீண்டுவந்தபோதும், தலைவன் பிரிந்த நிலையில் மாலைப் பொழுதுவந்த நிலையிலும் தலைவியின் உள்ளத்தில் ஆற்றாமை என்ற உணர்வு மேலோங்குகிறது.

- தலைவியின் துன்பத்துக்குக் காரணம் அசைந்து வீசும் தென்றல் காற்று என்கிறாள். என் துன்பத்தை அறியாது இவ்வூரானது தூங்குகிறது எனவும் என் நிலையைத் தெரிவிக்க முட்டுவேனா? தாக்குவேனா? ஒலி எழுப்புவேனா என வருந்திக் கூறுவது தலைவியின் ஏக்க உணர்வை மேலிடுகிறது.

♦ தலைவி ஏக்க உணர்வின் மேலீட்டால் தலைவனைச் 'சான்றோர் அல்லர்' என மொழிகின்றாள். குறித்த பருவம் வந்தும் தலைவன் வராதநிலையிலும் ஏக்கம் என்ற உணர்வை வெளிப்படுத்துகிறாள் தலைவி.

♦ களவுக்காலத்தில் தலைவியோடு கூடிய தலைவன் கூறிய மொழிகள் பொய்த்த தருணத்தில் மானைக் கொடி பற்றுக்கோடு இல்லாமல் தவிப்பதுபோல தானும் தலைவனைக் காணாத நிலையிலும், கார்கால புது மழைவெள்ள இன்பத்தைத் தலைவன் இல்லாத நிலையில் துக்க இயலாத தருணத்திலும், தலைவன் வரைந்துகொள்ளாது களவு நீட்டித்தபோது நீர் உண்ணும் பகுதியில் இருக்கும் பாசியைப் போல இருந்தது என கூறும் நிலையிலும் ஏமாற்றம் என்ற உணர்வு தலைவியின் கூற்றில் காணமுடிகிறது.

♦ தலைவன் இரவுக்குறியில் வரும்போது அவனுக்கு ஏற்படும் இயற்கைத் துன்பங்களை நினைத்து வருந்தும்போது தலைவி கலக்கத்தை எய்துகிறாள். இங்குத் தலைவனின் மீது அதிக அன்பு கொண்டவள் என்பதைத் தெளிவுபடுத்துகிறாள்.

♦ தலைவன் பரத்தையர் பால் சென்று திரும்பிய தருணத்திலும் தலைவன் பிரிவால் உடல் வேறுபாடு அடைந்த நிலையில் அவர் என்னை உடன் அழைத்துச்சென்றிருந்தால் நானும் வருந்தேன் அவரும் வருந்தார் என்று கூறும் நிலையிலும், இரவுக்குறியில் தலைவனைச் சந்திக்க தடையாக இருப்பவைகளை நினைக்கும் தருணத்திலும், வெள்ளிவீதி கணவனைத் தேடி சென்றதைப் போல நானும் செல்ல விரும்பினேன் என்று கூறும் நிலையிலும், தலைவன் உரைத்த சூள் பொய்யான போதும் வருத்தம் என்ற உணர்வு மேலிடுகின்றது.

♦ தலைவிக்கு வருத்தத்தை வெளிப்படுத்தும் உந்து சக்தியாக (அ) காரணிகளாக மாலைப்பொழுது, முன்பனிக்காலம் போன்ற பொழுதுகளும் மாலை நேரத்தில் இல்லம் திரும்பும் குருவிகளும் அமைந்துள்ளன.

♦ தலைவி தான் வருத்தமுற்றிருப்பதை நேரடியாகக் கூறாமல் தனது உடல் உறுப்புகள் மாற்றமடைந்திருப்பதைக் கொண்டு தனது உணர்வை வெளிப்படுத்துகிறாள்.

♦ தலைவன் பகற்குறி வந்து மீண்டு செல்லும்போது ஏற்படும் பிரிவுத்துயரம் தலைவியைத் தலைவன் பிரிவால் ஏமாற்றமும் அதனால் உண்டான ஏக்கமும் வெளிப்படுகிறது.

♦ தலைவன் வருவதாகச் சொல்லிச் சென்ற காலத்தில் வராதது கண்டு நான் இன்னும் இறக்காமல் உயிரோடு இருக்கிறேனே என்று கூறுமிடத்து ஆற்றாமை, வருத்தம் என்ற உணர்வு மேலிடுகின்றது.

♦ தலைவன் குறித்த பருவத்தில் பூப்பருவம் முடிந்து காய் பருவம் வந்தும் வராததால் அப்பருவத்தில் நிகழும் இன்ப நுகர்வினைத் துய்க்க முடியவில்லையே என்று ஏமாற்றம் கலந்த ஆற்றாமை அவளைத் துன்பமடையச் செய்கின்றது.

♦ ஊர் தூற்றும் அலருக்கு ஏழு நண்டுகள் பற்றிய பழத்தைப்போல தன் நிலை இருப்பதாக உவமை குறிப்பிடுவது தலைவியின் உள்ள உணர்வினை மேலோங்குகிறது.

♦ தலைவன் தன்னைப் பிரியமாட்டான் எனக் கருதிய தலைவி அவன் பிரியவே ஏமாற்றமடைந்தாள். போர்க்களத்தில் போர் புரியும் இருவரின் ஒருவரை மட்டும் பாம்பு தீண்டியதைப் போல தன் நெஞ்சம்

கலக்கமுற்றதாகக் குறிப்பிடுகிறாள். இத்தருணத்தில் ஏமாற்றம் கலந்த கலக்கமானது தலைவியின் உள்ளத்தில் எழுகிறது. இவ்வாறு நான்கு பாடல்களில் ஒன்றுக்கு மேற்பட்ட உணர்வுகள் தோன்றுகின்றன.

- தித்தனின் உறையூர் புறங்காடு, கழுவுள் என்பவனுக்குரிய காமூரை பதினான்கு வேளிர் ஒன்றுசேர்ந்து தாக்கியது போன்ற வரலாற்றுக்கூறுகள் இடம்பெற்றுள்ளன.
- வேள் எவ்வி அரிமணவாயில் உறத்தூரில் பகலில் பெருஞ்சோறு அளித்ததையும், இமயமலை பற்றிய குறிப்பும் பதிவுசெய்யப்பட்டுள்ளது.
- வெள்ளிவீதி காட்டின்வழியே தனது கணவனைத் தேடிச்சென்றதையும் குறிக்கப்பட்டுள்ளது.
- கார்காலத்தில் கொன்றைமலர்கள் பூத்தலையும், காயாஞ்செடியின் மழைக்கால நிறத்தையும், நண்டையும் பற்றி அறியமுடிகிறது.

## சான்றெண் விளக்கம்

1. மு.வரதராசன், இலக்கிய வரலாறு, ப.10

2. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்காப்பியம், கற்பியல், நூ.5

3. தொல்.களவு : 113, 99 ; தொல்.கற்பு ; 153 ; தொல்.பொருள் ; 209

4. குறுந்.39:1-9

5. குறுந்.60

6. குறுந்.91:1-4

7. அகம்.236:11-15

8. அகம்.367:13-16

9. இரா.காஞ்சனா, இலக்கியமும் உளவியலும், ப.152

10. குறுந்.28

11. திருக்குறள்.1168

12. குறுந்.102

13. து.சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல், ப.28

14. செ.சாரதாம்பாள், பெண்ணிய உளப்பகுப்பாய்வும் பெண் எழுத்தும், ப.44

15. குறுந்.183:1-4

16. அகம்.273

17. குறுந்.36:1-5

18. எஸ்.பி.ஆதிநாராயணன், உணர்ச்சி கலைக் களஞ்சியம் (தொகுதி-2), ப.230

19. அ.சு.நாராயணப்பிள்ளை, உள்ளக்கிளர்ச்சி கலைக்களஞ்சியம் (தொகுதி-2), ப.365

20. குறுந்.200:1-3

21. ஐ.க.பாண்டியன், ஔவையின் உளவியல் & ப்ராய்டு - லெக்கானின் மன அலசல், பக்.167-168

22. மேலது, ப.168

23. குறுந்.399:1-2

24. தெ.கலியாணசுந்தரம், சங்க இலக்கிய அகப்பாடல்களில் உணர்வுப் போராட்டம், ப.116

25. குறுந்.158:4-6

26. பெ.சு.மணி, சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும், ப.234

27. குறுந்.354:1-2

28. மு.இராசமாணிக்கம், உளவியல் துறைகள் (முதல் தொகுதி), பக்.383-384

29. அகம்.6:10-22

30. அகம்.11:11-15

31. அகம்.122:1-18

32. அகம்.135:1-6

33. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.96

34. மேலது, ப.93

35. அகம்.147:10-14

36. செ.சாரதாம்பாள், பெண்ணிய உளப்பகுப்பாய்வும் பெண் எழுத்தும், ப.48

37. அகம்.266:16-21

38. அகம்.273:4-9

39. அகம்.303:15-16

40. அகம்.303:19-20

41. நற்.187:4-10

42. பெ.சு.மணி, சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும், ப.226

43. நற்.381:1-6

44. செ.சாரதாம்பாள், பெண்ணிய உளப்பகுப்பாய்வும் பெண் எழுத்தும், ப.49

45. குறுந்.24:1-6

46. இரா.காஞ்சனா, இலக்கியமும் உளவியலும், ப.149

47. குறுந்.43:3-5.

இயல் - 4

# தோழி கூற்றில் உள்ளப் போராட்டம்

தொல்காப்பியர் அகப்பொருளைத் தனிநபர் வழக்காகக் கருதாமல் உலகியல் வழக்காகவே கருதினார். இவர் ஐந்திணைத் துறைகளை ஒன்றன்பின் ஒன்றாக நிகழ்வு முறைப்படி கூறவில்லை. தலைவன், தலைவி, தோழி, செவிலி, பரத்தை என்ற மாந்தர்கள் நிலையில் வைத்தே காதல் தொடர்புகளைச் சுட்டியுள்ளார். அதனால் காதல் மாந்தரின் உள்ளோட்டங்கள், உணர்வுகள், உணர்ச்சிகள், வேட்கைகள் வெளிப்படுகின்றன. சங்க இலக்கியச் செய்யுட்களில் அகமாந்தர்களின் உணர்வுகள் மேலிடுகின்றன. சங்க இலக்கியத்துள் அகக் கூற்று நிகழ்த்துவோரில் தோழி சிறப்பிடம் பெறுகிறாள். இவள் தலை மக்களது ஒழுகலாறுகளுக்குப் பெரிதும் துணைநிற்பவள். மதிநுட்பம் நிறைந்தவள். உணர்வு வயப்படாமல் அறிவுநிலையில் செயல்படக்கூடியவள். இத்தகையவளின் கூற்றில் ஆய்வுக்குட்பட்ட புலவர்கள் இருவரும் 25 பாடல்களைப் பாடியுள்ளனர். இப்பாடல்களின் வாயிலாகத் தோழியின் உள்ளப்பாங்கை ஆய்ந்து கூறுவது இவ்வியலின் நோக்கமாகும்.

## தோழியின் உள்ளம்

தலைவியின் உள்ளம் மனப்போராட்டத்திற்கு உள்ளாகின்ற தருணத்தில் தோழியின் உள்ளமும் பாதிக்கப்படுகிறது. தலைவி உணர்வுகளுடன் தோழியின் உணர்வுகளும் ஒத்துணர்வாகவே அமைகின்றன. காதல் உணர்வில் ஈடுபடும் தலைவன், தலைவியரிடையே ஒரு நெறியாளராகத் தோழி செயல்படுகிறாள். நெறியாளராகத் திகழ அறிவுபெற்றிருக்கவேண்டும். அத்தகுதி தோழியிடம் திறம்பட

அமைந்துள்ளது. இக்கருத்திற்கு இராம.பெரியகருப்பனின் "பெருமை மிக்க தலைவனும், மென்மை மிக்க தலைவியும், அறிவுமிக்க தோழியுமாகிய பாத்திரப் படைப்பும், தலைவியின் அவல நிலையை அழகுற எடுத்துக்காட்டும் கருத்தமைதியும் சிந்திக்கத் தக்கனவாகும்"[1] என்ற கருத்து அரண்செய்யும்.

தோழி கூற்றாக உள்ள 25 பாடல்களில், பத்துப்பாடல்கள் குறிஞ்சித்திணையின; பத்துப்பாடல்கள் மருதத்திணையின; மூன்று பாடல்கள் நெய்தல்திணையின; இரண்டு பாடல்கள் பாலைத் திணையினதாகும். முல்லைத்திணைப்பாடல்கள் இடம்பெற்றில. இப்பாடல்களில் தோழியின் உள்ளம்,

- நலனழிந்த தலைவியை ஆற்றுவித்தல்
- தலைவனை வரைவுக்குத் தூண்டுதல்
- தலைவனின் ஒழுக்கக்கேட்டை எடுத்து மொழிதல்
- தலைவனின் அன்பு மேலீட்டைத் தலைவிக்குக் கூறுதல்

என்ற நிலைகளில் செயலாற்றுகின்றது.

## நலனழிந்த தலைவியை ஆற்றுவித்தல்

நலனழிந்த தலைவியைத் தோழி தேற்றி ஆற்றுவிப்பதாக ஐந்து பாடல்கள் உள்ளன. இவை குறிஞ்சி, நெய்தல், பாலை ஆகிய மூன்று திணைகளைச் சார்ந்து வெளிப்படுகின்றன. தலைவியை உயிரெனக் கருதியதால் தோழியின் உள்ளம் தலைவியை ஆற்றுவிக்கத் துணிந்தது.

தலைவன் தான் வினைவயிற் பிரிந்து செல்வதைத் தோழியிடம் உணர்த்துகிறான். அதனைக் கேட்ட தோழி தலைவியிடம் பெரிதும் நகைப்புக்குரிய செயல் ஒன்றைக் கேள். காதலர் நம்மை இங்கே தனியே

விட்டுவிட்டுச் செல்வர், அதுவரை நாம் நம் மனையகத்தே தனித்து வருந்தியிருக்க வேண்டும் என்கிறார் என தலைவன் பிரியப் போகிறான் என்பதைத் தலைவியிடம் தெரிவிக்கும் சொல்லாடலால் தலைவியை உடனே துன்பத்திற்குள்ளாக்காமல் ஆற்றுப்படுத்துகிறாள். இதனை,

"பெருநகை கேளாய், தோழி! காதலர்
ஒரு நாள் கழியினும் உயிர் வேறுபடூஉம்
பொம்மல் ஓதி! நம் இவண் ஒழியச்
செல்ப என்ப, தாமே; சென்று
தம் வினை முற்றி வரூஉம் வரை, நம் மனை
வாழ்தும் என்ப, நாமே"[2]

என்கிறார் ஔவையார்.

பிரிந்தால் உயிர் தரித்து வாழ்தல் தலைவியால் இயலாது என்பதைத் தலைவன் நன்கு அறிவான், அறிந்தும் அவன் பிரியக் கருதினான். அவன் மீளும் வரை தம் மனையில் வாழ்தல் வேண்டினான். அவன் பிரியின் உயிர் வாழாத தலைவி எங்ஙனம் வாழ்ந்திருப்பாள்? இதை உணராது தலைவன் உரைப்பதால் தலைவனின் கூற்று நகைப்பைத் தந்தது என தலைவியிடம் குறிப்பிடுகிறாள். இங்குத் தலைவன் பிரியப்போகிறான் என்பதை நேரடியாகக் கூறாமல் அவன் கூறும் செயலானது நகைப்பைத் தந்தது என மறைமுகமாகக் குறிப்பிட்டுத் தலைவியைத் துன்பமடையச் செய்யாமல் ஆற்றுவிக்கிறாள்.

தலைவனுக்கு பகற்குறியும் பின் இரவுக்குறியும் மறுத்தலால் வருத்தமடைந்த தலைவிக்குக் கோசர்கள் செய்த சூழ்ச்சி சில காலமே நின்றதைப் போல உன் வருத்தமும் சிறிதுகாலமே நிற்கும். அதனால்

இவ்விரு குறிகள் மறுத்ததற்கும் நீ மனம் வருந்தவேண்டாம் என தலைவியை தோழி ஆற்றுப்படுத்துகிறாள். இதனை,

"........................ நன்னன்

நறுமா கொன்று ஞாட்பில் போக்கிய

ஒன்றுமொழிக் கோசர் போல

வன்கட் சூழ்ச்சியும் வேண்டுமால் சிறிதே"[3]

என்றுரைக்கிறார் பரணர்.

களவொழுக்கத்தில் நின்ற தலைவி பகலிலும் இரவிலும் தலைவன் மார்பினை அணைத்து மகிழும் இன்பத்தை விரும்பினாள் தோழி. ஊரையும், தன் சுற்றத்தார்களையும் (ஐயரையும்) காட்டி பகற்குறியையும், தாயும், தமரையும் காட்டி இரவுக்குறியையும் மறுத்தாள். தான் மறுத்தது வரைதல்வேண்டி என்பது நோக்கத்தக்கது. ஆதலின் வருந்தவேண்டாம் என ஆறுதல் கூறுகிறாள். இவ்விருவரிடமும் அன்பு இல்லாததுபோல் தோன்றினாலும் கோசர் செய்த சூழ்ச்சி சிறிய காலமே நிலைத்ததுபோல அதுவரை ஆற்றியிருக்குமாறு தலைவியை 'கோசரின் வரலாற்றை' உவமையாகக் கொண்டு ஆற்றுப்படுத்துகிறாள்.

காப்புமிகுதிக்கண் ஆற்றாதவளாகிய தலைவிக்குத் தோழி அறத்தோடு நின்று தலைவியைத் தேற்றுகிறாள். அறத்தொடு நிற்றல் என்பது தலைமக்கள் வாழ்வில் தோன்றும் சிக்கல்களுக்கு (அ) பிரச்சினைகளுக்கு முக்கியத் தீர்வுகாண்பதாகும். அது குறித்து வ.சுப.மாணிக்கனார், "அறம் எனப்படுவது பல பண்புகளையும் தழுவிய பொதுச்சொல்லாயினும் ஈண்டு பெண்ணுக்குரிய முதற் பண்பான கற்பையே குறிக்கும். கற்பென்னும் கடைப்பிடியில் நின்று களவொழுக்கத்தைப் பெற்றோருக்கு வெளிப்படுத்தல் என்பது இத்துறையின் பொருள்"[4] என விளக்குவர்.

இத்தகைய அறத்தொடு நிற்றலில் தோழி செயல்படுத்துகிறாள். இதனை,

"ஒல்வை ஆயினும் கொல்வை ஆயினும்
நீ அளந்து அறிவைநின் புரைமை; வாய்போல்
பொய்ம்மொழி கூறல் - அது எவனோ?
நெஞ்சம் நன்றே, நின் வாயினானே"[5]

என்ற அடிகளில் சுட்டுகிறார் பரணர். தோழியை அறத்தொடு நிற்குமாறு தலைவி கூறினால் ஒழிய; தோழி தானே அறத்தொடு நிற்கமாட்டாள். களவு குறித்து பொய்மொழி கூறுவதால் பயன் ஒன்றுமில்லை என்பதை அறிந்த தோழி; தாய்க்கு அறத்தொடு நின்றதாகத் தலைவியிடம் உரைப்பதாக இப்பாடல் அமைந்துள்ளது. காப்பு மிகுதிக்கண் தலைவி தன்னுடைய காமத்தை வெளிக்காட்டாது பொறுத்துக் கொள்ளுதல் வேண்டும். இல்லையேல் அவனுடன் உடன்போக்கில் செல்லத் துணிதல் வேண்டும். தலைவியின் நுதல்அழகு அழிவதையும், கண்எழில் வாடுவதையும், மேனியின் கவின் கெடுவதையும் காணப்பெறாதவள் தோழியாதலால் அவள் அறத்தொடு நிலையை மேற்கொண்டாள். இவ்வாறு தோழி அறத்தொடு நின்று தலைவியை ஆற்றுப்படுத்துகிறாள்.

வரைவிடை வேறுபடும் தலைவியை அவர் வரையும் நாள் சிலவே என்றும், அலருக்கு அஞ்சவேண்டாம் என்றும் கூறி தலைவியை ஆற்றுப்படுத்துகிறாள். இதனைப் பரணர்,

"சிறுவீ ஞாழல் வேர் அலைப் பள்ளி
அலவன் சிறுமனை சிதைய, புணரி
குணில்வாய் முரசின் இரங்கும் துறைவன்
நல்கிய நாள் தவச் சிலவே; அலரே"[6]

எனச் சுட்டுகிறார்.

கடல் அலைகளின் ஓசை, முரசினைக் குணிலால் அடிக்கும் ஓசை போன்றதாக உவமிக்கப்பட்டுள்ளது. நண்டின் சிறு வீடானது (பொந்து) அலைகளால் அழிக்கப்பெறுதல் போல தலைவனின் களவுக் கூட்டம் அலர் மொழியால் இடையீடு படுதல் குறிக்கப்பெறுகிறது. தலைவி தன்னுடைய மனையில் தனித்து நிற்கும் துயர் நீங்க மணமுரசு முழங்க தலைவன் வருவான் எனக் கூறி தலைவியை ஆற்றுவிக்கிறாள். உன்னை வரையும் நாள் சிலவே என்பதை "துறைவன் நல்கிய நாள் தவச்சிலவே" என்ற அடியின் மூலம் குறிப்பிடுகிறாள். ஊர் தூற்றும் அலருக்கு அஞ்சாதே எனவும் ஆறுதல் மொழி கூறுகிறாள் தோழி.

ஓதல் பொருட்டுத் தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் வினையை முடித்து மீண்டுவந்தான். அச்செய்தியைப் பிறர் வாயிலாகத் தோழி அறிந்தாள். அன்று இரவு ஆற்றாமையால் வருந்தும் தலைவிக்குத் தலைவன் வரவை உணர்த்த வாடைக் காற்றுக்குக் கூறுபவளாய்க் கூறுகிறாள். இதனைப் பரணர்,

"பனி அடூஉ நின்ற பானாட் கங்குல்
தமியோர் மதுகை தூக்காய் தண்ணென
முனிய அலைத்தி முரண்இல் காலை
கைதொழு மரபின் கடவுள் சான்ற
செய்வினை மருங்கின் சென்றோர் வல்வரின்"[7]

என மொழிகிறார். கொடிய நள்ளிரவில் உனக்கும் அவருக்கும் பகை சிறிதும் இல்லாதிருக்கும் போதே கணவரைப் பிரிந்து தனித்து இருக்கும் மகளிரின் வலிமையின் தன்மையினைச் சற்றும் ஆராயாது அவர்கள் உன்னை வெறுக்குமாறு குளிரவீசி வருத்துகின்றாய். அரத்தால் அறுத்துச் செய்த அழகிய வளையல் தோளினின்று கழன்று விழும்படி முற்றுப்பெறாத

இல்வாழ்க்கையை முற்றுவிக்க வேண்டி கையால் தொடும் மரபுடைய கடவுள் தன்மை கொண்ட ஓதல் வினைக்காகச் சென்ற தலைவன் திரும்பி வருவாராயின் கரிகால் வளவனை ஒன்பது மன்னர்களும் தன் குடைகளை விட்டுத் தப்பியோடியதுபோல நீயும் என்னிடம் தோற்று ஓடுவாய் என்கிறாள்.

தலைவன் வரப்போகின்றான் என்பதை நேரடியாகக் கூறாமல் குளிரைச் சாடுவதுபோல மறைமுகமாகச் சுட்டுகிறாள்.

"ஒன்பது குடையும் நண்பகல் ஒழித்த
பீடுஇல் மன்னர் போல
ஓடுவை மன்னால் - வாடை நீ எமக்கே"[8]

என்ற அடியின் மூலம் வரலாற்றுச் செய்தியினை வாடைக்காற்றோடு ஒப்புமைப்படுத்திக் கூறியிருப்பது சாலச்சிறந்தது. வாடைக்காற்றினை நோக்கிக் கூறும் தோழி தலைவர் மீண்டு வருகின்றமையைத் தலைவிக்குக் குறிப்பாக உணர்த்த வேண்டி கூறுவதுபோல தலைவியை ஆற்றுப்படுத்துகிறாள் தோழி.

இவ்வாறு ஐந்து பாடல்களில் தலைவன் பிரிவைத் தாங்காது துன்புறும் தலைவியை ஆற்றுப்படுத்தும் நிலையில் தோழி செயல்படுகிறாள்.

## தலைவனை வரைவுக்குத் தூண்டுதல்

வரைவு என்பதற்குத் திருமணம் என்று பொருள். தலைவியைத் திருமணம் செய்துகொள்ளத் தலைவனைத் தூண்டுகிறாள் தோழி. அவளின் திறத்தினைப் புலவர் குழந்தை "இருவகை குறியினும் பலகாலும் வந்து தலைவன் தலைவியைக் கூடிச் செல்லும் களவு வெளிப்படின் ஊரார் அலருக்கு அஞ்சி சுற்றத்தார் வெளியில் சென்று வரவிடாமல் தலைவியை

இற்செறிப்பர் எனவும், இருள் நிறைந்த நேரங்களிலெல்லாம் கொடிய விலங்குகளும் பாம்பு முதலிய நஞ்சுயிர்களும் உள்ள அரிய வழியில் வருவதால் தலைவனுக்கு இடையூறு நேர்ந்தாலும் நேரக்கூடும் எனவும் தோழி அச்சமுற்று, இக்களவு ஒழுக்கம் நமது குடிப்பிறப்புக்கும் பெருமைக்கும் ஏற்றதன்று. இனி நீர் இவளை மணந்துகொள்வதே தகுதியாகும் என்று தலைவனிடம் கூறுவாள்"[9] எனக் கூறுவர். தோழி தலைவன் தலைவியர் செயல்களை அறிவு நிலையில் நின்று நாடுகின்றாள். தலைவன் களவின்பத்தையே விரும்பி, திருமணம் செய்யாது காலம் நீட்டிப்புச் செய்வதுண்டு. இந்நிலையில் தலைவிக்குக் கவலை தோன்றும், "அடக்கப்பட்ட வெறுப்பால் கவலையும், கவலையால் வெறுப்பும் மாறிமாறித் தோன்றுகின்றன"[10] என்ற உளவியல் கருத்து இங்கு நினையத்தக்கது.

தலைவன் களவு நீட்டிப்பதால் வரத்தகும் கேடுகளை நன்குணர்கிறாள். அதனால் அவனை விரைந்து தலைவியை மணந்துகொள்ளத் தூண்டுகிறாள். இவ்வகையில் தோழி கூற்றில் புலவர்கள் இயற்றியதாக ஆறு பாடல்கள் (நற்.247, 295, குறுந்.89, 393, அகநா.148, 222) உள்ளன. இவற்றுள் மூன்று குறிஞ்சித்திணையது, இரண்டு மருதத்திணையது, ஒன்று நெய்தல் திணையதாகும்.

களவின்கண் வந்துபோகும் தலைவன் வினைவயிற் பிரியும் காலத்தில் தோழி அவனைத் தடுத்து, நீ! அருளினும் அருளாவிடினும் உன்னுடைய வழி நடக்கும் தலைவியின் நெற்றியில் படர்ந்த பசலைக்கு நீயே மருந்து என்பதை உணர்ந்து அகன்று செல்க என்று காலந்தாழ்த்தாது மணம்புரியத் தூண்டுகிறாள் தோழி. இதனைப் பரணர்,

“நல்காய் ஆயினும் நயன் இல செய்யினும்
நின் வழிப்படூஉம் என் தோழி நல்நுதல்
விருந்து இறைகூடிய பசலைக்கு
மருந்து பிறிது இன்றிமை நற்கு அறிந்தனை சென்மே”[11]

என்கிறார்.

நீ எமக்கு அருள் செய்தபோதும் அருளாது அவளால் விரும்பப் பெறாதவற்றைச் செய்தபோதும் என் தோழி நின் உள்ளம் சென்ற வழி நடக்கும் இயல்புடையவள். அவளுடைய நல்ல நெற்றியில் பசலைநோய் புதிதாகத் தோன்றித் தங்கியது. அந்நோய்க்கு நீயே மருந்து வேறு மருந்தில்லை என்பதை உணர்ந்து பின் அவளைப் பிரிந்து செல்க! என்கிறாள்.

பசலைக்குப் பிற மருந்தில்லை. தலைவன் உடன் இருத்தலே மருந்து. அங்ஙனம் எப்போதும் உடனிருத்தல் களவில் இயலாது. எனவே விரைந்து மணம் முடிப்பதே தலைவியின் துயர் தீரச் செய்யும் என்பதை உணர்த்தித் தலைவனை வரைவுக்குத் தூண்டுகிறாள்.

தோழி, தலைவியின் களவொழுக்கத்தை அன்னை அறிந்தாள். அதனால் தலைவி இற்செறிக்கப்பட்டாள். இனிக் களவு நடைபெறாது. எம் நலம் கெட நாங்கள் நீங்குகின்றோம் நீ வாழ்வாயாக என்று கூறி களவு இல்லத்தாருக்குத் தெரிந்ததால் இனி நடைபெறாது. நடைபெற வேண்டுமானால் நீ தலைவியை விரைந்து மணம்செய்துகொள் என்கிறாள். இதனை,

“கலி மடைக் கள்ளின் சாடி அன்ன எம்
இள நலம் இற்கடை ஒழியச்
சேறும் வாழியோ முதிர்கம் யாமே”[12]

என்றுரைக்கிறார் ஔவை.

இற்செறிக்கப்பட்ட நிலையில் தலைவியின் நலன்கள் கெட்டொழியும். அவளும் உயிர் வாழாள் எனக் கூறி வரைதல் வேண்டினாள். வேற்று நாட்டு நாவாய் பல தோன்றும் பெருந்துறை என்பதன் மூலம் தலைவியின் தந்தை செல்வச் செழிப்புடையவன் என்பதை உணர்த்துகிறாள். நாவாய் வந்து செல்வது போல இனிக் களவில் வந்து பெயரல் வேண்டாம் எனவும் குறிப்பிடுகிறாள். சாடி தலைவிக்கும் கள் அவளின் நலத்திற்கும் உவமையாயின. என் இளநலத்தை இனிக் களவின்கண் நுகர இயலாது என்பதைத் தாய் அமைத்த அருங்காவலாகக் குறிக்கின்றாள். 'மணந்தால் உன்னை மணப்போம் அன்றி வேற்று மணத்திற்கு உடன்படோம் என்பதை 'முதிர்கம் யாமே' என்கிறாள்.

மணந்தால் உன்னை மணப்போம் இல்லையாயின் வேற்று மணத்திற்கு உடன்படோம்; இறுதிவரை இப்படியே இருப்போம் ஆதலால் நீ விரைந்து தலைவியை மணக்கவேண்டும் என தலைவனை வரைவுக்குத் தூண்டுகிறாள் தோழி.

பாவையின் ஒத்த அழகுடைய தலைவி பரந்த அடிப்பகுதியையுடைய உரலில் தன் அன்புக்குரியவரைத் தலைவராகக் கொண்டு வள்ளைப்பாட்டுப் பாடி இடித்தாள். இதைக் கேட்ட ஊரார் அலர் தூற்றினர். தலைவன் சிறைப்புறமாக வந்து நிற்கும்போது ஊரர் தூற்றியதை அவன் கேட்குமாறு வரைந்துகொள்ள தூண்டினாள். இதனை,

"பாஅடி உரல பகுவாய் வள்ளை
ஏதில்மாக்கள் நுவறலும் நுவல்ப
அழிவது எவன்கொல் இப்பேதை ஊர்க்கே?"[13]

என்ற அடிகளில் வெளிப்படுத்துகிறார் பரணர்.

தலைவி வள்ளைப்பாட்டில் தலைவன் பெயரைக் கூறி இடித்தமை அறிந்த ஊரார் அவனைத் தலைவியோடுத் தொடர்புப்படுத்தி அலர் மொழிந்தனர். தலைவன் சிறைப்புறமாக வந்து நின்றபோது தோழி தலைவி கூறுவதைப் போல 'அவனை வரைந்துகொள்ள வேண்டுதல்' இவ்வள்ளைப் பாட்டின் நோக்கமாகும்.

தலைவி பாடிய வள்ளைப்பாட்டைக் கொண்டு தோழி தலைவனை வரைவுக்குத் தூண்டுகிறாள். வரைவைத் தூண்டுவதற்கு வள்ளைப்பாட்டு ஒரு கருவியாகத் தோழிக்கு அமைகின்றது.

தலைவன், களவில் இரவிலும் பகலிலும் வந்துசென்றதால் உண்டான அலரைச் சுட்டிக்காட்டித் தோழி அவனை வரைந்துகொள்ளுமாறு வேண்டுகிறாள். இதனைப் பரணர்,

"மயங்குமலர்க் கோதை குழைய மகிழ்நன்
முயங்கிய நாள் தவச்சிலவே, அலரே"[14]

என்கிறார்.

மகிழ்ச்சியைத் தரும் தலைவன் விரவிய மலர்களால் ஆன தான் அணிந்த மாலை குழையுமாறு உன்னை இறுகத் தழுவிய நாட்கள் என்னவோ மிகச் சிலவேயாகும். ஆனால் அயலார் கூறும் பழிச்சொல்லோ கூகைக் கோழியார் பாடிய வாகை எனும் ஊர்ப்புறத்தில் நடைபெற்ற போரில் பாண்டியனின் ஏவல் வலியவனாக விளங்கிய அதிகன் இறந்தபோது எழுந்த வெற்றி ஆரவாரத்தைவிட இவ்வூரார் தூற்றும் அலர் பெரியதாக அமைந்துள்ளது என்கிறாள். இங்குத் தோழி தலைவிக்கு எழுந்த அலரின் மிகுதியைக் காட்டி அவனை விரைந்து மணம் செய்துகொள்ளுமாறு

வேண்டுகிறாள். தலைவிக்கு எழுந்த அலர் தோழி வரைவைத் தூண்டுவதற்குக் காரணியாய் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

தலைவன் களவொழுக்கத்தை மேற்கொண்டிருந்தான். அப்பொழுது தலைவி வீட்டில் அவளுக்குக் காவல் கடுமையாயிற்று, அதனால் தலைவியை மணந்துகொள்ளுமாறு வேண்டி பகற்குறியைத் தோழி மறுக்கிறாள். இதனைக் குறிஞ்சித்திணையில் பரணர்,

“கடும்பரிக் குதிரை ஆஅய் எயினன்
நெடுந்தேர் ஞமிலியொடு பொருது, களம் பட்டென
காணிய செல்லாக் கூகை நாணி
கடும்பகல் வழங்கா தாஅங்கு இடும்பை
பெரிதால் அம்ம இவட்கே அதனால்
மாலை வருதல் வேண்டும் - சோலை
முளைமேய் பெருங்களிறு வழங்கும்
மலைமுதல் அடுக்கத்த சிறுகல் ஆறே”[15]

என்ற அடிகளில் சுட்டுகிறார்.

விரைந்து செல்லும் குதிரையையுடைய ஆய் எயினன் என்பவன் நெடுந்தேரினையுடைய மிஞிலியோடு போரிட்டுக் களத்தில் இறந்தான். பறவைகளின் பாதுகாவலனான அவனை; மற்ற பறவைகள் போல் காண இயலாத பகற்குருடாகிய கூகை நாணி வெளியில் நடமாடாது துன்பம் அடைந்ததைப்போல பகற்பொழுதில் உன்னைக் காணவரும் தலைவிக்கு உண்டாகும் துன்பமும் பெரியதாக விளங்குகிறது. அதனால் மூங்கிலின் முளையைத் தின்னுகின்ற பெரிய களிறு திரிகின்ற மலையின் பாறைகள் நிறைந்த பாதை வழியாக நீ மாலைப் பொழுதில் வா என்றுரைக்கிறாள்.

பெரிய களிறுகள் திரியும் பாறைகள் நிறைந்த பாதையில் வரச்சொல்வது பின் இவ்வழியும் துன்பத்தைத் தரும் என இரவுக்குறியை மறுத்து தலைவியை மணந்து செல்லுமாறு வற்புறுத்துவதற்கே ஆகும்.

தோழி அறிவோடு பகற்குறி துன்பத்தையும் இரவுக்குறி துன்பத்தையும் எடுத்துக் கூறி தலைவியை மணம்முடிக்கத் தலைவனைத் தூண்டுவது அவளது மதிநுட்பத்தைப் புலப்படுத்துகிறது.

தலைவன் தலைவியை மணம் செய்துகொள்வதில் விருப்பமின்றிக் களவொழுக்கத்தை விரும்பினான். அவனுக்குத் தலைவியை மணந்துகொள்ள அறிவுறுத்த எண்ணினாள் தோழி. தலைவி பிரிவு ஆற்றாமையால் மெய்வேறுபட்டிருப்பதைத் தலைவனுக்குணர்த்தும் பொருட்டு அவன் சிறைப்புறமாக வந்து நிற்கும்போது அறியாதவள் போல தலைவியிடம் குறிப்பிடுகிறாள். இதனை,

“ஆட்டன் அத்தி நலன்நயந்து உரைஇத்
தாழ்இருங் கதுப்பின் காவிரி வவ்வலின்
மாதிரம் துழைஇ, மதிமருண்டு அலந்த
ஆதிமந்தி காதலற் காட்டி
படுகடல் புக்க பாடல்சால் சிறப்பின்
மருதி அன்ன மான் புகழ் பெறீஇயர்
சென்மோ வாழி, தோழி! பல் நாள்
உரவுஉரும் ஏறொடு மயங்கி
இரவுப்பெயல் பொழிந்த ஈர்ந்தண் ஆறே”[16]

என மொழிகிறார் பரணர்.

தோழி, உன் மேனி நலம் கெடுகின்றது. ஆதலால் நான் ஒன்றைச் சொல்வேன். ஆட்டனத்தியைக் காவிரி கவர்ந்தாள். அவனை மருதி என்பவள் அவன் மனைவி ஆதிமந்திக்குக் காட்ட; தான் கடலுக்குள் புகந்தாள். அந்த மருதியைப் போன்று பெரும்புகழ் பெறுவதற்காகப் பலநாளும் வலிய இடியுடன் கூடிய பெருமழை பெய்தலால் உண்டான ஈரமிக்க சேற்று வழியில் நாமும் தலைவனைத் தேடி செல்வோம். அவ்வாறு தேடிச்சென்று அவனைக் காணமாட்டாது உயிர் துறப்போமாயின் மருதி என்பாளைப் போல நாமும் புகழ்பெறுவோம் என்றுகூறி தலைவியின் மேனி வேறுபாட்டைக் குறித்து அவனை மணந்துசெல்லுமாறு தூண்டுகிறாள்.

இவ்வாறு தலைவிக்கு அலர் மிகும்போதும், தலைவி இற்செறிக்கப்படும்போதும், நலன் இழக்கும்போதும் தலைவனைத் தோழி அறிவுநிலையில் வரைவுக்குத் தூண்டுகிறாள்.

## தலைவனின் ஒழுக்கக் கேட்டை எடுத்து மொழிதல்

குடும்ப வாழ்க்கை நடத்தும் தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தால் தலைவிக்கு ஆற்றாமையும் தவிப்பும் உண்டாகின்றன. தன்னுடைய உடைமைப் பொருளைப் பிறர் நுகரும்போது தலைவியின் உள்ளத்தில் சினமும் ஆற்றாமையும் தோன்றுவது இயல்பே. எனவே, தலைவன் பரத்தை இல்லிற்றிருந்து மீண்டு வரும்போது வீட்டினுள் வர அனுமதி மறுக்கிறாள் தோழி. இத்துறையில் தோழி கூற்றாக இவ்விரு புலவரும் இயற்றியதாக எட்டு (நற்.270, 310, குறுந்.258, 116, அகநா.226, 246, 326, 386) பாடல்கள் உள்ளன. இதில் ஒரு பாடல் நெய்தல் திணையையும் மற்ற ஏழு பாடல்கள் மருதத்திணையையும் சார்ந்தனவாகும்.

பரத்தையிடம் சென்ற தலைவன் மீண்டு வரும்போது தலைவியுடன் தோழி அவனை எதிர்கொண்டாள். தோழி தலைவனிடம், அறியாத தலைவியிடம் நீ காட்டும் அருளைவிட என்னிடம் காட்டும் அருள் பெரிது. ஆயினும் நீ பிரிந்தது நன்னன் செய்த கூந்தல் கயிற்றை விடக் கொடியது. நின் தகுதியை அதனாலே மறந்துவிடுவேன் என்று சினம் தோன்ற உரைக்கிறாள். இதனை,

"எற் பெரிது அளித்தனை நீயே பொற்புடை
வரி உளைப் பொலிந்த பரியுடை நன்மான்
வேந்தர் ஒட்டிய ஏந்து வேல் நன்னன்
கூந்தல் முரற்சியின் கொடிதே;
மறப்பல் மாதோ, நின் விறற் தகைமையே"[17]

என பரணர் சுட்டுகிறார்.

தனது கூந்தலில் துகள் படியும்படி வருந்துவாள். நிலத்தில் உருளும் எந்திரம் போல செயலற்று எம்முன் வருவாள். உன்னைப் பிரிந்ததால் அழகை இழந்ததோடு இல்லாமல் அறியாதவளாய் நிற்பாள். இவளினும் என்னிடம் பெரிய அருள் செய்கின்றனை. ஆனாலும் ஒன்று கேள்! விரைந்து செல்லக்கூடிய குதிரைப் படையைக் கொண்டு நன்னன் தோற்று ஓடிய பகை மன்னரின் நாட்டுப் பெண்களின் கூந்தலை அறுத்துக் கயிறாகச் செய்தான். அவன் செய்த கொடுமையை (செயலை)விட நீ தலைவியைப் பிரிந்து பரத்தையிடம் சென்றது மிகக் கொடுமை வாய்ந்ததாகும். ஆதலால் உன் வலிமையை நான் மறந்துபோனேன் என்று தலைவியை விடுத்துப் பரத்தையிடம் சென்ற தலைவனின் ஒழுக்கமற்ற செயலை வன்மையாகக் கண்டிக்கிறாள் தோழி.

பரத்தையரிடமிருந்து திரும்பி வந்த தலைவன் தலைவியின் ஊடலைத் தீர்க்க வேண்டி அவள்பால் விறலியைத் தூதாக அனுப்புகிறான். தூதாக வந்த விறலியிடம் தோழி எங்கள் தலைவனுக்கு வேறொரு பரத்தையை நாளையே கொடுக்க உடன்பட்டு வந்த விறலியே! உன்னுடைய பயனற்ற சொற்களை அப்பரத்தையரின் தாயாரிடத்தும் சென்று கூறுவாயாக என்று தலைவனின் ஒழுக்கக்கேட்டைச் சினந்து கூறுகிறாள். இதனைப் பரணர்,

"........................................ நாளை

மகட்கொடை எதிர்ந்த மடம் கெழு பெண்டே!

தொலைந்த நாவின் உலைந்த குறு மொழி

உடன்பட்டு ஓராத் தாயரொடு ஒழிபுடன்

சொல்லலை கொல்லோ நீயே"[18]

என்கிறார்.

தலைவனுக்கு நாளையும் ஒரு பரத்தையைக் கொண்டுவந்து கொடுத்தலாகிய செயலை மேற்கொண்ட அறிவற்ற விறலியே! உண்மை பேசுதலைத் தவிர்த்த நாவினால் நிலை குலைந்த இழிந்த உன் சொல்லுக்கு உடன்பட்ட அப்பரத்தையரின் தாயாருடன் நீ விரைவாகச் சென்று அணுகி பாணன் வைத்திருக்கும் உள்ளே ஒன்றுமில்லாத தண்ணுமை இசைக்கருவியைப் போல உள்ளகத்துப் பொருளற்ற பொய்ம்மொழிகளைச் சொல்லி அவரையும் பிறர் முயங்குமாறு செய்யலாமல்லவா என்று உரைக்கிறாள்.

விறலி பேசும் சொற்கள் உள்ளகத்தில் எழும் பொய்மொழிகளைச் சாடி தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தைக் கடிந்து வாயில் மறுக்கின்றாள் தோழி.

பரத்தையர் சேரி சென்று வரும் தலைவனுக்குத் தோழி வாயில் மறுக்கின்றாள். இந்நிலையில் தலைவனின் செயலை எடுத்து மொழிகிறாள். இதனை,

"அழிசி ஆர்க்காடு அன்ன இவள்

பழிதீர் மாண்நலம் தொலைவன கண்டே"[19]

என்ற அடிகளில் பரணர் வெளிப்படுத்துகிறார்.

அழிசி என்பவனுடைய ஆர்க்காடு எனும் ஊர் தலைவியின் அழகுக்குச் சான்றாகக் கூறப்பட்டுள்ளது. இத்தகு அழகு நலன் எல்லாம் தலைவியை விட்டு நீங்குவது கண்டு, நீ எம் சேரிக்கு வரவேண்டாம். உன்னுடைய மாலையும் எமக்குத் தரவேண்டாம் எனவும் மொழிகிறாள். மேலும் தலைவனே உன்னுடைய செயலானது ஊர் மக்களால் அலர் தூற்றப்படுவதற்குக் காரணமாக அமைந்தது என்றாள்.

பரத்தையர் பால் சென்று வரும் தலைவனை இனி நீ என் ஊருக்கு வரவேண்டாம் என சினத்துடன் கடிந்து உரைப்பது அவனின் நேர்மையற்ற ஒழுக்கக்கேட்டை எடுத்துரைக்கிறது.

தலைவன் பரத்தை ஒருவளுடன் நீராடினான். பின் அவன் வீட்டிற்கு வந்தபோது தலைவி ஊடியிருந்தாள். அவளது ஊடலைத் தீர்த்துத் தன்னுடன் தலைவியைக் கூடும்படி தோழியை வேண்டினான். தோழி நீ நீராடியதை நான் அறிந்ததைக் கூறி அவனது வேண்டுகோளை மறுக்கும் நிலையில் இப்பாடல் அமைந்துள்ளது. இதனைப் பரணர்,

"எரி அகைந்தன்ன தாமரை இடை இடை

அரிந்து கால் குவித்த செந்நெல் வினைஞர்

கள் கொண்டு மறுகும் சாகாடு அளற்று உறின்

ஆய் கரும்பு அடுக்கும் பாய்புனல் ஊர!
பெரிய நாண் இலைமன்ற பொரி எனப்
புன்கு அவிழ் அகன்துறைப் பொலிய ஒள் நுதல்
நறு மலர்க்கு அணவரும் குறும் பல் கூந்தல்
மாழை நோக்கின் காழ் இயல் வன முலை
எஃகுடை எழில் நலத்து ஒருத்தியொடு நெருநை
வைகுபுனல் அயர்ந்தனை என்ப அதுவே
பொய்புறம் பொதிந்து யாம் கரப்பவும் கையிகந்து
அலர் ஆகின்றால் தானே"[20]

என்கிறார்.

நீர்வளம் வாய்ந்த ஊரனே! நீ நாணமற்றவன் ஆவாய். நீ அழகுடைய இளையவள் ஒருத்தியுடன் நீராடினாய். அச்செய்தியை நாங்கள் மறைக்கவும் அடங்காது, பாண்டியன் சேர, சோழரை வென்றபோது போர்க்களத்தில் எழுந்த ஆரவாரத்தைப் போல எங்கும் அலரானது பரவியது. ஆதலால் உன் வேண்டுகோளின்படி தலைவியை அமைதிப்படுத்த முடியாது என தோழி தலைவ்னிடம் சொல்கிறாள்.

வண்டி சேற்றில் அழுந்தும்போது அதன் சக்கரங்களைத் தாங்கும் உறுதி இல்லாத கரும்புகளை அடைதருவதுபோல உன்னிடம் ஊடல் கொண்டுள்ள தலைவியின் சினத்துக்கு என்னை வாயில் வேண்டுகிறாய். அது என்னால் இயலாத ஒன்று என்கிறாள் தோழி. வண்டியைத் தாங்கும் வன்மையற்றது கரும்பு. அதுபோல தலைவியின் சினத்தைத் தாங்கும் வன்மை இல்லாதவள் நான். வண்டி சேற்றில் ஆழ்வது உறுதி அதுபோல தலைவியின் சினம் மிகுதல் உறுதி என்று உவமைகூறி அவன் ஒழுக்கத்தைச் சாடி வாயில் மறுக்கிறாள் தோழி.

தலைவன் பரத்தையுடன் காவிரி நீர்த்துறையில் நீராடிவிட்டு இல்லம் திரும்பினான். அப்பொழுது தலைவியின் கோபத்தைத் தணிக்கத் தோழியை வேண்டுகிறான். நீ செய்த தவறு பெரிது ஆதலால் என்னால் அவளது ஊடலைப் போக்க இயலாது என்று குறிப்பிடுகிறாள். இதனை,

"நெடுவெண் மருதொடு வஞ்சி சாஅய
விடியல் வந்த பெருநீர்க் காவிரித்
தொடிஅணி முன்கை நீவெய் யாளொடு
முன்நாள் ஆடிய கவ்வை இந்நாள்
வலிமிகும் முன்பின் பாணனொடு மலிதார்த்
தித்தன் வெளியன் உறந்தை நாள் அவைப்
பாடுஇன் தெண்கிணைப் பாடுகேட்டு அஞ்சிப்
போர் அடு தானைக் கட்டி
பொராஅது ஓடிய ஆர்ப்பினும் பெரிதே"[21]

என்ற அடிகளில் சுட்டுகிறார் பரணர்.

நீண்ட வெண்மையான மருத மரத்துடன் வஞ்சி மரத்தையும் சாய்த்து விடியற்காலையில் பெருகிவந்த வெள்ளத்தையுடைய காவிரியாற்றில் வளையல் அணிந்த பரத்தையுடன் நீ நீராடினாய். அதனால் அலரானது எழுந்தது. அந்த அலர் கட்டி என்பனிடம் போரிடவந்து சிணப்பாறை ஒலி கேட்டு போரிடாமல் ஓடிய போது எழுந்த ஆரவாரத்தைவிட பெரியதாகும் என்கிறாள்.

நீரில் ஆடும் மகளிர் அவ்விளையாட்டு வெறுப்பின் கோரைகளை ஒடித்து கொக்குகளை விரட்டுவர். அத்தீயசெயல் போல நீ தலைவியை விடுத்துப் பரத்தையருடன் நீராடி பழியைப் பெற்றாய். தலைவியின் சினம்

என்னால் போக்க இயலாது என தலைவனின் தீயசெயலைச் சுட்டி தோழி வாயில் மறுக்கின்றாள்.

பரத்தையரிடம் சென்றுவந்த தலைவனுக்கு வாயில் மறுக்கின்றாள் தோழி. தலைவனே நீ செய்த தவறும் பெரிது. அதனால் உண்டான தலைவியின் சினமும் பெரிது எனக் கூறி வாயில் மறுக்கிறாள். இதனை,

"போதுஆர் கூந்தல் நீவெய்யோ ளொடு
தாதுஆர் காஞ்சித் தண்பொழில் அகல்யாறு
ஆடினை என்ப, நெருநை; அலரே"[22]

என்றுரைக்கிறார் பரணர்.

மலர்கள் நிறைந்த கூந்தலையுடைய உன்னால் விரும்பப்பட்ட பரத்தையுடனே பூந்துகள் மிக்க காஞ்சி மரச் சோலை சூழ்ந்த அகன்ற ஆற்றில் நேற்று நீ விளையாடினாய் என்று பலரும் உரைக்கின்றனர். நீ பரத்தையுடன் விளையாடியதால் எழுந்த அலர் கரிகால் வளவன் வெண்ணிப் பறந்தலையில் வேளிர் பதினொருவர் சேர, பாண்டியர் ஆகியவரை வென்ற போது அழுந்தூரில் எழுந்த ஆரவாரத்தைவிடப் பெரியதாக உள்ளது என்று தலைவியை அலர் தூற்றும் மக்களின் பேச்சு தலைவிக்குத் துன்பத்தைத் தந்தது. அதனால் நான் உனக்காக அவளிடம் வாயில் நேரமாட்டேன் என்று தலைவனின் ஒழுக்கக் கேட்டைத் தோழி எடுத்துரைத்து வாயில் மறுக்கிறாள்.

பரத்தையர் சேரிக்குச் சென்ற தலைவன் திரும்பிவந்தவன் நீ மீண்டும் அவ்விளம் பரத்தையுடன் சென்று நீராடுக என்று வாயில் மறுக்கின்றாள். இதனை,

"ஊரல் அவ்வாய் உருத்த தித்தி
பேர் அமர் மழைக் கண், பெருந் தோள், சிறு நுதல்
நல்லள் அம்ம, குறுமகள் - செல்வர்
கடுந்தேர் குழித்த ஞெள்ளல் ஆங்கண்
நெடுங் கொடி நுடங்கும் மட்ட வாயில்
இருங் கதிர்க் கழனிப் பெருங் கவின் அன்ன
நலம் பாராட்டி, நடை எழில் பொலிந்து
விழவில் செலீஇயர் வேண்டும்"[23]

என்ற அடிகளில் சுட்டுகிறார் பரணர்.

ஊரலாகிய அழகுடைய தேமலையும், பெரும் போர் செய்யும் குளிர்ந்த கண்களையும், பெருந் தோளையும் சிறிய நெற்றியையும் உடைய உன்னால் விரும்பப்படும் இளம் பரத்தை அழகில் சிறந்தவள். பழையன் என்பவன் பகைவர் மீது செலுத்திய வேலைப் போல அவளால் பார்க்கப்பட்டவர் அவள் கண்களினின்று தப்பமுடியாது. அவளுடன் புனல் விழாவில் செல்லுதல் உனக்குத் தகுந்ததே. ஆதலால் நீ அங்கே சென்று அவ்விளம் பரத்தையுடன் நீராடுவாய் என்று வாயில் வேண்டியவனை வாயில் மறுத்து அவனைத் திரும்பச் செல்ல மொழிகிறாள்.

தலைவியைவிட இளம்பரத்தை இன்பம் தரக்கூடியவள். அதனால் நீ இங்கே நிற்காமல் மீண்டும் பரத்தையர்பால் சென்று நீராடு என தலைவனைச் சாடுகிறாள் தோழி.

தலைவனின் பரத்தமை ஒழுக்கம் காரணமாகத் தலைவி அவன் மேல் ஊடல் கொண்டிருந்தாள். அதைத் தீர்க்கும்படி தோழியிடம் தலைவன் வேண்டுகிறான். அதற்கு அவள் உடன்படாமல் மறுக்கின்றாள். இதனைப்

பரணர்,

"...................... மறையினள்

மெல்ல வந்து நல்ல கூறி

மை ஈர் ஓதி மடவோய்! யானும் நின்

சேரியேனே; அயல் இலாட்டியேன்

நுங்கை ஆகுவென் நினக்கு என தன் கைத்

தொடு மணி மெல் விரல் தண்ணெனத் தைவர

நுதலும் கூந்தலும் நீவி

பகல் வந்து பெயர்ந்த வாணுதற் கண்டே"[24]

என்றுரைக்கிறார்.

தலைவனே! பரத்தை மறைவாக வந்து நல்ல சொற்களைச் சொன்னாள். நெற்றியையும் கூந்தலையும் தடவினாள். இவ்வாறு செய்த அவள் திரும்பிப் போனாள். அதைக்கண்டு, பாணனுடன் போரிட்ட ஆரியப் பொருநனின் முழவுத் தோள்கள் அப்பாணனின் கையில் அகப்பட்டு ஒழியக் கிடந்த கிடக்கையைக் கண்டு கணையன் என்பவன் நாணம் கொண்டதுபோல நான் நாணம் கொண்டேன் என்று தோழி தலைவனிடம் மொழிகின்றாள்.

மேலும் நீர்நாய் இயற்கையாய்க் கிடைத்த மீனைத் தின்னாமல் அகப்படாத வாளை மீனைத் தேடித் திரிவதுபோல; தலைவனே நீயும் இயற்கையாக உனக்குத் தலைவியாக உள்ளவளைக் கூடி இன்பம் அடையாமல் கைவிட்டுப் பரத்தையைத் தேடித் திரிகின்றாய் என்று தோழி மறைமுகமாகச் சாடுகிறாள். இதனை,

"பொய்கை நீர்நாய்ப் புலவு நாறு இரும் போத்து

வாளை நாள் இரை தேரும் ஊர!

நாணினென் பெரும! யானே"[25]

என்ற அடிகளில் தோழி தலைவனின் ஒழுக்கக் கேட்டை நீர்நாயின் செயலுடன் ஒப்புமைப்படுத்திச் சுட்டுவது குறிப்பிடத்தக்கது.

இவ்வாறு பரத்தையர் பால் சென்று தலைவியின் வீட்டிற்குத் திரும்பி வரும் தலைவனை வாயில் மறுத்து அவனுடைய ஒழுக்கக்கேட்டை மொழிவதாகத் தோழி கூற்றுப் பாடல்களில் இவ்எட்டுப் பாடல்களும் அமைந்துள்ளன. இவ்வெட்டுப் பாடல்களும் பரணர் பாடி ஆண்களின் ஒழுக்கக்கேட்டை மொழிவதும் இவை அனைத்தும் மருதத்திணையில் இடம்பெறுவதும் நோக்கத்தக்கது.

## தலைவனின் அன்பு மேலீட்டை உணரத்துதல்

தலைவன் தலைவியிடத்து அன்புகொண்டவன். அவளைத் தன்னுயிரெனக் கருதுபவன். இவனின் நற்பண்புகள் தோழியின் உள்ளத்தையும் நெகிழச்செய்தன. தலைவனின் அன்பை வெளிப்படுத்துமாறு இரண்டு பாடல்கள் (குறுந்.298, அகநா.178) அமைந்துள்ளன. இவ்விரு பாடல்களையும் பரணரே பாடியுள்ளார். தலைவனின் ஒழுக்கக்கேட்டை அதிக பாடல்களில் சுட்டும் பரணரே அவனின் அன்பையும் எடுத்துக்கூற மறக்கவில்லை.

தலைவியைக் காண இரவும் பகலும் வந்தும் அல்லற் குறிப்பட்டும் அவளைப் பெறாமல் காமம் பெருகி தலைவன் வருந்திய நிலையில் தலைவனின் அன்பை எடுத்துரைத்து அவனை ஏற்றுக்கொள்ளுமாறு தலைவியை வேண்டுகிறாள். இதனைப் பரணர்,

"சேரி சேர மெல்ல வந்துவந்து
அரிது வாய்விட்டு இனிய கூறி
வைகல்தோறும் நிலம் பெயர்ந்து உறையும் அவன்
பைதல் நோக்கம் நினையாய் - தோழி"[26]

என சுட்டுகிறார்.

சேரியில் உள்ளவர் அனைவரும் தம்முடைய இல்லம் திரும்பிய பின் அடியோசை எழாமல் பல நாள் வந்து, அருமையாக எப்போதாவது வாய்திறந்து, தான் நினைத்ததைக் கூறாமல் நம் செவிக்கு இனியவாகிய சில சொற்களைக் கூறி நாள்தோறும் வந்து சென்று வேற்றுநிலத்தில் தங்கி நாம் குறை மறுக்கமாட்டோம் என்ற நம்பிக்கையில் உயிரோடு தங்கியுள்ள தலைவனின் உள்வருத்தத்தைப் புலப்படுத்தும் பார்வையை நீ நினைக்கவில்லை என்று தலைவனின் அன்பு மேலீட்டை உணர்த்துகிறாள்.

தலைவன் களவிற் கூட்டம் நீட்டிக்க விரும்பிய வழி அதனைத் தலைவி ஏற்றுக்கொள்ள தோழியானவள் அவனின் அன்பை எடுத்துக்கூறி களவை நீட்டிக்க முயற்சிக்கிறாள்.

அகுதை மகளிர்க்கு இளம்பிடிகளை நல்கிய பரிசிலைப்போல தலைவன் நெடும் பொழுது இரந்து நம்மை நம்பி நிற்பது வேறு ஒரு காரியத்தை அதாவது களவு கூட்டத்தை நீட்டிக்க விரும்பியே என்று குறிப்பிடுகிறாள்.

களவு ஒழுக்கத்தை மேற்கொண்டிருந்த தலைவன் தலைவியை மணந்துகொள்ள தன் சுற்றத்தாருடன் வரும் செய்தியை அறிந்த தோழி அதனைத் தலைவிக்குக் கூறி அவனின் அன்பை எடுத்துரைக்கிறாள். இதனை,

"உணர்ந்தனை புணர்ந்த நீயும் நின்தோட்
பணைக்கவின் அழியாது துணைப்புணர்ந்து, என்றும்
தவல்இல் உலகத்து உறைஇயரோ தோழி
எல்லையும் இரவும் என்னாது கல்லெனக்
கொண்டல்வான் மழை பொழிந்த வைகறைத்
தண்பனி அற்சிரம் தமியோர்க்கு அரிது என
கனவினும் பிரிவு அறியலனே அதன் தலை
முன்தான் கண்ட ஞான்றினும்
பின்பெரிது அளிக்கும்தன் பண்பினானே"[27]

என்ற அடிகளில் பரணர் சுட்டுகிறார்.

தலைவனுடன் ஊடிப்பின்பு உணர்ந்திடும் நீயும் உன் தோளின் மூங்கில் போன்ற அழகு ஒழியாது உன் தலைவனுடன் சேர்ந்து வாழ்ந்து பின்னர் என்றும் கெடாத மறுமை உலகத்தில் தங்கி வாழ்வீர்கள் என வாழ்த்துகிறாள். பகல், இரவு என்றில்லாமல் மேகமானது ஒலியுடன் பெருமழையைச் சொரிந்த விடியற்காலத்தே குளிர்ந்த பனியை உடைய அற்சிரக் காலம், பனிக்காலம் தனித்து இருப்பவர்களுக்கு அதைத் தாங்குவதற்கு அரியதாகும் என்று கனவிலும் உன்னைப் பிரிவதை அறியாதவன்.

மேலும் தன் நற்குணத்தால் முதன்முதல் தான் கண்ட நாளினும் பின்பு எந்த நாளினும் ஒத்த மாறாத அருள் செய்பவன் தலைவன் என்று தலைவிமீது கொண்டுள்ள அன்பைத் தோழி நன்கு புலப்படுத்துகிறாள்.

## தொகுப்புரை

- பரணரும் ஔவையாரும் தோழி கூற்றில் பாடியதாக 25 பாடல்கள் உள்ளன. இப்பாடல்கள் முல்லைத் திணையைத் தவிர்த்து பிற நான்கு திணைகளில் இடம்பெற்றுள்ளன. இவ்விரு புலவர்களும் குறிஞ்சி, மருதத்திணைகளில் பாடிய தோழி கூற்றுப் பாடல்கள் அதிகம் இடம்பெற்றுள்ளன.

- நலனழிந்த தலைவியை ஆற்றுப்படுத்துதல், தலைவனை வரைவுக்குத் தூண்டுதல், தலைவனின் ஒழுக்கக்கேட்டை எடுத்து மொழிதல், தலைவனின் அன்பு மேலீட்டைத் தலைவிக்குக் கூறுதல் என்ற நிலைகளில் தலைவியில் உள்ளம் அறிவு நிலையில் செயல்படுகிறது.

- தோழி கூற்றில் ஔவையார் நான்கு பாடல்களையும் பரணர் 21 பாடல்களையும் பாடியுள்ளனர்.

- இத்தோழி கூற்றுப் பாடல்கள் 25 இல் 21 இல் தோழியின் உள்ளம் அறிவு நிலையில் செயல்படுவது புலனாகிறது.

- தலைவன் பொருள் ஈட்ட பிரியக் கருதிய நிலையிலும், தலைவனுக்குப் பகற்குறியும் இரவுக்குறியும் மறுத்தபொழுது வருத்தமடையும் தலைவிக்குக் கோசர்கள் செய்த சூழ்ச்சி சில காலமே இருந்ததைப் போல உன் வருத்தமும் சில காலமே இருக்கும் என்று கோசர் வரலாற்றுச் சூழ்ச்சியைக் கூறி ஆற்றுப்படுத்தும் நிலையிலும், காப்பு மிகுதிக்கண் ஆற்றாத தலைவிக்குக் கூறும் நிலையிலும், வரவிடை வேறுபடும் தலைவியை அவர் வரையும் நாள் சிலவே என்றும் அலருக்கு அஞ்சவேண்டாம் என்று கூறும் நிலையிலும், ஓதல் பொருட்டுப் பிரிந்து சென்ற தலைவன் வரவைப் பிறர் மூலம் அறிந்து துன்பப்படும் தலைவிக்கு

அவன் வரவைத் தெரிவிக்கும் நிலையிலும் தோழி தலைவியை ஐந்து பாடல்களில் ஆற்றுப்படுத்துகிறாள்.

♦ தோழி தலைவனை வரைவுக்குத் தூண்டுவதாக ஆறு பாடல்கள் உள்ளன. இவை குறிஞ்சி, மருதம், நெய்தல் திணையைச் சார்ந்துள்ளன. பிற திணைகளில் இத்துறையைச் சார்ந்த தோழி கூற்றுப் பாடல்கள் இல்லை.

♦ தலைவியின் நெற்றியில் படர்ந்துள்ள பசலைக்கு நீயே மருந்து என்பதை உணர்த்தியும், தலைவியின் களவொழுக்கத்தைத் தாய் அறிந்து இற்செறிக்கப்பட்டதைக் கூறி வரைந்தால் உன்னை மட்டுமே வரைவோம் இல்லையேல் இப்படியே முதிர் நிலையிலேயே இருப்போம் என்று கூறி தன் நிலையை உணர்த்தியும், தலைவி உன் பெயரைச் சொல்லி வள்ளைப்பாட்டுப் பாடி உரல் இடித்த போது எழுந்த அலரை சொல்லியும், இரவு, பகல் வந்து சென்றதால் எழுந்த அலரைத் தலைவனுக்குத் தெரியப்படுத்தியும், களவொழுக்கத்தை நீட்டிக்க தலைவன் விரும்பியபொழுதும் தோழி அவனை வரைவுக்குத் தூண்டுகிறாள்.

♦ பரத்தையர் பால் பிரிந்துசென்ற செயல் நன்னன் கூந்தலில் கயிறு திரித்ததைவிட கொடுமையானது என்றும், வாயில் வேண்டி வந்த விறலியைப் போதும் உன் பயனற்ற சொற்களைப் பரத்தையின் தாயிடம் சொல் என்று இடித்துரைத்தும், வண்டி சேற்றில் புதையும்போது சக்கரங்களைத் தாங்க வலிமை இல்லாத கரும்புகளை அடைதருவதுபோல தலைவியின் சினத்துக்கு என்னை வாயில் வேண்டுகிறாய் என்று மறுத்துரைத்தும் நீர் நாய் இயற்கையாய் கிடைத்த மீனை விடுத்து வாளை மீனுக்கு அலைந்தது போல நீ இயற்கையாகக்

கிடைத்த தலைவியை விடுத்துப் பரத்தையைத் தேடி அலைகின்றாய் என்று தலைவனின் ஒழுக்கக்கேட்டைத் தோழி வாயில் வேண்டும்போது சுட்டிக்காட்டி அவன் திருந்துவதற்கு வாய்ப்பளிக்கிறாள்.

♦ தலைவனின் ஒழுக்கக்கேட்டைப் பரணர் மட்டுமே எடுத்தாண்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

♦ தலைவனிடத்து அன்பு கொள்ளுமாறு தலைவியைத் தூண்டுவதற்கே தலைவனின் அன்பு மேலீட்டை அவளிடத்துத் தோழி எடுத்துரைக்கிறாள்.

♦ இரவுக்குறி, பகற்குறி என இரண்டும் மாறி மாறி வந்து தலைவியைப் பார்க்காது திரும்பும் தலைவனின் நிலையைக் கூறியும் தன் சுற்றத்தாருடன் தலைவியை மணந்துகொள்ள வரும் செய்தியை அறிந்த நிலையிலும் என இவ்விரண்டு நிலைகளில் தலைவனின் அன்பு மேலீட்டைத் தோழி உணர்த்துகிறாள்.

♦ தோழி கூற்றைப் பொருத்தளவில் ஔவையாரைவிட பரணரே அதிகப் பாடல்களைப் பாடியுள்ளார். ஏறக்குறைய இருபத்தி ஒன்று (21) பாடல்களைப் பாடியுள்ளது இங்கு நோக்கத்தக்கது.

♦ தோழி கூற்றுப் பாடல்களில் அதிகளவாகத் தலைவனின் ஒழுக்கக்கேட்டை எடுத்து மொழியும் நிலையில் அவளது உள்ளம் செயல்படுகிறது. அதற்குக் காரணம் தலைவிக்குத் தோழியாக அவள் செயல்படுவதால் அவளின் நலனில் மிகுந்த அக்கறை கொண்டுள்ளாள். தலைவிக்குத் தலைவனால் துன்பம் ஏற்படும்போதெல்லாம் தலைவனது செயல்களை இடித்துரைக்க முயல்கிறாள். அவனின் ஒழுக்கக் கேட்டை அவனுக்கு உணர்த்துகிறாள். இதன் காரணமாகவே தோழியின் உள்ளம் அதிகளவில் தலைவனின் ஒழுக்கக்கேட்டை எடுத்துரைக்க துணைசெய்கிறது.

- தலைவனின் ஒழுக்கக் கேட்டை எடுத்துரைக்கும் பாடல்கள் அனைத்தும் பரணர் பாடியவை என்பது குறிப்பிடத்தக்கது. இவர் ஆண்பாற் புலவராக இருந்துகொண்டு தலைவனின் ஒழுக்கச் செயல்களை இடித்துரைப்பது அவரின் நடுவுநிலைமையைச் சுட்டுகிறது.

- அகப்பாடல்கள் காதலைப் பற்றிக் கூறும்போது இன்பத்தினைவிட துன்பம் எய்தும் தலைவியைக் கண்டு தோழி வருந்துவதாகவே அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. துன்பப்படும் தலைவியை ஆற்றுப்படுத்தவும், தலைவனின் ஒழுக்கக்கேட்டை எடுத்து மொழியும் போது, தலைவியின் நிலையை எடுத்துச் சொல்லித் தலைவனை விரைந்து மணம்முடிக்க கூறியும் தோழி செயல்படுகிறாள். இவ்விடங்களிலெல்லாம் தலைவியின் உணர்வைத் தோழி உள்ளது உள்ளவாறே வெளிப்படுத்துகிறாள்.

- இவ்வுணர்வுகள் பாலையில் ஒன்று, நெய்தலில் மூன்று, குறிஞ்சியில் எட்டு, மருதத்தில் ஒன்பது என பயின்று வந்துள்ளன. மருதத்திலும் குறிஞ்சியிலுமே தோழியின் உள்ளம் உளநிலைக்கு ஆட்படுவதை அறிய முடிகிறது. இவற்றிற்குக் காரணம் குறிஞ்சியில் தினைப்புனம் காக்கச் செல்லும்போதும் மருதத்தில் தலைவியின் நிலையிலும் இவை அதிகம் தோன்றுகின்றன.

- மருதத்தில் தலைவன் பரத்தையர் நாடிச்சென்றதை அறிந்து அவன் மீண்டு வருகின்றான். அப்பொழுது அவனைச் சாடுகிறாள். மருதநிலம் வளமைக்குச் சான்றாக அமைந்துள்ளது.

- குறிஞ்சி நிலத்தில் தலைவன் பிரிவால் தலைவி வருந்துவதும் அவன் களவை நீட்டிக்க விரும்பியபொழுது அதனை மறுத்து விரைந்து திருமணம் செய்விக்கச் சொல்வதும் என இவையே இந்நிலத்தில் அதிகம் நிகழ்கின்றது.

- கோசர்கள் செய்த சூழ்ச்சி, பாண்டியனின் ஏவல் வலியன் இறந்த செய்தி, ஆதிமந்தி ஆட்டனத்தி வரலாறு, பாண்டியன் சேர, சோழனை வென்றது, நன்னன் பெண்களின் கூந்தலை அறுத்து கயிறாகத் திரித்தது, கரிகால் வளவன் வெண்ணிப் பறந்தலையில் வேளிர் பதினொருவர், சேரர், பாண்டியரை வென்றது, எயினன் மிஞிலியோடு போரிட்டு இறந்தது, அகுதை மகளிர்க்கு இளம் பிடிகளைப் பரிசில் அளித்தது ஆகிய அக்கால வரலாற்றுக் கூறுகளைப் பதிவு செய்துள்ளனர்.

- நாவாய் உள்ள துறைமுகங்கள், அழிசியின் ஆர்க்காடு போன்ற இடங்களின பெயர்களையும் காணமுடிகிறது.

- தண்ணும்மை, சிணப்பறை போன்ற இசைக்கருவிகளின் ஒலியும் பதிவுசெய்யப்பட்டுள்ளன.

- உழும் இயந்திரம், வண்டி, கரும்பு, உரல் இடிக்கும் போது வள்ளைப்பாட்டு பாடி இடித்தல் என்பனவற்றிலிருந்து அக்கால மக்களின் பண்பாட்டு பழக்கவழக்கங்களை அறியமுடிகிறது.

- நெய்தல் திணையில் பரத்தமை ஒழுக்கம் பற்றிய செய்தியும் இடம்பெற்றுள்ளது. வரலாற்றுச் செய்திகளைப் பரணர் அதிகம் பதிவுசெய்துள்ளது இங்குக் குறிப்பிடத்தக்கது.

## சான்றெண் விளக்கம்

1. இராம.பெரியகருப்பன், ஒப்பிலக்கிய அறிமுகம், ப.111
2. நற்.129: 1-6
3. குறுந்.73:2-5
4. வ.சுப.மாணிக்கனார், தமிழ்க்காதல், ப.83
5. குறுந்.259:5-8
6. குறுந்.328:1-4
7. அகம்.125:11-15
8. அகம்.125:20-22
9. புலவர் குழந்தை, தொல்காப்பியர் காலத் தமிழர், ப.195
10. "..................... Karen Horney holds that onxiety is generated by a repressed hosbility and ........... it in turn again generartes hosbility" - Rajendra Avasthi psyche, Society and Tensions, P.18.
11. நற்.247: 6-9
12. நற்.295:7-9
13. குறுந்.89:1-3
14. குறுந்.393:1-2
15. அகம்.148:7-14
16. அகம்.222:7-15
17. நற்.270:7-11
18. நற்.310:4-8
19. குறுந்.258:7-8
20. அகம்.116:1-12

21. அகம்.226:9-17

22. அகம்.346:5-7

23. அகம்.326:1-8

24. அகம்.386:8-15

25. அகம்.386:1-3

26. குறுந்.298:1-4

27. அகம்.178:14-22.

இயல் - 5

# பிற மாந்தர்கள் கூற்றில் உள்ளப் போராட்டம்

சங்க அகப் பாடல்கள் பெரும்பான்மையானவை தலைவன், தலைவி, தோழி இம்மூவரைச் சுற்றியே பாடப்பெற்றுள்ளன. இம்மூவருக்கும் முக்கியத்துவம் தரப்பட்டுள்ளது. இம்மூவரைத் தவிர்த்து கூற்று நிகழ்த்துவோரும் உண்டு. இவர்களில் கண்டோர், செவிலி, நற்றாய், பரத்தை, காமக்கிழத்தி, பாங்கன் போன்றோர் அடங்குவர். ஔவையார், பரணர் இருவரும் தங்களுடைய பாடல்களில் பிறமாந்தர் கூற்று நிகழ்த்துமாறு பாடல்கள் புனைந்துள்ளனர். தோழி, பாங்கன் ஆகியோர் உணர்வுப் போராட்டம் உள்ளவர்களாகச் சித்தரிக்கப்படுவதில்லை. காரணம் இவர்கள் காதலில் ஈடுபடாமையேயாகும். இப்பிற மாந்தர் கூற்றுக்களின் மூலம் அவர்களின் உள்ளத்து உணர்வை வெளிப்படுத்துவதாக இவ்வியல் அமைகின்றது.

பிற மாந்தர் கூற்றுப் பாடல்களாக மொத்தம் பதினொரு பாடல்களைப் பாடியுள்ளனர். இவை கண்டோர் கூற்று ஒன்றும், செவிலி கூற்று ஒன்றும், பரத்தைக் கூற்று எட்டும், காமக்கிழத்திக் கூற்று ஒன்றும் என அமைந்துள்ளன. இப்பதினொன்றில் பரத்தைக் கூற்று மட்டுமே எட்டுப் பாடல்களில் வந்துள்ளது குறிப்பிடத்தக்கது. இப்பதினொரு பிறமாந்தர் கூற்றுக்களில் ஏழில் அவர்களுடைய உணர்வுகளைப் பதிவுசெய்கின்றனர்.

## கண்டோர் கூற்றில் தலைவனின் அன்பு மேலீட்டை உணர்த்துதல்

வினைமுடிந்து மீளும் தலைவனைக் கண்டவருள் ஒருவர் முன்பு இப்பாலை வழியே தேர்ச் சக்கரம் அதிர முன்பனி நாளில் சென்றான். இப்பொழுது கார்ப்பருவம் வந்தது எனக் குளிர்ந்த உள்ளத்தினை

உடையவனாய் மீண்டு செல்கிறான் என குறிப்பிடுகிறார். இதனை,

"பெய்ம் மணி ஆர்க்கும் இழை கிளர் நெடுந்தேர்,
வன் பரல் முரம்பின், நேமி அதிர,
சென்றிசின் வாழியோ, பனிக் கடு நாளே;
இடைச் சுரத்து எழிலி உறைத்தென மார்பின்
குறும் பொறிக் கொண்ட சாந்தமொடு
நறுந் தண்ணியன் கொல்; நோகோ யானே!"[1]

என்று ஔவையார் குறிப்பிடுகிறார்.

ஆந்தைகள் வசிக்கும் மேட்டுப் பகுதியில் பூட்டிய மணிகள் ஆரவாரிக்க, அணிகள் பொருந்திய நெடிய தேரினைச் சக்கரம் அதிருமாறு செலுத்தி முன்பனிக் காலத்தில் இவ்வழியே சென்றான். இப்பொழுது வழியிடையில் மேகம் மழைத்துளியைச் சிதறியதால் கார்ப்பருவம் வந்தது எனக் கருதித் தன் மார்பில் பூசிய சந்தனத்தைவிட குளிர்ச்சி பொருந்தியவனாய் உள்ளான் என்று குறிப்பிடுகிறான்.

அதாவது முன்பு பாலை வழியே தேர்ச்சக்கரம் அதிரச் சென்ற தலைவன் தான் குறித்த கார்ப்பருவத்திற்குள் வினைமுடித்து மீள்கின்றான். காலம் தாழ்த்தின் தலைவி வருந்துவாள் என்பதைக் கருதி விரைந்த தலைவனின் அன்பு பெரிது என அவனின் பெருமையைத் தலைவி மீது தலைவன் கொண்ட அன்பு மேலீட்டைக் கண்டோர் மொழிவது ஈண்டு புலனாகிறது.

## பரத்தையர் கூற்றில் உள்ளப்போராட்டம்

பரத்தையர் கூற்றில் மொத்தம் எட்டுப் பாடல்கள் அமைந்துள்ளன. இதில் பரணர் இயற்றிய ஐந்து பாடல்களிலும் ஔவையார் இயற்றிய ஒரு

பாடலிலும் உணர்வுகள் மேலிடுகின்றன. இதில் விருப்பம், ஏமாற்றம், தலைவனின் ஒழுக்கக்கேடு, வருத்தம் ஆகியவை சுட்டப்பட்டுள்ளன.

## விருப்பம்

தலைவன் பரத்தையர் சேரியில் தன் காமக் கிழத்தியான இளம் பரத்தை ஒருத்தியினது ஆடலைக் காணச் சென்றான். அவனது அச்செய்கையை அறிந்த தலைவி பரத்தை ஆடலும் பாடலும் காட்டித் தன் வயப்படுத்திக்கொண்டாள் எனப் பழி கூறுகின்றாள். அதை அறிந்த அப்பரத்தையின் தோழியர் கேட்க அவனை முழுதும் தன் வயப்படுத்திக் கொள்வேன் என்று தன் விருப்பத்தை வெளிப்படுத்துகிறாள். இதனை,

"சூரியல் அம் பொருநனைக் கண்டிரோ? என
ஆதி மந்தி பேதுற்று இணைய
சிறை பறைந்து உரைஇச் செங்குணக்கு ஒழுகும்
அம் தண் காவிரி போல
கொண்டு கைவலித்தல் சூழ்ந்திசின் யானே"[2]

என்றுரைக்கிறார் பரணர்.

பரத்தையாகிய நாங்கள் இன்னிசைக் கருவிகளுடன் ஆடல் நிகழ்த்தினோம். அதைக் காணத் தலைவன் வந்தான். ஆனால் அவனை நாங்கள் ஆடலாலும் பாடலாலும் வயப்படுத்திக்கொண்டோம் என்று அவனுடைய பெண்டிர் (தலைவி) இடையறாத ஒலிக்கும் பறையொலி போல உரைக்கின்றனர். அவ்வாறு உரைத்தால் காவிரி ஆட்டனத்தியைக் கைக்கொண்டது போல அவனை இனி என் வயப்படுத்திக் கொள்ளத் துணிந்துள்ளேன். இனி அவள் என்ன செய்வாள் என ஆட்டனத்தி நிகழ்வை ஒப்புமை செய்து பரத்தை தன் விருப்ப உணர்வைப் பதிவுசெய்கிறாள்.

## ஏமாற்றம்

பிறமாந்தர் கூற்றில் பரத்தையின் ஏமாற்ற உணர்வு மூன்று பாடல்களில் வெளிப்படுகின்றது. தலைவி சேரிப்பரத்தையை வைதாள் என்று தோழியர் வாயிலாகக் கேட்ட பரத்தை; தலைவியின் தோழியர் கேட்க அத்தலைவியின் செருக்கு அடங்கும்படி இன்னது செய்வேன் என்று சூள் உரைக்கின்றாள். இதனை,

"இரந்தோர்க்கு ஈயாது ஈட்டியோன் பொருள்போல்

பரந்து வெளிப்படாது ஆகி

வருந்துக தில்லயாய் ஓம்பிய நலனே!"[3]

என்ற அடிகள் சுட்டும்.

ஊரனால் நமக்கு வரும் பழி வருக! அத்தலைவன் எம் சேரியில் வந்தால் அவனது மாலையையும் ஆடையையும் பிடித்துக்கொண்டு கூந்தலால் என் தோள் என்ற கட்டுத்தறியில் அவன் தோளைக் கட்டி என் மார்பான கொட்டிலில் சிறை செய்வேன். அப்படிச் செய்யாது போனால் என் தாய் பாதுகாத்த என் அழகு ஒழிக! என்று பரத்தை உரைப்பது தலைவன் வராமலேயே தலைவி பழிதூற்றுகிறாள் என்ற ஏமாற்றம் மேலோங்குகிறது.

தலைவனால் காம இன்பம் கருதி வரைந்துகொள்ளப்பட்ட காதற்பரத்தை சேரிப்பரத்தையிடம் நட்பு கொண்டமையை அறிந்து அவன் தன் இல்லம் வந்த போது அவனுடன் ஊடிச் சொல்லும் போது ஏமாற்ற உணர்வு வெளிப்படுகின்றது. இதனைப் பரணர்,

"................................ எம் வயின்

பசந்தன்று, காண்டிசின் நுதலே அசும்பின்

அம்தூம்பு வள்ளை அழற் கொடி மயக்கி

வண் தோட்டு நெல்லின் வாங்கு பீள் விரிய

துய்த் தலை முடங்கு இறாத் தெறிக்கும் பொற்புடைக்

குரங்கு உளைப் புரவிக் குட்டுவன்

மரந்தை அன்ன என் நலம் தந்து சென்மே!"[4]

என்ற அடிகளில் சுட்டுகிறார். தலைவனே நீ மீண்டும் பரத்தையர் சேரிக்குச் செல்லாதே. கழாஅர் என்ற துறையில் கரிகால் வளவன் காணப்புனலில் விளையாடிய அத்தியைக் காவிரி கொண்டு போய் ஒளித்துக்கொண்டது போல சேரிப்பரத்தை உன்னைக் கொண்டு போய் ஒளித்துக் கொண்டாள். அது கொண்டு யாம் உன்னிடம் ஊடல் கொள்ளவில்லை. எம் நுதல் பசப்புற்றது. குட்டவனின் மரந்தை என்ற நகரத்தைப் போன்ற என் அழகை எனக்குத் தந்துவிட்டுச் செல்க என்று கூறுவது தலைவன் சேரிப்பரத்தையின் பால் சென்றதன் ஏமாற்றத்தை வெளிப்படுத்துகிறாள் காதற்பரத்தை. இங்கு இவளின் கூற்றில் ஏமாற்ற உணர்வு வெளிப்படுகின்றது.

தலைவனுடன் ஊடிய காமக்கிழத்தி அவனுக்கு என் நலத்தைத் தந்துவிட்டுப் போ என்று கூறிய இடத்து ஏமாற்றம் என்ற உணர்வு தோன்றுகிறது. இதனை,

"நெடு நீர்க் காவிரி கொண்டு ஒளித்தாங்கு நின்

மனையோள் வவ்வலும் அஞ்சுவல் சினைஇ

ஆரியர் அலறத் தாக்கி பேர் இசைத்

தொன்று முதிர் வடவரை வணங்குவில் பொறித்து

வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்

வஞ்சி அன்ன, என் நலம் தந்து சென்மே!"[5]

என்ற அடிகள் சுட்டும்.

மகிழ்நனே! உன்னைப் பற்றிக் கொண்டேன். செல்லாதே! ஆஅய் எயினன் தான் சொல்லிய சொல் பிழையாது தனது உயிரைத் தந்தான். நீயோ தெய்வத்தின்முன் தெளிவித்து வளை முன் கை பற்றிய சொல்லைக் கடந்து உன் மார்பை எனக்குத் தராமல் அயலான் போல் ஆனாய், இனி நான் உன்னை விடமாட்டேன். ஆட்டனத்தியைக் காவிரி ஒளித்துக்கொண்டதுபோல் உன் மனைவி உன்னைக் கவர்ந்துகொள்வாள் என்று அஞ்சுகின்றேன். வஞ்சி நகரத்தைப் போன்ற என் அழகைத் தந்துவிட்டுப்போ என்று காதற்பரத்தை தலைவனை நோக்கிச் சொல்வது தலைவன் நம்மை விட்டுத் தலைவியின் பால் செல்லத் துணிகின்றான். அவன் இனி கிடைக்கப்போவதில்லை என்று தெரிந்தே ஏமாற்றமடைகின்றாள். ஆகவே அவனால் நலன் இழந்த அழகைத் திருப்பித்தர வேண்டுகின்றாள். அவள் திருப்பித் தரவேண்டுவது இனியாவது தங்கமாட்டானா? என்ற ஏக்கம் கலந்த வருத்தத்தை ஏமாற்றமாக வெளிப்படுத்துகிறாள்.

## தலைவனின் ஒழுக்கக்கேட்டை எடுத்துரைத்தல்

காமக்கிழத்தியைத் தலைவி பழித்தாள் எனக் கேட்டவுடன் தலைவியின் சுற்றத்தார் கேட்கும்படி அத்தலைவியின் பேதைமை ஊட்டியது. இதனை,

"காவிரி வைப்பின் போஓர் அன்னஎன்
செறிவளை உடைத்தலோ இலனே; உரிதினின்
யாம்தம் பகையேம் அல்லேம்; சேர்ந்தோர்
திருநுதல் பசப்ப நீங்கும்
கொழுநனும் சாலும்தன் உடன்உறை பகையே"[6]

என்ற அடிகளில் விளக்குகிறார் பரணர்.

தலைவனுடன் எனக்கு எழுந்த (அலர்) பழிச்சொல்லானது மிகப் பெரிது. நான் அவனுடன் புணையுடன் நீராடுதலில் மட்டுமே தொடர்புடையவள். அவனோ வேறொருத்தியிடம் தொடர்புடையான். ஆதலால் என்னுடன் தலைவி வெறுப்புக்கொள்வதற்குக் காரணம் ஏதும் இல்லை என்று காமக்கிழத்தி உரைக்கிறாள். இங்குத் தலைவன் ஒவ்வொரு சேரிக்கும் சென்று வரும் இயல்புடையவன் என்பதைக் குறிக்கிறாள். நான் அவனுடன் நீர்விளையாடுதல் மட்டுமே தொடர்புடையவள் இப்பொழுது அவன் வேறொருத்தியிடம் இருக்கிறான் என்று கூறுவது தலைவனின் ஒழுக்கக்கேட்டை வெளிப்படுத்துகிறது. தலைவன் என்பவன் ஒவ்வொரு பெண்ணிடமாகச் சென்று இன்பம் துய்ப்பவன் என்பதையே இது எடுத்துக்காட்டுகிறது. இது இவ்வாறு இருக்க தலைவி என் மீது பழிதூற்றுவது அவளது அறியாமையைக் காட்டுகிறது என்கிறாள்.

## வருத்தம்

தலைவி தன்னைப் ‘பழித்தாள்’ என்று கேள்வியுற்று பரத்தைக்குச் சினம் பொங்கியது. அவளுக்குப் பாங்காயினர் கேட்ப புதுப்புனலாட அவனுடன் நான் செல்வதை முடிந்தால் அவள் தடுத்துவிடட்டும் என்று சவால்விடுகிறாள். இதனை ஔவை,

“கூந்தல் ஆம்பன் முழுநெறியடைச்சிப்
பெரும்புனல் வந்த இருந்துறை விரும்பி
யாமஃதயர்கம் சேறுந் தானஃது
அஞ்சுவது உடையாளாயின் வெம்போர்
நுகம்படக் கடக்கும் பல்வே லெழினி
முனையான் பெருநிரை போலக்
கிளையொடுங் காக்கதன் கொழுநன் மார்பே”[7]

என்றுரைக்கிறார்.

தலைவி தன்னைப் பழித்தாள் என்று கேள்வியுற்ற பரத்தைக்கு சினம் உண்டானது என்கிறார் வித்துவான் எம்.நாராயணப்பிள்ளை. "சினம் பொங்கியது, பரத்தையின் சுயமோகம் காயம்பட்டு விட்டது. இதை மனக்காயம் (Trauma) என்பர்"[8] மன ஆய்வாளர்.

தலைவனின் மனைவி பரத்தையை நோக்கிக் கூறிய குற்றச்சாட்டுக்களைப் பரத்தையைப் போலவே ஔவையும் ஏற்கவில்லை என்று தோன்றுகிறது. ஏனெனில் மகாவித்துவான் - பாஷாகவி சேகரர் ரா.ராகவையங்கார் இயற்றிய குறுந்தொகை விளக்கத்தில், "பந்த விருந்திறை என்றால் தலைவன் தானே வந்ததாகக் குறித்து யாம் விரும்பி அயர்கம்" என்றாள். இளையவர் விரும்புதல்லது தாம் விரும்புதல் அஃது வந்த விருந்திற்குச் செய்யும் விருந்தினை என்று பொருள் கொள்ளப்படுகிறது. அதாவது என்மீது எந்தக் குற்றமில்லை தலைவன் என்னை தேடிவந்தான், நான் அழைக்கவில்லை. விருந்தினனாக ஏற்று விருந்து செய்தேன் என்ற மனநிலையை பாடல் குறிக்கிறது"[9] என்கிறார்.

இப்படி குற்றமற்றவளான என்னைத் தலைவி சாட்டிய குற்றமானது நாவினால் சுட்ட புண்ணாகும். ஆகவே முதலில் அவள் சார்ந்த உண்மையானது, தலைவன் அவன் தான் என்னைத் தேடிவந்தான், நான் அழைக்கவில்லை என மறுத்துரைக்கிறாள்.

இங்கு ஒரு ஆணின் அன்பிற்குப் பாத்திரமான இரண்டு பெண்களின் மனக்காயம் குறிப்பாகப் பரத்தையின் மனவலியையே ஔவை பாடலாக்கியிருக்கிறார். மேலும் சுயமோக வெறியின் ஆசையையும் வெளிப்படுத்துகிறார். இதற்கு முன் அவளின் மனக்கொந்தளிப்பை ஔவை வெளிப்படுத்தும் முகமாக "தலைவனின் பகைப்புலத்துள்ள ஆநிரைகளைப்

போல தன் கொழுநன் மார்பைக் கிளையோடு காத்துக்கொள்க” என்று சுட்டுகிறார். இங்குத் தலைவி தன் மீது சுமத்திய பேச்சின் மூலம் வருத்தம் என்ற மனஉணர்வைப் பரத்தை வெளிப்படுத்துகிறாள்.

## தொகுப்புரை

- தலைவன், தலைவி, தோழி இம்மூவரைத் தவிர்த்து பிற மாந்தர்கள் இவ்வியலில் அடங்குவர்.

- பிற மாந்தர்களில் கண்டோர், செவிலி, நற்றாய், பரத்தை, காமக்கிழத்தி, பாங்கன் போன்றோர் குறிப்பிடத்தக்கவர்.

- புலவர்கள் இருவரும் பதினொரு பாடல்களைப் பிறமாந்தர் கூற்று நிலையில் பாடியுள்ளனர். அதிலும் பரத்தையர் (8) கூற்று அதிக அளவில் இடம்பெற்றுள்ளது.

- இப்பதினொரு பாடல்களில் ஏழில் மட்டும் உணர்வு நிலைகள் வெளிப்படுகின்றன.

- வினைமுடிந்து மீளும் தலைவனைக் கண்டவருள் ஒருவர் முன்பு இப்பாலை வழியே தேர்ச்சக்கரம் அதிர முன்பனி நாளில் சென்றவன் இப்பொழுது கார்பருவத்தில் வருகிறான் என்று தலைவியின் மீது அவன் கொண்டுள்ள அன்பைக் கண்டோர் உணர்த்துகிறார்.

- தலைவன் பரத்தையர் சேரியில் தன் காமக்கிழத்தியான இளம்பரத்தை ஒருத்தியினது ஆடலைக் கானச் சென்று அங்கேயே தங்கிவிட பரத்தையைத் தலைவி சாடுகிறாள். இதற்குத் தலைவனை நான் முழுவதும் தன் வயப்படுத்திக்கொள்வேன் என்று தன் விருப்பத்தை உணர்வாக வெளிப்படுத்துகிறாள்.

- தலைவி தன்னை வைதாள் என்று அறிந்த சேரிப்பரத்தை அத்தலைவியின் செருக்கு அடங்கும்படி கூறும் தருணத்திலும், சேரிப்பரத்தையிடம் நட்புகொண்டமையை அறிந்து காதற்பரத்தை, தலைவனுடன் ஊடும்போதும், தலைவனுடன் ஊடிய காமக்கிழத்தி என் நலத்தைத் தந்துவிட்டு நீ போ என்று தலைவனிடம் கூறிய இடத்தும் பரத்தையின் ஏமாற்ற உணர்வு மேலோங்குகிறது.

- காமக்கிழத்தியைத் தலைவி சாடும் நிலையில் தலைவனுடன் எனக்கு எழுந்த அலர் மிகப் பெரிது. நான் தலைவனுடன் நீர் ஆடுதலில் மட்டுமே தொடர்புடையவள். அது அறியாத தலைவி, என்னைச் சாடுவது அவளது அறியாமையைக் காட்டுகிறது என்கிறாள். மேலும் தலைவன் வேறு பெண்ணிடம் சென்றதைக் கூறுவதிலிருந்து காம இன்பம் துய்க்கத் தலைவன் பல சேரிகளுக்குச் செல்வது புலப்படுகிறது. இதனைக் கூறி தலைவனின் ஒழுக்கக்கேட்டை எடுத்துரைக்கிறாள்.

- பிறமாந்தர் கூற்றில் ஆறு பாடல்களில் பரத்தையைப் பற்றி பரணர் பாடியுள்ளார். இதில் விருப்பம், தலைவனின் ஒழுக்கக்கேட்டை எடுத்துரைத்தல், ஏமாற்றம் என்ற நிலைகளிலேயே இவ்வுணர்வுகள் பரத்தையின் மனதில் தோன்றுகின்றன.

- தலைவனுக்கும் தலைவிக்கும் இடையில் திருமணம் முடிந்த நிலையில் தலைவன் பரத்தையர் பால் பிரிந்து செல்கின்றான். இந்நிலையிலேயே இவ்வுணர்வுகள் மிகுந்து காணப்படுகின்றன.

- பரணர் ஓர் ஆணாக இருந்துகொண்டு பரத்தையின் மனதில் தோன்றும் எண்ணங்களை, எண்ண ஓட்டங்களை மனப்போராட்ட நிலையில் தெளிவாக எடுத்துரைக்கின்றார்.

- பரத்தையாக இருந்தாலும் அவளுக்குரிய விருப்பத்தையும், தலைவனின் ஒழுக்கமில்லா செயல்பாட்டையும், அவளுக்கு ஏற்படும் ஏமாற்றத்தையும் மிக நுண்ணிதின் வெளிப்படுத்துகிறார்.

- பரத்தையாகப் பார்க்காமல் அவளது மனதிலும் தலைவியைப் போல தலைவனின் செயலால் உளம் மாறுபட்டுப் போராட்டத்திற்கு அவளை இட்டுச்செல்கிறது என்றே கூறலாம்.

- குறிப்பாக பரத்தையும், கண்டோரும் அவரவர் உள்ளத்தில் தோன்றும் நிகழ்வை மிக தெளிவாகப் புலப்படுத்தியுள்ளது சாலச் சிறந்ததாகும்.

- கரிகால் வளவனின் கழாஅர், குட்டுவனின் மாந்தை, வஞ்சி போன்ற இடங்களின் பெயர்களைக் காணமுடிகிறது.

- ஆய்எயினன் பற்றிய செய்தியும் ஆட்டனத்தி ஆதிமந்தியின் வரலாறும் பதிவுசெய்யப்பட்டுள்ளது.

- ஆந்தை என்ற பறவையைப் பற்றியும் குறிக்கப்பெற்றுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1. நற்.394

2. அகம்.76

3. அகம்.276

4. அகம்.376

5. அகம்.396

6. அகம்186

7. குறுந்.80

8. ஐ.க.பாண்டியன், ஔவையின் உளவியல் & ப்ராய்டு - லெக்கானின் மன அலசல், ப.179

9. மேலது, ப.180.

இயல் - 6

# புறப்பாடல்களில் உள்ளப் போராட்டம்

சங்க இலக்கிய அகப்பாடல்களில் தலைவன், தலைவி, தோழி, பிற கூற்றாளர்களின் வாயிலாக அவர்களின் உள்ள உணர்வுகள் வெளிப்படுகின்றன. அகப்பாடல்கள் மட்டுமல்லாது புறப்பாடல்கள் வாயிலாகவும் உணர்வுகள் வெளிப்படுவதைக் காணலாம். சான்றாக பரிசில் பெறும் புலவனின் மனநிலை, மன்னனைப் புகழும் போதும், மன்னன் பரிசில்தர காலம் தாழ்த்தும்போதும், மன்னனின் வெற்றியைச் சிறப்பிக்கும்போதும் இழப்பு, கையறுநிலையின்போதும் புலவர்களுக்குத் தக உள்ள உணர்வுகள் புலப்படுத்தப்படுகின்றன. இவ்வுணர்வுகள் பரணர், ஔவையார் பாடல்களில் எவ்விதம் வெளிப்படுகின்றன என்பதைக் கண்டறிவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

புறப்பாடல்கள் போர், குடும்பம், தோழி, பிற வினைகளை வெளிக்காட்டும் சூழலில் புலவர்களின் உள்ள உணர்வை உள்ளது உள்ளபடி வெளிக்காட்டும் காலக்கண்ணாடிகளாக விளங்குகின்றன. அகப்பாடல்களில் புலவர்கள் தங்களுடைய உணர்வுகளை மாந்தர்களின் கூற்றுக்களின் மூலம் வெளிப்படுத்தமுடியும். ஆனால் புறப்பாடல்களில் இவ்வாறு அமைவதில்லை. அவர்கள் காலத்தில் நிகழ்ந்த இன்ப, துன்ப நிகழ்வுகளை நாட்டுநடப்புகளைப் புலவர்கள் பாடல்களில் நேரடியாகவே வெளிப்படுத்துகின்றனர்.

பரணர் 23 பாடல்களிலும், ஔவையார் 33 பாடல்களிலும் மகிழ்ச்சி, புகழ்தல், பெருமிதம், அறிவுரை, வருத்தம், ஏமாற்றம், ஏக்கம் என்ற புறவுணர்வுகளைப் பதிவுசெய்துள்ளனர்.

**மகிழ்ச்சி**

மன்னர்களின் செயலால் மனம் மகிழ்ந்து ஐந்து பாடல்களில் இவ்விரு புலவர்களும் தங்களது உணர்வை மகிழ்ச்சியாக வெளிப்படுத்துகின்றனர். ஔவை இரண்டு பாடல்களில் இவ்வுணர்வை புறநானூற்றில் வெளிப்படுத்துகிறார்.

அதியமான் வழங்கிய நீண்ட நாள் நிலைத்து வாழ துணைசெய்யும் நெல்லிப்பழத்தைப் பெற்று உண்டபின் ஔவை நினைத்து (புறம்.91) மகிழ்ந்து பாடுகிறார். இதனை,

"பால் புரை பிறை நுதற் பொலிந்த சென்னி
நீலமணி மிடற்று ஒருவன் போல
மன்னுக பெரும! நீயே, தொல் நிலைப்
பெரு மலை விடரகத்து அரு மிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது
ஆதல் நின் அகத்து அடக்கி
சாதல் நீங்க, எமக்கு ஈந்தனையே!"[1]

என்ற அடிகளில் சுட்டுகிறார். பழமையான மலையின் இடையில் ஓங்கி வளர்ந்த நெல்லி மரத்தில் காய்த்த அரிய நெல்லிக்கனியை நீ உண்ண விரும்பாது எனக்கு அளித்து இறப்பு என்னை விட்டு அகலுமாறு செய்தாய். பகைவரைப் போரில் வெல்லும் வீரமாகிய செல்வமும் பொன்னாற் செய்த மாலையும் உடையவனே! நீ பால் போன்று பிறையணிந்த நெற்றியுடன் பொலிவுற்ற திருமுடியையும் நீலமணி போலும் கரிய கழுத்தினையும் உடைய சிவபெருமானைப் போன்று நிலைபெற்று வாழ்வாய் என வாழ்த்துகிறார்.

“அதியமானிடம் தமக்குள்ள ஈடுபாட்டை ஔவையார் நெஞ்சு நெக்குருகி குழைந்து மொழிந்தது போல தம்மிடம் அதியமான் புலப்படுத்திய அருட் செய்கையைத் ‘தெய்வ வடிவம் தரும்’ காட்சியைக் கொண்டு போற்றுகிறார். மானுடம் பாடும் ஔவையார், மானுடத்தின் கொடுமுடியாக இறையுணர்வு உறைவதை உணர்த்துகிறாரோ”[2] என பெ.சு.மணி சுட்டுகிறார்.

மலைச்சரிவில் கடும் முயற்சியுடன் பெற்ற நெல்லியின் இனிய கனியைப் பார்த்தவுடன் இயல்பான தன்னுணர்வைத் தாண்டி நனவிலியில் ஓர் இயல்பூக்கம் (Instinct) சுரக்கிறது.

தற்காதல் குறித்த ஓர் அறிமுகம் (on Narcissism - An Introduction) என்ற கட்டுரையில் ஃபிராய்டு “மற்றமைத் தேர்வில் அன்பு மற்றமையானது பெற்றோர் மாதிரியான மாதிரிகளையே தேர்வு செய்யும் அதாவது குழந்தைகளுக்கான உணவு, அக்கறை, பாதுகாப்பு ஆகியவைகள் உத்திரவாதமாகக் கிடைக்கும் எனும் பட்சத்திலேயே இம்மாதிரியான மற்றமைத் தேர்வானது பாலுணர்வு உந்துதல்கள் (rignally) தற்காதல் (Anaclytically) ஆக உள்ள சுயபாதுகாத்தல் உந்துதல்களைச் சார்ந்தே உள்ளது”[3] என்கிறார்.

காத்தல் அவசியம் என்ற நெருக்கடியை அதியமானுக்குக் கொடுப்பது ஔவை மீது கொண்டிருந்த அவனின் தற்காதலே (Attachment) ஆகும். இப்பாடலில் ஔவை அதியமான் மீது கொண்டிருந்த அன்பு அவனுக்குச் சற்றும் குறையாமல் அழுத்தமாகவே வெளிப்படுகிறது.

“ஔவையின் அந்தக் கணத்தில் சித்த நிலையில் ஏற்பட்ட தீவிர ஆசையே அதியமானை வரம் கொடுத்த கடவுளாக பாவித்துவிடச் செய்கிறது”[4] என்கிறார் ஐ.க.பாண்டியன். ஔவையின் தற்காதல் வகையிலான அன்பானது அதியமான் மீது கொண்ட அன்பு மற்றொரு பிணைப்பான பிரபஞ்ச நனவுணர்வுடன் இணையும் நேரத்தில் மனப்பிறழ்வு ரீதியான பிரேமையில் மணிமிடற்று ஒருவனாக அதியமான் ஔவையின் தன்னிலையில் கவிதையாகப் பிறப்பெடுக்கின்றன.

எனவே ஔவைக்குரிய வாழ்வை நிலைபெறுவதற்கு உதவும் நெல்லிக்கனியை அளித்தவுடன் ஔவையின் அடிமனத்திலிருந்து தனது அன்பைச் சிவபெருமானைப் போல காக்கும் கடவுளாகப் பாவித்து தனது உள்ள மகிழ்வை வெளிப்படுத்துகிறார்.

அதியமான் ஔவையின் பாடலை ஏற்றுப் போற்றுகின்றான். தந்தையானவன் எவ்வாறு தன் மழலை பேசும் குழந்தையிடம் அன்பு செலுத்துவானோ அதுபோல நீ என்னுடன் அருள் செய்கின்றாய் (புறம்.92) என்கிறாள் ஔவை. இதனை,

“யாழொடும் கொள்ளா; பொழுதொடும் புணரா;
பொருள் அறிவாரா ஆயினும் தந்தையர்க்கு
அருள் வந்தனவால் புதல்வர்தம் மழலை
என் வாய்ச் சொல்லும் அன்ன”[5]

என்ற பாடலடிகளில் சுட்டுகிறார்.

யாழோசை தருவது போல இசையின்பம் தராத, காலத்துடன் பொருந்தி வராத, பொருளும் அறிய இயலாத ஆனாலும் தந்தையர்க்குத் தம் மழலையிடம் அருளானது நிறைந்து இருக்கும். அதனாலே அதனை

இன்புடன் ஏற்பர். என்னுடைய வாயிலிருந்து வெளிப்படும் சொற்களும் அத்தன்மை வாய்ந்தது என்றே மகிழ்வுடன் குறிப்பிடுகின்றார். இதனாலேயே "குழலினிது யாழினிது என்பதம் மக்கள், மழலைச் சொல் கேளாதவர்"[6] என திருவள்ளுவர் குறிக்கின்றார். "அவர் மழலை கேட்டல் அமிழ்தினும் இனிது"[7] என இனியவை நாற்பது குறிப்பிடுகிறது.

"ஔவையார் இங்கு மழலை மொழியைப் பொருளற்ற சொற்கள் என்று சொல்லத் துணியாமையும், அவை குழந்தையின் கருத்திற்கு வடிவம் தந்து வெளிவருவனவே என உணர்ந்தமையும் குழந்தை கருதிய பொருளைப் பெற்றோர் அறியமுடியவில்லை எனக் கூற முன்வந்தமையும் காண்க. 'பொருளில்லாதென' என்னாமல் 'பொருளறிவாரா' என்ற அவருடைய கருத்து உள நூலாராய்ச்சியாளர்க்கு உவகை ஊட்டுவதாகும்"[8] என்று உள நூலாராய்ச்சி நுட்பத்தை மு.வ.எடுத்துக்காட்டுகிறார்.

இங்கு தம் புதல்வர் மழலையை அருளுடன் கேட்கும் தந்தையரைப் போலத் தன் சொற்களுக்கு அருளுடன் செவி மடுக்கின்றான் என தன் உள்ளத்தில் எழுந்த மகிழ்வைத் தந்தை - மகள் உறவுநிலையில் வைத்து உணர்வாக வெளிப்படுத்துவது நோக்கத்தக்கது.

பரணர் பதிற்றுப்பத்தின் வழி மூன்று (42, 49, 43) பாடல்களில் தன்னுடைய மகிழ்வைப் புலப்படுத்துகிறார்.' கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனே உன் செயலானது உனக்கென எதுவும் கொள்ளாது உன்னைச் சார்ந்தோரின் மனம் மகிழும்படியே அமைந்துள்ளன என்கிறார். இதனை,

"இஞ்சி வீ விராய பைந் தார் பூட்டி
சாந்து புறத்து எறிந்த தசும்பு துளங்கு இருக்கை
தீம் சேறு விளைந்த மணி நிற மட்டம்
ஓம்பா ஈகையின் வண் மகிழ் சுரந்து
கோடியர் பெருங் கிளை வாழ, ஆடு இயல்
உளை அவிர் கலிமாப் பொழிந்தவை எண்ணின்"[9]

என்ற அடிகளில் சுட்டுகிறார்.

இஞ்சியினையும் பூவினையும் கலந்து வாடாத மாலையைப் பூட்டிச் சந்தனத்தை வெளிப்புறத்தே பூசி கட்குடங்கள் அசைகின்ற இருப்பிடங்களில் உள்ள இனிய சுவை முதிர்ந்த நீலமணியின் நிறத்தையுடைய கள்ளைத் தனக்கென வைக்காது நீ வீரர்களுக்கு அளிக்கின்றாய் என்கிறார்.

குட்டுவன் சுவை மிகுந்த கள்ளைத் தனக்கு என வைக்காது தனது வீரர்களுக்கு அனைத்தும் வழங்கும் மனதுடையவன் என அவனின் கொடைச் சிறப்பைச் சொல்லி தன் மனத்தில் உண்டான மகிழ்வைப் பரணர் வெளிப்படுத்துகிறார்.

பகைவரைப் போரிலே எதிர்நின்று வென்றவன். அவர்களுடைய காவல் மரங்களையும், நாட்டின் வளத்தையும் ஒருசேர அழித்தவன் குட்டுவன். அவனைச் சென்று காண்போம் என மற்ற விறலியரை (பதிற்.49) அழைக்கின்றார். இதனை,

"யாமும் சேறுகம்; நீயிரும் வம்மின்,
துயிலும் கோதைத் துளங்கு இயல் விறலியர்!
கொளை வல் வாழ்க்கை நும்கிளை இனிது உண்இயல்"[10]

எனக் குறிக்கின்றார் பரணர்.

மோகூர் மன்னனின் நாட்டையும் அவனது காவல் மரங்களையும் கூடவே செல்வங்களையும் அழித்தவன். ஏனெனில் நம்மைப் போன்ற இரவலர்க்கு வரையாது கொடுக்க இவ்வளம் உதவியது எனக் கூறி அவனைக் காண நான் செல்கின்றேன் நீங்களும் வாருங்கள் என, அசைகின்ற மாலையை அணிந்த இயல்பையுடைய விறலியரே! இசைப்பாட்டில் வல்லநும் சுற்றத்தார் இனிது உண்ணுக என்று குட்டுவனை நாம் கண்டால் அவன் நும் உறவினர்கள் அனைவரும் மகிழ்வாக உண்ணும்படி பொருளை அளிப்பான் என மன்னனின் கொடையைக் குறிப்பிட்டு கடல்பிறக்கோட்டிய குட்டுவனால் உண்டாகப்போகும் மகிழ்ச்சியை இப்பாடலின்வழி வெளிப்படுத்தியிருக்கிறார்.

மன்னனின் வெற்றியையும் அவன் வழங்கிய கொடைகளையும் பாடி மகிழ்வதை (பதிற்.43) இப்பாடல் வழி உணரமுடிகிறது. இதனை,

"ஆர் கலி வானம் தளி சொரிந்தா அங்கு
உறுவர் ஆர ஓம்பாது உண்டு
நகைவர் ஆர நன்கலம் சிதறி,
ஆடு சிறை அறுத்த நரம்பு சேர் இன் குரற்
பாடு விறலியர் பல் பிடி பெறுக!
தூய் வீ வாகை, நுண் கொடி உழிஞை,
வென்றி மேவல், உரு கெழு சிறப்பின்,
கொண்டி மள்ளர் கொல் களிறு பெறுக!
மன்றம் படர்ந்து, மறுகு சிறைப் புக்கு,
கண்டி நுண் கோல் கொண்டு களம் வாழ்த்தும்
அகவலன் பெறுக மாவே!"[11]

என்ற அடிகள் சுட்டுகின்றன.

போரிலே பகைவரைக் கொல்லுதலையுடைய சேனைகளையும் பொன்னாற் செய்யப்பட்ட மாலையையும் அணிந்தவனாகிய குட்டுவன் மேகம் துளியைச் சொரிந்தாற் போல பாணர் முதலியோர் மகிழும்படி நல்ல அணிகலன்களை அவர்களுக்குக் கொடுப்பவன். ஆடுகின்ற சிறகையுடைய கின்னரப் பறவையை இசையால் வென்ற யாழ் நரம்பின் இசையோடு ஒன்றுபட்டுச் சேர்ந்த இனிய குரலையுடைய பாடுகின்ற விறலியர் பல பிடிகளைப் பரிசாகப்பெறுவர். படைவீரர்கள் போரிடுவதற்கு நல்ல ஆண் யானைகளைப் பெறுவர். இசைத்துறையில் தொடங்கித் துணிக்கப்பட்ட நுண்ணிய கோலைக் கையிலே கொண்டு போர்களத்தை வாழ்த்தும் பாணன் குதிரைகளைப் பெறுவான் என ஒவ்வொருவரும் தங்கள் செயலுக்கு ஏற்ப பரிசினைப் பெறுவர் என அகமகிழ்ந்து குறிப்பிடுகின்றார் பரணர். மேலும், நிரம்புதலையும் அகலுதலையும் அறியாத கோக்கலியினிடத்தே நிறைந்து நெடுநேரம் இல்லாத பானைகளில் உள்ள கள்ளினை வயிரியர் மிகுதியாக உண்ண உண்ண அக்குடங்களை மேன்மேலும் நிறைத்தலிற் குறையாத கள்ளை அளிக்கும் நீண்ட கையினையுடைய மன்னனே என புகழ்ந்து தன் மகிழ்ச்சியை வெளிப்படுத்துகிறார். இதனை,

"நிரம்பு அகல்பு அறியா ஏறா ஏணி
நிறைந்து நெடிது இராத் தசும்பின் வயிரியர்
உண்டெனத் தவா அக் கள்ளின்
வண் கை வேந்தே"[12]

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. கடல்பிறக்கோட்டிய குட்டுவன் தன்னை நாடி வருவோருக்குப் பொன்னையும், பிடிகளையும் களிறுகளையும் கொடுப்பது மட்டுமல்லாது எப்போது நிறைந்தும் குறையாமலும் இருக்கக்கூடிய கள்ளினை மற்றவருக்குக் கொடுத்து

அவர்களை மகிழ்ச்சிப்படுத்துபவன் என அவனின் கொடைச்சிறப்பையும் செல்வ மகிழ்ச்சியையும் இப்பாடலில் குறிப்பிடும் பரணர் தன் உள்ளத்தில் உண்டான மகிழ்ச்சியை இங்கு உணர்வாகப் பதிவுசெய்கின்றார்.

இவ்வாறு ஔவை இரண்டு பாடல்களிலும் பரணர் மூன்று பாடல்களிலும் மன்னர்களின் செயல்களால் உண்டான மகிழ்ச்சியை வெளிப்படுத்தியுள்ளது இங்கு நோக்கத்தக்கது.

**அறிவுரை**

பகை நாட்டு மன்னர்களின் தவறான நிலையைச் சுட்டிக்காட்டி அதனால் ஏற்படும் நிகழ்வைக்கூறி அவர்களுக்கு அறிவுரை கூறுவதாக ஔவை ஆறு (புறம்.87, 88, 89, 97, 104, 367) பாடல்களைப் பாடியுள்ளார். இதில் தன் மனத்தில் இருக்கும் உணர்வு அறிவுரை கூறும் நிலையில் வெளிப்படுகின்றது.

மன்னனின் வீரச்சிறப்பை எடுத்துக்கூறி அவனுடன் போரிடுவீர்களாயின் அழிவது உறுதி என (புறம்.87) குறிக்கின்றாள். இதனை,

"களம் புகல் ஓம்புமின் தெவ்வீர்! போர் எதிர்ந்து,
எம்முளும் உளன் ஒரு பொருநன்; வைகல்
எண் தேர் செய்யும் தச்சன்
திங்கள் வலித்த கால் அன்னோனே"[13]

என்ற பாடலடிகள் உணர்த்தும்.

பகைவர்களே! போர்க்களம் புகுதலைத் தவிருங்கள். போரை எதிர்நோக்கியவனாய் எம்மிடத்தும் ஒரு வீரன் உள்ளான். அப்போர் மறவன் ஒருநாளில் எட்டுத்தேரைச் செய்யும் தச்சன், ஒரு மாதம் கூடிச் செய்த

தேர்க்காலிற்கு ஒப்பானவன் எனக் கூறுகிறாள். ஒருநாளில் எட்டுத்தேரைச் செய்யும் தச்சன் ஒருமாதம் செய்த தேர்க்கால் எவ்வாறு வலிமையானதாக இருக்குமோ அதைப் போன்றவன் என் வீரன் என்று அவனின் வீரத்தையும், அவனிடம் போர் தொடுத்தால் அழிவது உறுதி என்பதையும் தேர்த் தச்சனின் உவமை கொண்டு ஔவை தனது உணர்வை அறிவுரையாகப் பகை மன்னர்களுக்கு விடுக்கின்றாள்.

ஔவைக்கு மேலாண்மையான உறவாக மனத்தில் இருக்கிறது. இதற்கான பதில்கள் மன அலசல் மூலம் தேடினால் பதில் 'நனவிலி ரீதியானது (Unconscious) அது எனலாம். "On Narcissism என்ற ஃபிராய்டின் அறிமுகத்தில் சுயமோகம் என்ன மாதிரியெல்லாம் உறுப்பெறும், வெளிப்படும் என்று விவாதித்துள்ளார். அதில் ஒன்று "Some one who was once Part of himself." அதாவது இது தற்காதல் (Narcissism) ஒரு வகையான பிணைப்புத் தற்காதல் (Anadytic Narcissism) என்பதாகும்"[14] என்பர்.

ஔவையின் சித்தத்துடன் அவராகவே ஒன்றிணைந்து போயுள்ள 'ஒருவீரன் உளன்' அவன் அதியமான் என்பவனாவான். தன்னின் பகுதியாகத் தன்னுள் இருக்கும் அதியமானைப் பகைவர்கள் சீண்டுவது, போருக்கு அழைப்பது, தன்னைச் சீண்டுவதாகின்றன. தன்னைக் காயப்படுத்தியதாக அவரின் மோகத்திற்குப் படுகிறது. அதாவது அது தற்காதலின் மீதான (Narcissistic Trauma) காயமாகிவிடுகிறது. இதன் காரணமாகவே, அதியமானின் வீரத்தைச் சொல்லி நனவிலி ரீதியாகப் பகைவரை அச்சுறுத்துகிறார்.

ஔவை அதியமானின் பகைவரைக் கண்டதும், அவர்களை எச்சரிப்பதற்கான உணர்வுப்பூர்வமான சொல்லாடல் அல்ல அது. மாறாக

ஔவையின் தன்மோகத்தில் ஒரு பகுதியாக பங்கேற்றிருக்கும் அதியமானுக்கு எற்பட்ட காயமே கிளர்ந்து ஒரு வானளாவிய வீரத்தைப் பகைவர் முன் தற்காப்பாக அவர்களை அச்சுறுத்த வைக்கிறது. எனவே ஔவை இப்பாடல் வழி அதியமானின் வீரத்தைக் குறிப்பிட்டுப் போரைத் தவிர்க்க அறிவுறுத்துகிறார்.

ஒரு நாளைக்கு எட்டுத் தேர் செய்யும் தச்சன் ஒரு மாதங்கூடிச் செய்த தேர்க்காலின் தன்மையை அதியமானொடு ஒப்பிடுகையில் ஔவையார் சமுதாயத் தொழிலாளி தச்சனின் திறமையையும் பொருந்தக் கூறுவதில் மக்கட் பண்பானது மலர்கிறது.

எம்மன்னனைக் கானும் முன்பே பல படைகளைக் கொண்டு போரிடுவோம் என்று கூறுவதைத் தவிருங்கள் என்பதை,

“யாவிர் ஆயினும் கூழை தார் கொண்டு
யாம் பொருதும் என்றல் ஓம்புமின் - ஓங்கு திறல்
ஒளிறு இலங்கு நெடுவேல் மழவர் பெருமகன்,
கதிர்விடு நுண் பூண் அம் பகட்டு மார்பின்
விழவு மேம்பட்ட நல் போர்
முழவுத் தோள் என்னையைக் காணா ஊங்கே”[15]

எனும் (புறம்.88) பாடலடிகளில் சுட்டுகிறார் ஔவையார்.

வீரம் பேசக்கூடிய மன்னனே நீ! எத்தகைய வன்மையுடையவராயும் இருக்கலாம். உயர்ந்த வலிமையையும் ஒளியுடன் விளங்கிய நெடிய வேலையும் உடைய இளையோர்க்குத் தலைவன்; சுடர்விடும் நுண்ணிய வேலைப்பாடமைந்த பூணணிந்த அழகிய வலிய மார்பினையும் களவேள்வி முதலாகிய விழாவினால் சிறந்த நல்ல போரைச் செய்யும் முழவு போன்ற

தோளினையும் உடையவன் என் இறைவன். இத்தகையவனைக் காணும் முன்பாக "தூசிப்படையையும் அணிப்படையையும் கொண்டு அவனுடன் நாங்கள் போரிடுவோம்" எனக் கூறுதலைத் தவிருங்கள் என அறிவுறுத்துகிறாள்.

எம் தலைவனான அதியமானை நீங்கள் காணும் முன் தரைப்படையாகிய காலாட்படையைக் கொண்டு போரிடுவோம் என்பதைத் தவிருங்கள் ஏனெனில் அவனை நீங்கள் பார்த்தால் இச்செயலில் இருந்து பின்வாங்குவீர்கள் என்பது தன் ஆழ்மனத்திலிருந்து வெளிப்படும் அறிவுரையாக அமைகின்றது.

பகை மன்னன் வினவுவானாக அதற்கு விடையிறுக்கும் விறலி கூற்றாக ஔவை (புறம்.89) இப்பாடலை அமைத்து அதில் அவனுக்கு அறிவுரை கூறுகிறாள். இதனை,

"எறி கோல் அஞ்சா அரவின் அன்ன
சிறு வல் மள்ளரும் உளரே; அதா அன்று
பொதுவில் தூங்கும் விசியுறு தண்ணுமை
வளி பொரு தெண் கண் கேட்பின்
அது போர் என்னும் என்னையும் உளனே"[16]

என்ற அடிகள் மூலம் சுட்டுகிறார்.

மை தீட்டிய கண்ணினையும் ஒளியுடைய நெற்றியையும் உடைய விறலியே! பெரிய இடம் அமைந்த உன் நாட்டில் என்னோடு போரிடுவோர் உண்டா என வினவுகின்றாய். அடங்காத போரினைச் செய்யும் படையையுடைய வேந்தனே! நீ போர் செய்ய விரும்பினால் அடிக்கும் குச்சிக்கு அஞ்சாது சீறும் பாம்பினைப் போன்ற இளைய, வலிய வீரரும் எம் நாட்டில் உள்ளனர். அவரேயன்றிப் பொதுமன்றத்தில்

தொங்குகின்ற இழுத்துக் கட்டப்பட்ட முழவினிடத்துக் காற்று மோதிக் கண்ணிடத்து தெளிந்த ஓசையை எழுப்புதலைக் கேட்ட அளவில் அது 'போர்ப் பறை முழக்கம்' என்று மகிழும் என் தலைவன் அதியமான் உள்ளான் என்கிறார்.

குச்சிக்கு அஞ்சாது எவ்வாறு பாம்பு சீறுமோ அதுபோல போருக்கு அஞ்சாத வீரர்கள் உடையதும், முரசில் காற்று மோதும்போது உண்டாகும் ஒலியைக் கேட்டுப் போர்ப்பறை முழக்கம் என என்னும் தலைவனும் எம் நாட்டில் உள்ளனர். எனவே, நீ எம் நாட்டின் மீது போர் தொடுக்கும் அவாவில் செல்ல முனையாதே என பகை நாட்டு மன்னனுக்கு அறிவுறுத்துகிறார். இங்கு ஔவையின் மன உணர்வு அறிவுறுத்தும் நிலையில் அமைந்துள்ளது.

அதியமானுடன் போரிடுவீர்களானால் நீங்கள் உங்களுடைய உரிமை மகளிரைப் பிரிந்து உறைவீர். எனவே அதனை உணர்ந்து அவனுடன் போரிடுங்கள் என போரைத் தவிர்க்க அவர்களுக்கு (புறம்.97) அறிவுரை கூறுகிறார். இதனை,

"பிணிக் கதிர், நெல்லின் செம்மல் மூதூர்
நுமக்கு உரித்தாகல் வேண்டின் சென்று அவற்கு
இறுக்கல் வேண்டும் திறையே மறுப்பின்
ஒல்வான் அல்லன் வெல்போரான் எனச்
சொல்லவும் தேறீர் ஆயின், மெல் இயல்
கழற் கனி வகுத்த துணைச் சில் ஓதி
குறுந் தொடி மகளிர் தோள் விடல்
இறும் பூ அன்று; அஃது அறிந்து ஆடுமினே"[17]

என்ற அடிகளில் புலப்படுத்துகிறார்.

வளைந்த தாளினையும் ஒன்றுடன் ஒன்று பிணித்தது போல் செறிந்து முற்றிக்கிடக்கும் நெல்மணிகளையும் உடைய நெற்கதிர்கள் நிறைந்த தலைமை பொருந்திய பழமையான இவ்வூர் உங்களுக்கே உரிமையாக வேண்டுமெனில் அவனுக்குத் திறை தருதல் வேண்டும். மாறாக மறுத்தால் உடன்பட்டு விட்டுவிடுபவன் அல்ல அவன். வெல்லக்கூடிய போரினை உடையவன். அதியமானின் வீரம் அறியாது போர் செய்தால் உயிர் நீங்குதல் திண்ணம். எனவே, அதை அறிந்து போர் செய்வீர் என்றுரைக்கிறார்.

பகையரசர் அதியமானுக்குப் பணிந்து திறை செலுத்தி வாழ மறுத்தால் என்னவாகும் என்பதை அச்சுறுத்திக் கூறுவதற்கு முன் அதியனின் வாள், களிறு, குதிரை, கேடயம் ஆகியவற்றின் தோற்றங்களை அடுத்தடுத்து எடுத்தியம்புகிறார்.

அழகிய செல்வமுடைய ஊர் உங்களுக்கே சொந்தமாகத் திறை செலுத்துவீர்; இல்லையாயின் அவனிடம் போரிட்டு வெற்றி பெறுதல் இயலாது என பகைவர்க்கு ஔவை அறிவுரை கூறிப் போர் செய்யாது பிழைத்திருக்கக் கூறும் பாங்கு இங்கு நோக்கத்தக்கது.

அரசனின் வலிமையைக் கூறி இளையர் எனக் கருதி அவனுடன் போரிட்டால் நீங்கள் தோற்று ஓடுவது உண்மை. எனவே உங்களைப் பாதுகாத்துக்கொள்ளுங்கள் என (புறம்.104) ஔவை உணர்த்துகிறார். இதனை,

"ஊர்க் குறுமாக்கள் ஆடக் கலங்கும்
தாள் படு சில் நீர்க் களிறு அட்டு வீழ்க்கும்
ஈர்ப்புடைக் கராஅத்து அன்ன என்னை

நுண் பல் கருமம் நினையாது

இளையன் என்று இகழின், பெறல் அரிது ஆடே"[18]

என்ற அடிகளில் சுட்டுகிறார்.

ஊரிலே உள்ள சிறுபிள்ளைகள் நீர் ஆடக் கலங்கும் முழங்காலளவான நீருடைய தாயினும் அதனுள் வாழும் முதலை யானையைக் கொன்று வீழ்த்திவீடும். அதுபோல எம் மன்னனின் வலிமையையும், நுண்ணிய ஆற்றலையும் அறியாது அவனை இளையன் என்று மதியாது போர் தொடுப்பின் நீங்கள் வெற்றிபெறுதல் அரிது. ஆகவே உங்களைப் பாதுகாத்துக்கொள்ளுங்கள் என்கிறார்.

பெரிய யானையை முதலை வீழ்க்கும் என்றதனால் வலிமையுடைய மன்னன் போர் தொடுத்துவரினும் அவனை வீழ்க்கும் தன்மையன் அதியமான் என்பதை உணர்த்த "களிறட்டு வீழ்க்கும் ஈர்ப்புடைக் கராஅத் தன்ன என்னை" எனப் பகைநாட்டு மன்னருக்கு அறிவுறுத்தும் தன்மையில் ஔவையார் தனது மனஉணர்வை வெளிப்படுத்துகிறார்.

மூன்று வேந்தர்கள் ஒருங்கே கூடியிருப்பதைக் கண்ட ஔவை அந்தனர்கள் வளர்க்கும் முத்தீக்கு ஒப்பிட்டு உவமையாகக் கூறி அவர்களுக்கு (புறம்.367) அறிவுரை கூறுகிறார் ஔவை. இதனை,

"வாழச் செய்த நல்வினை அல்லது

ஆழுங் காலைப் புணைபிறிது இல்லை

ஒன்று புரிந்து அடங்கிய இருபிறப் பாளர்

முத்'தீப்' புரையக் காண்தக இருந்த

கொற்ற வெண்குடைக் கொடித்தேர் வேந்திர்!

யான்அறி அளவையோ இதுவே"[19]

என்ற அடிகளில் உணர்த்துகிறார்.

பொருளை யாசித்து நின்ற பார்ப்பார்க்குக் கைநிறைய பொன்னும், பொருளும் கொடுத்தும், பன்னாடையால் வடிக்கப்பட்ட கள்ளின் தெளிவை உண்டு மகிழ்ந்தும், வேண்டியவர்க்கு (இரவலர்க்கு) வேண்டியதைக் குறைவறக் கொடுத்தும் இவ்வுலகில் வரையறுக்கப்பட்ட வாழ்நாள் முழுதும் குறைவற வாழ்தலே நான் வேண்டுவது என்கிறார். அந்நல்வினை இன்றி இறக்குங்காலை துணையாவது ஒன்றும் இல்லை. வீடுபேறு ஒன்றையே விரும்பி ஆசைகளை அடக்கிய அந்தணர் எடுக்கும் முத்தீயைப் போல அழகுற வீற்றிருந்த வெற்றி வெண்குடையும் கொடி உயர்த்திய தேரும் உடைய மூவேந்தர்களே நான் அறிந்த அளவில் முடிவாகத் தெரிந்தது இது மட்டுமேயாகும் என நிலையாமையை அவர்களுக்கு அறிவுறுத்துகிறார்.

மூவேந்தர்களும் ஒருவருக்கொருவர் பகைகொண்டு போர் செய்யாது நட்பு பாராட்டி பரிசிலருக்கு வேண்டிய பொருளைக் கொடுத்து வாழ்தலே நன்று. அந்தணர் எடுக்கும் முத்தீயை இவர்களுக்கு உவமை காட்டி வானத்தில் தோன்றும் வின்மீன்களிலும் பெரிய மழைத்துளிகளிலும் உயர்ந்து நும்முடைய வாழ்நாட்கள் விளங்கும் என மூவருக்கும் அறிவுரை கூறி வாழ்த்துகிறார். இங்கு மூவேந்தரும் ஒற்றுமையுடன் இருக்கவேண்டும் என்பதையே தன் உணர்வாக வெளிப்படுத்துகிறார்.

யுத்தம் என்றாலே வெற்றி, தோல்வி இரண்டிலொன்று உறுதியாக உள்ளது. ஆனால் தோல்வியைவிட ஔவையின் சித்தத்திற்கு வேறொன்று பிரச்சினையாக உள்ளது. அது மண்ணுக்குத் தொடர்பில்லாத மன்னன் என்பதுதான். அதை அவர் விரும்பவில்லை. தோற்ற வேந்தனுடன் அந்த நாடும் மறைந்தொழியாமல் நின்று என்கிறார். நாடு நிற்பதை

விரும்பவில்லை மாறாக வெறுக்கிறார். ஏனென்றால் மண்ணுக்குத் தொடர்பில்லாத வேந்தன் வெற்றிபெற்றால் நாடு கைமாறும் என எண்ணுகிறார்.

அப்படி மாறும் என்று எண்ணும்போதே மனச்சோர்வு (Mental Depression), பதட்டம் (Anxiety), மகிழ்ச்சியின்மை (unhappiness) வந்துவிடுகின்றன. அதனால் தான் தோற்ற வேந்தனுடன் மறைந்தொழியாமல் நின்று அதாவது அந்த நாடும் செத்து விட்டிருந்தாலும் பரவாயில்லை என்ற குறிப்புத் தொனிக்கக்கூறுகிறார். ஒரு தொடர்புமில்லாத வேற்று நாட்டு வேந்தர்க்கு இந்நாடு உரியதாகிவிடும் என எண்ணும்போது அவர் தன்னிலையில் பிளவைச் (Conflict) சந்திக்கிறார்.

பிளவானது வாழ்வதற்கான விருப்பம், சாவதற்கான விருப்பம் ("Desire to Live And Desire To Die") என்ற இரண்டுக்குமிடையில் இந்தச் சாவு விருப்பமானது இந்த மண்ணுக்குச் சொந்தமில்லாதவர்களால் இந்த மண் ஆளப்பட்டுவிடக் கூடாது. அப்படி ஒரு நிலை வந்தால் என்ற வரலாற்றுப்பூர்வமான கற்பனை அவருக்குள் பயத்தை உருவாக்கிவிடுகிறது. ஏனெனில் ஒளவையின் தன்னிலையானது இந்த மண்ணின் மைந்தர்களையே வேந்தராக அடையாளப்படுத்தி அதனுடன் ஒட்டி உறவாடி வந்திருக்கிறது.

"ஒளவையின் லட்சியம் வேந்தர்க்கு ஆணையிடுகிறது. 'வீடு பேறொன்றையே விரும்பிப் புலன்கண்மேற் செல்லுகின்ற ஆசைகளை அடக்கியமைந்த அந்தணர் எடுக்கும் முத்தீயைப் போல' என்று, ஆசைக்கு அணை போடச் சொல்லுகிறார். நாடாசை, பதவி ஆசை என்பன இயற்கைத் தேவைகள் (Needs) போன்றதல்ல. இது சுயமோக வெறியால் ஏற்படுவது, ஆகவே தான் அதற்குக் கட்டுப்பாடு விதிக்கிறார். இந்தத் திடீர்த் திருப்பம்,

அதாவது கொடுந்துன்பச் சாவு விருப்பம் (Death wish) தன் நாடு மாற்றான் கைக்கா என்பதலிருந்து வாழும் ஆசைக்கு (Desire to live) திரும்பியதால் தான் ஏற்படுகிறது. உடனடியாக கட்டளைகள், ஆலோசனைகள் பிறக்கின்றன"[20] என்கிறார்.

தமிழக மன்னர்களை ஒருசேரக் கண்ட காட்சியானது ஔவைக்கு ஒரே நேரத்தில் அவர் சித்தத்தில் மகிழ்ச்சி மற்றும் கொடுந்துன்பம் ஆகியவற்றிற்கு இடையே ஒரு மனப்போராட்டத்தைத் தோற்றுவிக்கிறது. இதன் காரணமாகவே மூவேந்தருக்கும் அறிவுரை கூறுவதாக அவரின் மன உணர்வு வெளிப்படுகிறது.

## புகழ்தல்

அதியமான் நெடுமான் அஞ்சியின் வீரத்தைப் புகழ்ந்தும் இரவலர்களுக்கு அவன் அள்ளிக் கொடுத்த கொடையை நினைந்தும் ஔவை பாடிய 13 பாடல்களில் அவரது மனவுணர்வுகள் வெளிப்படுகின்றன.

பகை மன்னர்கள் உனது தூசிப்படையைக் கண்டு போரிட இயலாது சிதறி ஓடினர். இவ்வாறு ஓடும் பெருமை இல்லாத மன்னர் நோயால் இறந்தனர். அவர்களைப் புதைக்கும்போது வாளால் வடு ஏற்படுத்திப் புதைத்தனர். ஆனால் உன்னைப் போன்று போரிலே விழுப்புண் பெற்றவர் எவருமில்லை என அதியமானின் வீரப்புகழை ஔவை (புறம்.93) குறிப்பிடுகின்றார். இதனை,

"தார் தாங்குதலும் ஆற்றார் வெடிபட்டு
ஓடல் மரீஇய பீடு இல் மன்னர்
நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇ
காதல் மறந்து அவர் தீது மருங்கு அறுமார்
அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்

திறம்புரி பசும்புல் பரப்பினர் கிடப்பி,
மறம் கந்தாக நல் அமர் வீழ்ந்த
நீள் கழல் மறவர் செவ்வுழிச் செல்க! என
வாள் போழ்ந்து அடக்கலும் உய்ந்தனர் மாதோ"[21]

என்ற அடிகளில் விளக்குகிறார்.

அதியமான் பேராற்றலால் வீரத்துடன் களத்தில் பொருது புறங்கொடாது விழுப்புண் தாங்கினன். பகைவர் அவனுடைய ஆற்றலுக்கு ஆற்றாது தோற்றோடினர். ஆதலால் அவர்கள் விழுப்புண் பெற இயலவில்லை. இது அதியமானின் பெருமையையும் ஏனையோர் சிறுமையையும் உணர்த்துகிறது. விழுப்புண் பெறாமலும் போர்க்களத்தில் வீரத்துடன் உயிரை கழக்காமலும் சிறுமையடைந்த பகை மன்னர் நோயால் உயிரிழந்தனர். இது அவர்களுடைய சிறுமையை மிகுதியாக்கியது. அம்மன்னரை வீரத்துடன் போரில் உயிரிழந்த வீரர் புகும் வீரச் சுவர்க்கம் புகச் செய்ய மார்பில் வாளால் வடுச்செய்தனர். ஆகவே உய்ந்தனர், தானாய் வீரச்சுவர்க்கம் செய்யாது இறந்தபின்னும் சிறுமையடைந்தனர். இத்தகையோர் அழிந்த பிறகு அதியமானைப் போரிட்டு வெல்ல யாவர் உள்ளார். எவருமில்லையே என்று அதியமானின் போர் வலிமைக்கு எதிரே நின்று வீரத்துடன் இறக்காமல் இறந்த பின் வடு ஏற்படுத்துவது என்று அவர்களை எள்ளி அதியமானின் வீரத்தைப் புகழ்வதாக அவரது உள்ள உணர்வு வெளிப்படுகிறது.

அதியமான் எங்களுக்கு இனிமை தரக்கூடியவனாகவும் பகைவருக்குத் துன்பம் தரக்கூடியவனாகவும் விளங்குகின்றான் என அவனது இருபண்புகளை (புறம்.94) புகழ்ந்துரைக்கிறார் ஔவை. இதனை,

“ஊர்க் குறுமாக்கள் வெண் கோடு கழா அலின்
நீர்த்துறை படியும் பெருங் களிறு போல
இனியை பெரும! எமக்கே; மற்று அதன்
துன் அருங் கடாஅம் போல
இன்னாய் பெரும! நின் ஒன்னாதோர்க் கே”[22]

என்ற பாடல் சுட்டி நிற்கிறது.

யானையின் எளிமையும் வன்மையும் அதியமானின் பண்பிற்கு உவமையாயின. ஊரிலுள்ள சிறுவர்கள் நீர்த்துறையில் யானையின் தந்தத்தைக் கழுவும்போது களிறு எளிமையுடன் படுத்துகிடக்கும். யானை எளிமையாய் இருத்தல் அதியமானின் அருளுள்ளத்தையும் மதம் கொள்ளுதல் போர்க்களத்தே பகையரசரால் அணுக இயலாத பேராண்மையையும் உணர்த்தின. இருவேறு தன்மைகளும் ஒருங்கே பெற்றவன் அதியமான் என்கிறார் ஔவை. இங்கு அதியமானின் இருவேறு பண்பிற்கு யானை உவமையாகச் சித்தரித்துப் புகழ்கின்றார். இங்கு ஔவையின் மனம் புகழ்ச்சியாக வெளிப்படுகிறது.

தொண்டைமானிடம் தூது சென்ற ஔவை அவனது போர்க்கருவிகள் புத்தம் புதியதாக இருப்பதைக்கண்டு புகழ்வதுபோல இகழ்கிறார். இங்கு அதியமானின் படைக்கருவிகள் கொல்லன் உலைக்களத்திலே செப்பனிட கிடக்கிறது என்று அவனது போர் வீரத்தை மறைமுகமாக (புறம்.95) சுட்டுகிறார். இதனை,

“இவ்வே பீலி அணிந்து, மாலை சூட்டி,
கண் திரள் நோன் காழ் திருத்தி நெய் அணிந்து
கடியுடை வியல் நகரவ்வே; அவ்வே,

பகைவர்க் குத்தி, கோடு, நுதி, சிதைந்து

கொல் துறைக் குற்றிலமா தோ"[23]

என்ற அடிகளில் உரைக்கின்றார்.

பெண்டிரும் தூது சென்ற சிறப்புக்குரியர் என்பதை இப்பாடல் உணர்த்துகிறது. தொண்டைமான் படைக்கலங்கள் அழகுற விளங்கின என்னும் புகழ்ச்சியில் அவன் போர்க்களம் கண்டு போரிடாத தன்மையால் படைக்கலங்கள் பொலிவு மாறாமலிருந்தன என்றுரைக்கிறார். எனவே தொண்டைமான் போரில் ஈடுபடாதவன் என்னும் இகழ்ச்சி உணர்த்தப்பட்டது. அதியமான் படைக்கலங்கள் பொலிவிழந்து கொல்லன் பட்டறையுள் கிடந்தன எனும் புகழ்ச்சி அவன் போர் பல கண்டு வென்றவன். எனவே படைக்கலங்கள் நுனி சிதைந்து திருத்தப்படுவதற்கு வந்தன என்பதுணர்த்திற்று. ஆகவே அதியமானின் போராற்றல் புகழ்ந்துரைக்கப்பட்டது. போரினால் படைக்கலம் சிதைதலை 'கடிய உரற எறிந்து சிதைந்த வேல்' (பதி.69:4-5) என்ற பதிற்றுப்பத்து அடியால் உணரலாம்.

வேல் தாங்கும் மறவர் படை மட்டும் வெற்றிக்கு அடிப்படையாகிவிடாது. வறுமை யொழிந்த வீறுபெற்ற மக்கட் சக்தியும், வேலொடு வென்றி தருவது எனும் நுட்பத்தை இறுதி நான்கு வரிகளில் சுட்டுகிறார்.

"இத்தூது சென்றமையாலும் இவ்வமையத்து எடுத்து மொழிந்த வீர வார்த்தையானும், இவரது ஆண்மையும், அறிவும், செய்ந்நன்றி மறவாமையும் நன்கறியத் தக்கன"[24] என்று ரா.இராகவையங்கார் சுட்டிக் காட்டுகிறார்.

இங்கு ஔவை தொண்டைமானைப் புகழ்வதுபோல இகழ்கிறார். அதியமானை இகழ்வது போல புகழ்கிறார். மறைமுகமாகத் தொண்டைமானுக்குப் போர் தொடுத்தால் நீ தோல்வியுறுவாய் என்று அறிவுறுத்துகிறார். இதில் ஔவை அதியமானின் வீரத்தை மறைமுகமாகப் புகழ்வதன்மூலம் அவரின் மனவுணர்வு வெளிப்படுகிறது.

அதியமானிடம் ஒருநாள் அல்ல பல நாள் சென்றாலும் முதல்நாள் போலவே பரிசில் தருபவன். சிறிது காலம்தாழ்த்தினும் தவறாது தருபவன் என அவனது கொடைச்சிறப்பைப் (புறம்.101) புகழ்கிறார் ஔவை. இதனை,

"ஒருநாள் செல்லலாம்; இருநாள் செல்லலாம்;
பல நாள் பயின்று பலரொடு செல்லினும்
தலைநாள் போன்ற விருப்பினன் மாதோ
இழை அணி யானை இயல்தேர் அஞ்சி
அதியமான் பரிசில் பெறூஉம் காலம்
நீட்டினும் நீட்டாது ஆயினும் களிறு தன்
கோட்டு இடை வைத்த கவளம் போலக்
கையகத்தது; அது பொய் ஆகாதே"[25]

என்றுரைக்கிறார்.

பரிசிலுக்கு வருந்திய புலவர் தனது நெஞ்சிற்குக் கூறும் தன்மையில் இப்பாடல் அமைந்துள்ளது. ஒருநாள், இருநாள், பலநாள் எனப் பலரோடு சென்றாலும் தலைநாள் போன்றே விரும்பினான் என்பதிலிருந்து அதியமானின் அன்பு உள்ளமும் முகம் சுருங்காத ஈகைத் தன்மையும் கொண்ட மாண்பும் புலனாகின்றன. யானை வாயில் கொண்டு உண்ணும் அளவும் கோட்டிடை வைத்த கவளம் போலப் பரிசில் கையகத்தது. அன்றியும் யானைக் கொம்புகளுக்கிடையே வைத்த உணவு போல பரிசில் தவறாது கிடைக்கும் என தனது நெஞ்சிடம் உரைக்கிறார்.

*யானையின் கொம்புகளுக்கிடையே வைக்கப்பட்ட உணவு எவ்வாறு தவறாது வாய்க்குள் செல்லுமோ அதுபோல அதியமானின் பரிசில் தவறாது நாம் எத்தனை நாள் சென்றாலும் முதல்நாள் போலவே கிடைக்கும் என அதியமானின் பரிசில் தரும் நிலையையும் அவனது கொடைப்புகழையும் தன் நெஞ்சிற்குப் புகழ்ந்துரைக்கிறார்.*

*அதியமான் நெடுமான் அஞ்சியின் மகன் பொகுட்டெழினியின் நிழலில் வாழ்பவர்களுக்கு எத்துன்பமும் நேராது என்று அவனது புகழைக் (புறம்.102) குறிப்பிடுகின்றார். இதனை,*

*"கீழ்மரத்து யாத்த சேம அச்சு அன்ன*
*இசை விளங்கு கவி கை நெடியோய்! திங்கள்*
*நாள் நிறை மதியத்து அனையை; இருள்*
*யாவணதோ, நின் நிழல் வாழ்வோர்க்கே?"[26]*

*என்ற பாடலடிகளில் விளக்குகிறார்.*

*உப்பு ஏற்றப்பட்ட வண்டியானது மேடு பள்ளத்தில் செல்கின்றபோது அச்சானது முறிந்தால் சேம அச்சு உதவுவதைப் போல தான் காக்கின்ற நாட்டிற்கு ஒரு துன்பம் வந்தாலும் அத்துன்பத்தை நீக்கிக் காத்தற்குரியவன், அச்சேமவச்சுப் போன்ற புகழ்விளங்கிய கொடையால் கவிந்த கையையுடையவன் பொகுட்டெழினி என உரைக்கின்றார். நீ திங்களாகிய முழுநிலவிற்கு ஒப்பிட்டு உன் நிழலில் வாழ்பவர்களுக்குத் துன்பமாகிய இருள் எங்கும் இல்லை என்கிறார்.*

*ஆபத்து நேரத்தில் வண்டிக்குச் சேமவச்சு உதவுவதுபோல நாட்டில் ஏற்படும் துன்பங்களை நீக்கி காக்கும் தன்மை கொண்டவன் என ஔவை*

புகழ்கின்றார். இப்புகழுரையானது அவரின் மன வெளிப்பாடாக அமைகின்றது.

வெம்மை தன்மையுடைய சுரத்திலே தனக்கு உணவு இட்டுக் கவிழ்ந்துகிடக்கும் உண் கலத்தை மலர்த்த இங்கு யாரும் இல்லை என வருந்தும் விறலியை அதியமானிடம் அவனது கொடைத்தன்மையைக் கூறி (புறம்.103) ஆற்றுப்படுத்துகிறார். இதனை,

"பொழுது இடைப்படாஅப் புலரா மண்டை
மெழுகு மெல் அடையின் கொழு நிணம் பெருப்ப,
அலத்தற் காலை ஆயினும்,
புரத்தல் வல்லன்; வாழ்க, அவன் தாளே!"[27]

எனப் புகழ்கிறார்.

விறலியே நீ வருந்தவேண்டாம் உன் விருப்பத்தை நிறைவேற்றுபவன் அதியமான் ஒருவனே என்றுரைக்கிறாள். ஒரு பொழுதும் ஓயாமல் உண்ணவும் தின்னவும் படுதலால் ஈரம் காயாத உண்கலத்தில், மெழுகான் இயன்ற மெல்லிய ஆடை போலக் கொழுத்த நிணம் மிகும்படி அளித்தலில் வல்லவன். உலகமே வறுமையுற்ற காலமாயினும் பாதுகாத்தலில் வல்லவன் எனவே அவன் தாள் வாழ்க என அவனது கொடைத் தன்மையைப் புகழும் நிலையில் தனது மன உணர்வை வெளிப்படுத்துகிறார் ஔவையார்.

நாஞ்சில் நாட்டு மன்னன் நாஞ்சில் வள்ளுவனைக் குறைகூறுவது போல அவனது கொடைத் தன்மையைப் புகழ்ந்து பாடும் நிலையில் (புறம்.140) இவ்வுணர்வு ஔவையின் மனதிலிருந்து வெளிப்படுகிறது. இதனை,

"தடவு நிலைப் பலவின் நாஞ்சில் பொருநன்

மடவன் மன்ற; செந் நாப் புலவீர்!

வளைக் கை விறலியர் படப்பைக் கொய்த

அடகின் கண்ணுறையாக யாம்சில

அரிசி வேண்டினோமாக, தான் பிற

வரிசை அறிதலின் தன்னும் தூக்கி

இருங் கடறு வளைஇய குன்றத்து அன்னாது ஓர்

பெருங்களிறு நல்கியோனே; அன்னது ஓர்

தேற்றா ஈகையும் உளதுகொல்?"[28]

எனச் சுட்டுகிறார்.

பலா மரங்கள் நிறைந்த நாஞ்சில் நாட்டு மன்னன் அறியாமை நிறைந்தவன் போலும் விறலியர் தன் வீட்டு அருகில் பறித்துச் சமைத்த இலையின் மீது தூவும்பொருட்டு நாங்கள் சில அரிசி வேண்டினோம். அவன் புலவர்க்கு அளிக்கும் வரிசையும் அறிந்து தன் தகுதிப்பாட்டையும் உணர்ந்தவன் ஆதலால் தான் வறுமையைப் பார்த்தாலே அன்றித் தனது மேம்பாட்டையும் சீர்தூக்கி சுரம் சூழ்ந்த மலை போன்றதொரு யானையை அளித்தான். இவ்வாறு தெளியாது கொடுக்கும் கொடையும் உலகில் உளதோ? என்று வியப்புடன் மகிழ்ச்சி பொங்க அவனைப் புகழ்ந்துரைத்து அவளது மனமானது வெளிப்படுகிறது என்றால் அது மிகையல்ல.

தலைவனின் வெற்றிச் சிறப்பிற்கு உறுதுணையாக விளங்கிய வாளைப் புகழ்வதாக (புறம்.269) இப்பாடல் அமைகின்றது. இதனை ஔவையார்,

"கரந்தை நீடிய அறிந்து மாறு செருவில்

பல் ஆன் இன நிரை தழீஇய வில்லோர்

கொடுஞ்சிறைக் குரூஉப் பருந்து ஆர்ப்ப

தடிந்து மாறு பெயர்த்தது, இக் கருங்கை வாளே"[29]

என்றுரைக்கிறார்.

பசிய தழையால் விரவித் தொடுத்த கண்ணியை உடைய துடி கொட்டுவோன் அதனைக் கொட்ட, வடித்த கள்ளை உண்க என வேண்டியும் உண்ணாது கள்ளினை வாழ்த்தி வாளைக் கொண்டாய். மிகுதியான கரந்தையார் மறைந்திருத்தலை அறிந்து அவரோடு மாறுபட்டுப் போர் புரிந்தாய். அவருடைய பலவாகிய இனமான ஆனிரைகளைக் கவர்ந்து கொண்டு வளைந்த சிறகினையும் திரட்சியினையும் உடைய பருந்துகள் ஆரவாரிக்கும்படிக் கரந்தையராகிய வில் மறவர்களைக் கொன்று மாறுபாட்டினைப் போக்கியது உன் வலிமையான கையில் இருந்த இப்பெரிய வாளே என்கிறார்.

இங்குக் கரந்தைப் போரில் கரந்தை வீரர்களை வெல்ல உனக்குத் துணையாக இருந்தது உனது வாள் என்று சொல்லி அவனது வாளைப் புகழும் நிலையில் ஔவையாரின் புகழ்ச்சி மன உணர்வாக வெளிப்படுகிறது.

வீரன் ஒருவனின் குடிச் சிறப்புக் கூறி அவனுக்குத் தகும் வகையில் சிறப்புச் செய்க என மன்னனிடம் கூறுமிடத்து (புறம்.290) வீரனின் புகழை வெளிப்படுத்துகிறார் ஔவை. இதனை,

"நுந்தை தந்தைக்கு இவன் தந்தை தந்தை

எடுத்து எறி ஞாட்பின் இமையான், தச்சன்

அடுத்து எறி குறட்டின் நின்று மாய்ந்தனனே

மறப்புகழ் நிறைந்த மைந்தினோன் இவனும்

உறைப்புழி ஓலை போல

மறைக்குவன் - பெரும நிற்குறித்து வருவேலே”[30]

என சுட்டுகிறார்.

சினப்போர் இனக்களிற்று யானையும் தேரும் இருப்பினும் தொல் குடிப்பிறந்த மறச் சான்றோர் இல்லாது வெற்றி உண்டாகாது. வழிவழியாக உன்குடியோடு தொடர்புடையவராய் ஆற்றுதற்கரிய மறப்பணி புரிந்த குடியில் தோன்றியவன். வண்டியின் குடத்தில் செருக்கப்பட்ட ஆரக்கால் போல பகைவர் எறிந்த படைகளைத் தானேற்று மாண்டான். ஓலைகளால் மழையை மறைப்பதற்குச் செய்யப்பட்ட குடை போல உன்னை நோக்கி எறியும் வேலைத் தான் ஏற்றுத் தாங்குவான். ஆதலால் மன்னவனே கள்ளை முதலில் இவனுக்குத் தந்து பின் நீ உண்பாயாக என மறக்குடிப் பிறந்த போர் வீரனின் செயல் வீரத்தை, புகழை எடுத்துரைக்கும்போது புகழ்தல் எனும் உணர்வு வெளிப்படுகிறது.

போரில் பின்னிட்டு ஓடாத உறுதிமிக்க வீரன் ஒருவனின் உடல் கண்டு அவனை ஈன்ற தாய் அடைந்த பேற்றினை விளக்கும் நிலையில் (புறம்.295) இவ்வுணர்வு வெளிப்படுகிறது. இதனை,

“வருபடை போழ்ந்து வாய்ப் பட விலங்கி

கிடைப் படை அழுவத்துச் சிதைந்து வேறாகிய

சிறப்புடையாளன் மாண்பு கண்டருளி

வாடு முலை ஊறிச் சுரந்தன

ஓடாப் பூட்கை விடலை தாய்க்கே”[31]

என இப்பாடலடிகளில் விளக்குகிறார்.

படைக்கருவிகளைப் பகைவர் மேல் எறிந்து அவர்களைக் கொல்லும் போரில் தம்மை நோக்கி வரும் படையைப் பிறந்து போரிடுவதற்கு வேண்டும் இடத்தை உருவாக்கினான். ஆனால் போர்க்களத்தில் படைத்திரளின் இடையில் வெட்டுண்டு உடல் சிதைந்து வேறுபட்டான். புறமுதுகிட்டு ஓடாத சிறப்புக்குரிய வீரனின் தாயாகிய இவள் சிறப்பு வாய்ந்த தன் மகனின் மறமாண்பு கண்டு அன்பு மேலிட அத்தாயின் வற்றிய முலையிலிருந்து பால் ஊறிச் சுரந்தன என்றுரைக்கிறார். புறமுதுகிட்டு ஓடாத வீரனைப் பெற்ற தாய் நிலைகண்ட ஔவை வீரனின் செயலால் மகிழ்வுற்று புகழ்ந்துரைக்கிறாள். இங்கு ஔவையின் மனவெளிப்பாடாகத் தாய்மை உணர்வு வெளிப்படுகிறது.

'மண்டு அமர்க்கு உடைந்தனன் ஆயின் உண்ட என் முலை அறுத்திடுவேன் யான்' எனச் சூளுரைத்த வீரத்தாய் 'செங்களம் துளவுவோள் சிதைந்து வேறாகிய படுமகன் கிடக்கை காணுஉ, ஈன்ற ஞான்றினும் பெரிதுவந்தனளே' என்று காக்கைப் பாடினியார் நச்செள்ளையார் பாடியதன் நுட்பத்திற்கு மேலாகவும் ஔவையின் பாடல் அமைகின்றது. பின்னிடாத வீரத்தைக் கொள்கையாகக் கொண்ட வீரனின் தாய்க்குப் போர்க்களத்தில் சிதைந்து வேறாகிய வீரத் திருமகனின் உடலைக் கண்டு "வாடுமுலை ஊறிச் சுரந்தன" என்று ஔவையார் கூறியதற்கு மேல் தாய்மையின் வீரப் பண்பை உயர்த்திக் கூற எவரால் முடியும்? என்றே எண்ணத் தோன்றுகிறது.

அதியமானின் வீரமும், கொடையும் குறிப்பிட்டுப் (புறம்.315) புகழ்ந்துரைக்கின்றார். இதனை,

"இல்இறைச் செரீஇய ஞெலிகோல் போல
தோன்றாது இருக்கவும் வல்லன், மற்றதன்
கான்றுபடு கனைஎரி போல
தோன்றவும் வல்லன் - தான் தோன்றுங்காலே"[32]

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

போர் இல்லாத காலங்களில் அமைதியாக இருத்தலையும் போர் வேண்டிய இடத்து வெகுண்டு எழுதலையும் அதியமானின் இயல்புகளாகச் சுட்டுகிறார். தன்பால் வருவோர் மடவோராயினும் அவர்களையும் புரத்தலின் வல்லவனாக அவன் விளங்கினான். அஞ்சியின் சினம் ஆறிய தன்மைக்கும் வெளிப்பட்ட தன்மைக்கும் தீக்கடைக் கோல் உவமையாகக் கூறி அதியமானின் பண்பைப் புகழ்ந்துரைக்கின்றார். இவ்விடத்தில் ஔவையின் புகழ்ச்சி வெளிப்படுகிறது.

ஔவையார் அதியமானின் கொடை நலத்தைக் கிணைப் பொருநன் கூற்றில் (புறம்.390) வைத்துப் பாடியுள்ளார். இதனை,

"தன்னுழைக் குறுகல் வேண்டி, என் அரை
முதுநீர்ப் பாசி அன்ன உடைகளைந்து
திருமலர் அன்ன புதுமடிக் கொளீஇ
மகிழ்தரல் மரபின் மட்டே அன்றியும்
அமிழ்து அன மரபின் ஊன்துவை அடிசில்
வெள்ளி வெண் கலத்து ஊட்டல் அன்றி
முன்ஊர்ப் பொதியில் சேர்ந்த மென்நடை
இருப்பேர் ஒக்கல் பெரும்புலம்பு அகற்ற
அகடுநனை வேங்கை வீகண் டன்ன

பகடுதரு செந்நெல் போரொடு நல்கி

'கொண்டி பெறுக!' என்றோனே"[33]

எனச் சுட்டுகிறார். நெருங்குவதற்கு அரிய கடிய அரணை உடைய அதியன் என் இடையில் இருந்த பழமையான நீர்ப்பாசி போன்ற அனை ஆடையைக் களைந்து அழகிய பகன்றை மலரைப் போன்ற புத்தாடை கொடுத்துக் களிப்பினைத் தரும் கள்ளோடும் அமிழ்து போன்ற சுவையுடைய ஊன்துவையலோடு சோற்றை வெள்ளியால் ஆன வெண்மையான பாத்திரத்தில் கொடுத்தவன். அதோடு மட்டுமில்லாது ஊர் பொது இடத்தில் தங்கியிருந்த என் சுற்றத்தாரின் துயரைப் போக்க செந்நெல்லை நெற்போரோடே கொடுத்து மகிழ்வித்தவன் என்று அதியமானின் கொடையைக் கண்டு கிணைப் பொருநன் நிலையில் புகழ்ந்து கூறும்போது அவரது மன உணர்வு வெளிப்படுகிறது.

கிணைப் பொருநன் கூற்றாக அமைந்துள்ள இப்பாடல் எழினியின் வெற்றிச் சிறப்பும் கொடைச் சிறப்பும் (புறம்.392) சித்திரிக்கப்பட்டுள்ளன. இதனை ஔவை,

"ஊர்உண் கேணிப் பகட்டு இலைப் பாசி

வேர்புரை சிதாஅர் நீக்கி நேர்கரை

நுண் நூல் கலிங்கம் உடீஇ 'உண்' எனத்

தேட்கடுப்பு அன்ன நாட்படு தேறல்

கோள்மீன் அன்ன பொலங்கலத்து அளைஇ

ஊண்முறை ஈத்தல் அன்றியும் கோள்முறை

விருந்து இறை நல்கி யோனே"[34]

என்ற அடிகளில் உணர்த்துகிறார்.

அதியமானின் மகன் பொகுட்டெழினி, அதியன் உயிரோடு இருந்த போது இவனும் வாழ்ந்து அரசியலிலும் ஈடுபாடு கொண்டான். தந்தையையும் பாடி மகனையும் பாடிய சிறப்பிற்குரியவர் ஔவை. அறிய காவலைக் கடந்து பொகுட்டெழினியைக் கண்டால் கிழிந்த உடையைக் களைந்து நூலாடையைத் தருவான். புளிப்போற்றிய கள்ளை அளித்து என்னை உண்ணச் செய்வான் என்று அவனது கொடையைப் புகழ்கிறார். மேலும், பகை நாட்டைக் கைப்பற்றி அங்குக் கழுதை ஏர்பூட்டிக் கொள்ளும் வரகும் விதைப்பவன் என்பதைப் போர்க்களத்தை ஏர்க்களமாக உருவகிக்கப்பட்டுப் பாடியுள்ளார் புலவர். கிணைப் பொருநனின் பழைய தோற்றத்தை மாற்றி, கள் வழங்கி, பொற்கலத்திலே உணவளித்துப் போற்றினான் என்று ஔவை புகழ்ந்துரைக்கிறார்.

பரணர் பதிற்றுப்பத்து ஐந்தாம் பத்தில் இரண்டு (பதிற்.46, 47) பாடல்களில் செங்குட்டுவனின் கொடைச்சிறப்பையும் இரண்டு பாடல்களில் (பதிற்.44, 48) வாழ்த்தாகவும் புகழ்கின்றார்.

விறலியர் மனமகிழும்படி அணிகலன் முதலியனவற்றை நல்கி பாதுகாத்தான் என்று அவனது கொடைச் சிறப்பை (பதிற்.46) குறிப்பிடுகின்றார். இதனை,

"இழையர், குழையர், நறுந் தண் மாலையர்
சுடர் நிமிர் அவிர் தொடி செறித்த முன்கை
திறல் விடு திருமணி இலங்கு மார்பின்
வண்டு படு கூந்தல் முடி புனை மகளிர்
தொடை படு பேரியாழ் பாலை பண்ணி

பணியா மரபின் உழிஞை பாட

இனிது புறந்தந்து, அவர்க்கு இன் மகிழ் சுரத்தலின்"[35]

என்றுரைக்கிறார்.

தொடி அணிந்த முன்கையும் ஒளிவிடுகின்ற அழகிய மணி விளக்குகின்ற மார்பினையும் வண்டுகள் ஒலிக்கின்ற கூந்தலைக் கொண்டையாகப் புனைந்த பாண்சாதி மகளிர் பேரியாழில் பாலைப் பண்ணை அமைத்துப் பகைவர்களுக்குப் பணியாத உழிஞைத் திணையைப் புகழ்ந்துபாட அவர்களுக்குப் பொன்னும் பொருளும் இனிதே அளித்துப் பாதுகாத்து அவர்களுக்கு இனிய மகிழ்ச்சியை அளித்தான் என்று குறிப்பிடுகின்றார். பேரியாழைக் கொண்டு குட்டுவனைப் பாடும் பாண்மகளிருக்குக் கொடை அளித்துப் பாதுகாத்ததைப் பரணர் புகழ்ந்துரைக்கின்றார்.

சேரனின் கொடையைக் குறிப்பிட்டுப் புகழ்ந்துரைக்கின்றார். இதனை (பதிற்.47) பரணர்,

"அட்டு ஆனானே குட்டுவன் அடுதொறும்

பெற்று ஆனாரே பரிசிலர் களிரே"[36]

என்று குறிப்பிடுகின்றார். கடல் பிறக்கோட்டிய சேரன் செங்குட்டுவன் தன் பகைவரைக் கொன்று அது போதும் என மனநிறைவடையமாட்டான். அவ்வாறு அவன் பகைவரைக் கொல்லுந்தோறும் பரிசிலர் களிறுகளை ஓர் அளவு இன்றி அதாவது வரையறையின்றிச் சேரனிடமிருந்து பெற்றனர் என இம்மன்னனின் கொடைத் தன்மையைப் புகழ்ந்துரைக்கிறார் பரணர்.

உடல் வலிமையையும் நோய் நீங்கியதுமான செங்குட்டுவனின் உடலைச் சிறப்பித்து மன்னனை நெடுங்காலம் வாழ்க என (பதிற்.44)

பரணர் வாழ்த்துகிறார். இதனை,

"வைத்தலை மறந்த துய்த் தலைக் கூகை
கவலை கவற்றும் குரால் அம் பறந்தலை
முரசுடைத் தாயத்து அரசு பல ஓட்டி
துளங்கு நீர் வியலகம் ஆண்டு இனிது கழிந்த
மன்னர் மறைத்த தாழி
வன்னி மன்றத்து விளங்கிய காடே"[37]

என்ற பாடலடிகள் உணர்த்தும்.

கொழுப்பில்லாத பசிய இறைச்சித் துண்டங்களை வைத்த இடத்தை மறந்து துய் போன்ற உச்சிக் கொண்டை பொருந்திய தலையுடைய கோட்டானினது சேவலை வருத்துகின்ற பெண் கோட்டானையுடையது இடுகாடு. முரசங்கள் கொண்டு பழையதாய் வருகின்ற உரிமையையுடைய பகையரசர் பலரை வென்று; அசைகின்ற நீரையுடைய கடலால் சூழப்பட்ட இடமகன்ற உலகத்தை இனிமையாக ஆண்டு இறந்த மன்னரைக் கவிழ்த்த தாழிகளையும் வன்னிமரம் நிறைந்து நிற்கும் மன்றங்களை உடையது. இத்தகைய இடுகாடு நின் நோய் நீங்கிய யாக்கையைக் காணாதொழிவதாக என்று புகழ்ந்துரைக்கின்றார்.

இடுகாடுகளின் அமைப்பினைக் கூறி உன்னுடைய (சேரன்) நோய் நீங்கிய யாக்கையை இந்த இடுகாடு காணாது ஒழியட்டும் என சேரன் செங்குட்டுவனின் வலிமை பொருந்திய உடம்பைப் புகழ்ந்து வாழ்த்துகிறார் ஆசிரியர். இங்கு அவரது மன உணர்வு வாழ்த்தாக வெளிப்படுகின்றது.

ஆற்றின் துறையில் பரந்து கிடக்கும் மணலைக் காட்டிலும் மிகப் பல காலம் நீடு வாழ்க என (பதிற்.48) வாழ்த்துகிறார். இதனை,

"நின் மலைப் பிறந்து நின் கடல் மண்டும்
மலி புனல் நிகழ தரும் தீம் நீர்விழவின்
பொழில் வதி வேனில் பேர் எழில் வாழ்க்கை
மேவரு சுற்றமொடு உண்டு இனிது நுகரும்
தீம் புனல் ஆயம் ஆடும்
காஞ்சி அம் பெருந் துறை மணலினும் பலவே"[38]

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

குட்டுவனே உனது மலையிலே தோன்றி உனக்குரிய மேல் கடலிலே சென்று விழும் ஆற்றினிடத்தே புதிதாக வரும் இனிய நீர் விழாவையும் வேனிற்காலத்தே குளிர்ச்சியின் பொருட்டுச் சோலைகளில் வாழும் பெரிய அழகையுடைய வாழ்க்கையையும் உடைய விரும்புதல் வருகின்ற சுற்றமொடு உண்டு மற்ற இன்பங்களையும் இனிது நுகருகின்ற மக்களின் தொகுதி ஆடும் இனிய புனலையுடைய காஞ்சி என்னும் ஆற்றின் அழகிய பெரிய துறையிடத்தே உள்ள மணலைக் காட்டிலும் மிகப் பல காலம் வாழ்க என வாழ்த்துகிறார். இங்கு ஆற்றில் எவ்வாறு மணற்பரப்பானது பரந்து விரிந்து நீண்டு கிடக்குமோ அதுபோல உனது ஆயுளும் நீண்டு பல காலம் வாழ்க என தனது உள்மன வெளிப்பாடாகத் தன் உணர்வை வாழ்த்தாக வெளிப்படுத்துகிறார் பரணர்.

## பெருமிதம்

அதியமானின் வெற்றியை ஐந்து பாடல்களில் ஔவையும் செங்குட்டுவனின் வெற்றியை மூன்று பாடல்களில் பரணரும் பாடி பெருமித உணர்வை வெளிக்காட்டுகின்றனர். இப்பாடல்களில் இவ்வுணர்வானது தனித்து வெளிப்படுகின்றது.

மன்னனின் வீரச்சிறப்பைக் கூறிப் போரை விலக்கும் குறிப்புப்பட அமைத்து அதியமானின் பெருமித உணர்வை (புறம்.90) வெளிப்படுத்துகிறார். இதனை ஔவை,

"எழுமரம் கடுக்கும் தாள் தோய் தடக்கை
வழு இல் வன் கை, மழவர் பெரும!
இருநிலம் மண் கொண்டு சிலைக்கும்
பொருநரும் உளரோ நீ களம் புகினே?"[39]

என இவ்வடிகள் சுட்டுகின்றன.

கணைய மரத்தை ஒத்த முழங்காலில் பொருந்தும் பெரிய கைகளையும் குற்றமற்ற வலிமையையுடைய கைகளையும் உடைய மழவர் பெருமகனே! உன் பெரிய நிலத்தின் கண் நின் மண்ணைக் கைக்கொண்டு ஆரவாரம் செய்யும் வீரர் நீ களம் புகுந்து போரிடும் காலத்திலும் உள்ளனரா என்றால் யாவரும் இல்லை என்கிறார். அதியமானுக்கே ஊக்கம் ஓங்கி நிற்க உரைப்பார் போலப் பாடுகின்றார் ஔவை. இதன் மூலம் அதியமானின் வெற்றிச் சிறப்பைப் பெருமித உணர்வுடன் வெளிப்படுத்தியிருப்பது தின்னிதின் புலப்படும்.

அதியமானின் மகன் எழினிக்கு இரண்டு பகை நேர்ந்தது. ஒன்று பெண்டிரின் ஊடல் மற்றொன்று ஊர்களில் தங்கும் மக்களின் வெறுப்பு என்பதைச் சுட்ட அவனது செயலைப் (புறம்.96) பெருமித உணர்வுடன் உரைக்கின்றார். இதனை,

"............................ ஒன்றே
பூப்போல் உண்கண் பசந்து தோள் நுணுகி
நோக்கிய மகளிர்ப் பிணித்தன்று ஒன்றே

விழவின்று ஆயினும் படு பதம் பிழையாது
மை ஊன் மொசித்த ஒக்கலொடு துறை நீர்க்
கைமான் கொள்ளுமோ என
உறையுள் முனியும் அவன் செல்லும் ஊரே"[40]

என்றுரைக்கின்றார்.

தும்பை மாலை அணிந்த மார்பினையும் திரண்டு நெடிய பெரிய கையினையும் உடைய அதியமானின் மகனுக்கு இரண்டு பகை நேர்ந்தது. ஒன்று போர் எதிர்ந்து செல்கையில் அவனைப் பிரியும் மகளிர் அவனுடன் ஊடினர் இதுமுதல் பகை. பகைவர் தம் ஊர்களில் தங்குவதை மக்கள் வெறுத்தனர். இது அம் மக்கள் செய்த பகை ஒன்று என்றதனால் எழினியின் அகச்சிறப்பையும் புறச்சிறப்பையும் புகழ்கின்றார். ஊரில் விழாவிற்குக் கூடிய மக்களைப் போலவே பெருந்திரளாகப் படைவீரர்கள் வருவர். விழா இல்லையாயினும் படையின் ஆரவாரம் விழாவை ஒக்கும். இனி இவ்வூர்கள் தங்கி இருக்கும் நாட்டுக்குரியன ஆகாது பாழும் காடாகும் என மக்கள் வெறுத்து அகன்றனர்.

இங்கு எழினியின் படைகளும் படையின்கண் உள்ள யானைகளும் செய்யும் செயல்களால் நாடு பாழ்ஆன காடாக மாறும் என அவனது செயலைப் பெருமிதத்துடன் உணர்த்துகின்றார் ஔவை.

தொன்மையான குடிச்சிறப்பையுடைய அதியமானின் வீரத்தைப் (புறம்:99) பெருமித உணர்வாக மற்றொரு பாடலில் வெளிப்படுத்துகிறார். இதனை,

"இமிழ் குரல் முரசின் எழுவரொடு முரணிச்
சென்று அமர் கடந்து நின் ஆற்றல் தோன்றிய

அன்றும் பாடுநர்க்கு அரியை; இன்றும்
பரணன் பாடினன் மற்கொல் - மற்று நீ
முரண் மிகு கோவலூர் நூறி நின்
அரண் அடு திகிரி ஏந்திய தோளே!"[41]

எனச் சுட்டுகிறார்.

போரை விரும்பி முழங்கும் ஒலியமைந்த முரசினையுடைய எழுவர் அவருடன் மாறுபட்டுப் போர் மேற்சென்று வென்று நின் வலிமையை உணர்த்தினாய். அன்றைய நாளிலும் நின் வலிமையைப் பாடுவதற்கு அரியவனாக இருந்தாய், நீ மாறுபாடு மிகுந்த கோவிலூரைத் தாக்கும் நின் தோள்கள் இன்றும் பரணன் மட்டுமே பாடினான். அங்ஙனம் பாட நீ அரியவனாய் விளங்குகின்றாய் என் அதியமானின் தொன்மையான குடிச்சிறப்பில் தோன்றிய அதியமானின் வீரத்தைப் பாடுதல் என்பது அரிது. பரணன் ஒருவனாலேயே பாட இயன்றது என கூறியதால் அவனுடைய வீரம் முழுமையும் அடக்கிக்கூறுதல் எளிதன்று. பாடவல்ல புலவராகிய பரணர் போன்றவற்றால் அன்றிப் பிறரால் பாடுதல் என்பது இயலாது என்றும் குறிப்பிடுகின்றார்.

போரில் வெற்றி பெறும் மன்னன் புகழைத் தாம் பாடுவதோடுப் புகழ் மிக்க மற்ற புலவரும் பாடவேண்டுமென விழைவார் ஔவையார். திருமுடிக்காரியைத் திருக்கோவிலூரில் வென்ற அதியமான் புகழைப் பரணரும் பாடியதாகப் பெருமையாகக் குறிப்பிடுகிறார்.

இங்கு அதியனின் வீரத்தைப் பரணர் ஒருவர் மட்டுமே பாடமுடியும் என்பதில் பரணர் சிறப்பையும் உணர்த்துகின்றார். இதில் ஔவையின் கூற்றில் பெருமித உணர்வு தோன்றுகிறது.

அதியமான் தன் மகன் எழினியைக் கண்டபோதும் போர்க்குரிய சினம் மறையவில்லை என்று அவனது வீரத்தைப் (புறம்.100) பெருமித உணர்வோடு குறிப்பிடுகின்றார். இதனை,

"வரி வயம் பொருத வயக் களிறு போல
இன்னும் மாறாது சினனே; அன்னோ!
உய்ந்தனர் அல்லர் இவன் உடற்றியோரே;
செறுவர் நோக்கிய கண், தன்
சிறுவனை நோக்கியும் சிவப்பு ஆனாவே"[42]

என்ற அடிகள் சுட்டுகின்றன.

வீரக்கழல் அணிந்தவனும் கழுத்தில் ஆறாத புண்ணை உடையவனும் பனம்பூவைச் சூடியவனுமாகிய அதியன் புலியுடன் பொருத வலிய யானையைப் போல இன்னமும் சினம் நீங்காமல் உள்ளான். பகைவரை வெகுண்டு நோக்கிய அதியமானுடைய கண் தன் புதல்வனைக் கண்டபோதும் செம்மை நிறத்திலிருந்து மாறாமல் இருக்கின்றன. ஆதலால் இவனைச் சினம் கொள்ளச் செய்தவர் பிழைப்பது அரிது என்றுரைக்கின்றார்.

விழுப்புண் வீரர்க்கு அடையாளம். விழுப்புண் படாத நாளைக் குற்றமுடையது என்றுரைக்கிறது திருக்குறள் (776). மகன் பிறந்தவுடன் தந்தை முதலில் காண்பது மரபு என்பதால் போர்க்களத்திலிருந்து நேரடியாக வந்தான் என்பது புலப்படுகிறது.

இங்குத் தன் மகவினைக் கண்டும் செம்மை படர்ந்த கண்ணுடன் வியர்த்த மேனியுடனும் மாறாது நின்றான் என்பதால் பகைவர் உறுதியாக அழிந்தனர் என்று அதியனின் போர் வலிமையைச் சுட்டி அங்கு அவனது பெருமித உணர்வைச் சுட்டுகிறார் ஔவை.

பலரால் காரியம் செய்யப்பட்ட தாரணிந்த அகன்ற மார்பினைப்பெற்ற தலைமையுடையோனுக்குத் துணையாக நிற்போர் ஒருவருமில்லை என இறந்துகிடக்கும் வீரனின் வீரத்தைக் (புறம்.311) குறிக்கிறார் ஔவை. இதனை,

"களர்ப்படு கூவல் தோண்டி நாளும்
புலைத்தி கழீஇய தூவெள் அறுவை
தாதுஎரு மறுகின் மாசுண இருந்து
பலர்குறை செய்த மலர்தார் அண்ணற்கு
ஒருவரும் இல்லை மாதோ"[43]

என்றுரைக்கிறார்.

ஒரு வீரன் போர்க்களத்தில் வீழ்ந்துகிடக்க அவனது முகத்தைத் 'தோற்படை' மூடிக்கிடந்தது. அக்காட்சி அவன் கண்களிலிருந்து வெளிப்படும் சினத்தீயைப் பகைவர் தாங்குதற்கு அருமை கருதி மூடியதாகத் தோற்றமளிக்கிறது. அவன் முகம் வீரம் அமைந்து காணப்படுவதால் சால்புடையோன் எனக் குறிக்கின்றார். அவன் உடலுக்குப் புலத்தியால் வெளுக்கப்பட்ட தூய வெள்ளாடை கொண்டு போர்த்திப் பலரும் காரியம் செய்யப்பட்டு இறந்துகிடக்கும் அவனுக்குத் துணையாக யாரும் இல்லை என்றுரைக்கின்றார்.

இங்குத் தலைவன் ஒருவனுடைய ஆற்றலை, போர் வலிமையை ஒரு தோல்படையால் முகத்தை மறைத்துக்கொண்ட போர் அமைதியை உடையவன் எனச் சுட்டி அவனது பெருமிதத்தை ஆசிரியர் உணர்வாக வெளிப்படுத்துகின்றார்.

சேரன் செங்குட்டுவனின் வெற்றிச்சிறப்பை பதிற்றுப்பத்தில் மூன்று (41, 45, 50) பாடல்களில் பரணர் பாராட்டி பெருமித உணர்வை வெளிப்படுத்துகிறார்.

செங்குட்டுவனின் வெற்றிச் சிறப்பைப் (பதிற்.41) பரணர் சுட்டும் நிலையில் பெருமித உணர்வு வெளிப்படுகிறது. இதனை,

"தாவல் உய்யுமோ மற்றே - தாவாது
வஞ்சினம் முடித்த ஒன்றுமொழி மறவர்
முரசுடைப் பெருஞ் சமத்து அரசு படக் கடந்து
வெவ்வர் ஓச்சம் பெருக தெவ்வர்
மிளகு எறி உலக்கையின் இருந்தலை இடித்து
வைகு ஆர்ப்பு எழுந்த மை படு பரப்பின்
எடுத்தேறு ஏய கடிப்புடை வியன்கண்
வலம் படு சீர்த்தி ஒருங்குடன் இயைந்து
கால் உளைக் கடும் பிசிர் உடைய வால் உளைக்
கடும் பரிப் புரவி ஊர்ந்த நின்,
படும் திரைப் பனிக்கடல் உழந்த தாளே"[44]

என இவ்வடிகள் சுட்டுகிறது.

வருத்தமின்றித் தாம் கூறிய சபதங்களை நிறைவேற்றிய தன் தலைவர் கூறுவதையே தாமும் கூறும் ஒன்றாகிய மொழிகளையுடைய வீரர்; முரசையுடைய பெரிய போரின்கண் அரசர்கள் இறக்கும்படி வெல்ல வேண்டியும் வெம்மையின் மிகுதி பெருகவும் போரிட்டனர். பகைவரது கரிய தலையை உலக்கையால் மிளகைப்போல இடையறாமல் இடித்தலால் ஆரவாரம் எழுந்தது. கடுமையுண்டாகின்ற கடற்பரப்பில் செங்குட்டுவன்

குதிரையைச் செலுத்தும் வேகத்தால் எழும் காற்றில் கடல் அலை வருந்திச் சிறு சிறு திவலைகளாக உடைகின்றன. செங்கட்டுவன் கடல் நடுவேயுள்ள தீவொன்றில் வாழ்ந்துவந்த கொள்ளைக் கூட்டத்தினரை ஆங்குச் சென்று அழித்தான் என்ற வரலாற்றையும் குறிப்பிடுகின்றார்.

ஒடிக்கப்பட்ட வேங்கைக் கிளையினை எடுத்துச் சென்ற யானைக்குத் தண்டேந்திப் போர்க்குச் செல்லும் வீரர்களும், அவ்யானை பிளிறும் ஒலிக்கு வீரர்களின் பேராரவாரமும் உவமையாகக் கூறி செங்குட்டுவனின் வெற்றிச் சிறப்பைப் பெருமித உணர்வுடன் உணர்த்துகின்றார் பரணர்.

கடல்பிறக் கோட்டிய செங்கட்டுவனின் வெற்றிச் சிறப்பைக் (பதிற்.45) குறிப்பிடும் போது பெருமித உணர்வு வெளிப்படுகிறது. இதனை,

"பொலம் பூந் தும்பை பொறி கிளர் தூணி
புற்று அடங்கு அரவின் ஒடுங்கிய அம்பின்
ஒசிவுடை வில்லின் ஒசியா நெஞ்சின்
களிறு எறிந்து முரிந்த கதுவாய் எஃகின்
விழுமியோர் துவன்றிய அகன் கண் நாட்பின்
எழு முடி மார்பின் எய்திய சேரல்!"[45]

என்றுரைக்கிறார்.

பொன்னாற் செய்யப்பட்ட அழகிய தும்பைப் பூவினையும், பலவகைச் சித்திரத் தொழில் அமைந்து விளங்குகின்ற துணியில் புற்றிலே அடங்கிய பாம்பைப் போல ஒடுங்கிய அம்புகளையும், வளைதலையுடைய வில்லினையும், ஒடுங்காத மனவெழுச்சியும் கொண்டவன். ஆண் யானைகளைக் குத்தி வளைந்த வடுக்களைப் பெற்ற வேலினையுமுடைய போர் வீரர்கள் நெருங்கியுள்ள; பரந்த இடத்தையுடைய போர்க்களத்தினையும்

ஏழு அரசர்களின் முடிப் பொன்னால் செய்யப்பட்ட மாலையை அணிந்த மார்பினையுமுடைய செங்குட்டுவன் எனப் புகழ்கின்றார்.

அரசனுக்குச் சோறு வேறு, வீரனுக்குச் சோறு வேறு என இல்லாது அனைவருக்கும் ஒரே உணவையும், ஊனையும், துவையலையும் அளித்த செய்தியையும் குறிப்பிடும் போது பெருமித உணர்வு தோன்றுகிறது.

செங்குட்டுவனுக்குக் காமவேட்கையைவிட போர் வேட்கையே அதிகம் என்பதை (பதிற்.50) இப்பாடல்வழி புலப்படுத்துகிறார். இதனை பரணர்,

"................................... பல் நாள்
பகை வெம்மையின் பாசறை மரீஇ
பாடு அரிது இயைந்த சிறு துயில் இயலாது
கோடு முழங்கு இமிழ் இசை எடுப்பும்
பீடு கெழு செல்வம் மரீஇய கண்ணே?"[46]

என்ற அடிகளில் விளக்குகிறார்.

பகைவரது கொடுமையினால் பல நாள் பாசறையிலே தங்கிப் பழகுதலால் தூங்குதல் அரிதாகப் பொருந்தும் சிறு துயிலும் இல்லாமல் ஆயிற்று. சங்கொலியும் பிற வாத்தியங்களின் ஓசையும் அவனை எழுப்பிவிடும். இத்தகைய பெருமை பொருந்திய படைகளாகிய போர்ச் செல்வத்தில் பழகிய உன் கண்கள் என்று செங்குட்டுவனைப் புகழ்கிறார். மேலும்,

"கொல்களிற்று உரவுத் திரை பிறழ அவ்வில் பிசிர
புரை தோல் வரைப்பின் எஃகு மீன் அவிர்வர

விரவுப் பணை முழங்கு ஒலி வெரீஇய வேந்தர்க்கு

அரணம் ஆகிய வெருவெரு புனல் தார்"[47]

என்ற அடிகளில் செங்குட்டுவனின் தூசிப்படையைப் புனலாக உருவகம் செய்கின்றார். குட்டுவனின் தூசிப் படை கடல் போன்றதாகலின் அப்படையிலுள்ள களிறு, வில், வேல், முரசத்தின் ஒலி ஆகிய நான்கினையும் முறையே கடலின் திசையாகவும், பிசிராகவும், மீனாகவும், முழங்கொலியாகவும் உருவகஞ்செய்து தனது பெருமித உணர்வை வெளிப்படுத்துகின்றார் பரணர்.

## வருத்தம்

பகைவர் நாடு போரால் அழிவுறும் எனவும், மன்னனின் மறைவு நிலையிலும், மகட்கொடை மறுத்ததால் ஏற்படும் போரால் அழிவு உண்டு என கூறும் நிலையிலும் வருத்தம் என்ற உணர்வு புறப்பாடல்களில் வெளிப்படுகின்றது. ஔவையார் நான்கு, பரணர் ஆறு பாடல்கள் என மொத்தம் பத்துப் பாடல்களில் இவ்வுணர்வு தோன்றுகிறது.

அதியனின் போரால் ஏற்படப்போகும் பகைவர் நாட்டின் அழிவு நிலையைக் கூறும்பொழுது வருத்த உணர்வு (புறம்.98) தோன்றுகிறது. இதனை,

"நீயே ஐயவி புகைப்பவும் தாங்காது ஒய்யென

உறுமுறை மரபின் புறம் நின்று உய்க்கும்

கூற்றத்து அனையை ஆகலின் போற்றார்

இரங்க விளிவது கொல்லோ - வரம்பு அணைந்து

இறங்குகதிர் அலம்வரு கழனி

பெரும் புனற் படப்பை அவர் அகன் தலை நாடே!"[48]

என்ற அடிகள் புலப்படுத்துகிறது.

அதியனே நீயோ வெண் சிறுகடுகைப் புகைக்கச் செய்து காவலுறச் செய்தாலும் அமையாதவனாய் விரைவாகப் பொருந்தி புறத்தே நின்று உயிரைக் கொண்டு செல்லும் எமனை ஒத்து விளங்குகின்றாய். உன்னுடைய படையின் சிறப்பாலும் உன் வீரத்தாலும் வரப்பை நெருங்கி வளையும் நெற்கதிர்கள் சுழலும் வயல்களுடன் மிகுதியான நீர்ப் பரப்பையுடைய அப்பகைவர் தம் நாடுகள் அவர் இரங்கி வருந்துமளவு அழிவனவே. இது உறுதி என குறிப்பிடுகின்றார்.

இப்பாடலில் இடம்பெறும் 'கண்டவர்' என்ற சொல்லாட்சி வீரத்தையும் அது தரும் அச்சத்தையும் காட்சி மாற்றங்களாகக் கண்முன் நிறுத்துகிறார்.

இங்கு அதியன் போர் தொடுத்தால் நீண்டு வளரும் நெற்பயிர்கள் நிறைந்த பகைவர் தம் வயல்கள் அழியும் என போருக்குப் பின் பகைவர் நாடு பெறப்போகும் நிலையினை ஔவை வருத்தத்துடன் புலப்படுத்துகிறார். இவர் மனதிலிருந்து வருத்தம் மிக்கத் தோன்றுகிறது.

அதியமான் நெடுமான் அஞ்சி இறந்த நிலையில் ஔவை பாடும் பாடலில் வருத்த உணர்வு (புறம்.231) மேலிடுகின்றது. இதனை,

"எரி புனக் குறவன் குறையல் அன்ன
கரி புற விறகின் ஈம ஒள் அழல்
குறுகினும் குறுகுக; குறுகாது சென்று
விசும்புற நீளினும் நீள்க - பசுங்கதிர்த்
திங்கள் அன்ன வெண்குடை
ஒண் ஞாயிறு அன்னோன் புகழ் மாயலவே"[49]

என்ற பாடல் சுட்டி நிற்கிறது.

வெட்டி எரிக்கப்பட்ட கொல்லை நிலத்தில் குறவனால் துண்டுகள் ஆக்கப்பட்ட மரங்கள் போன்று கரிய புறத்தையுடைய விறகுகள் அதியமானின் உடல்மீது அடுக்கப் பட்டிருந்தன. இதனைப் பார்த்த ஔவை இனி அந்த ஈமத்தீயானது அவன் உடலைச் சுடாமல் அணைந்தாலும் அணையட்டும்; அல்லது வானத்தைத் தொடுமாறு அத்தீயானது மேல் எழுந்தாலும் எழட்டும். குளிர்ந்த கதிர்களுடைய நிலவையொத்த வெண்கொற்றக்குடையை உடையவனும் ஒளி பொருந்திய சூரியனை ஒத்தவனுமான அதியமானுடைய புகழ் என்றும் அழியாது எனப் புகழ்ந்துரைக்கின்றார்.

அதியன் இறந்த பின்பும் அவனது புகழ் மறையாது என்று கருதி அவன் பிரிவினை நினைத்து வருந்திக் கூறுகிறார். இங்கு ஔவையின் மனம் வருத்த உணர்வைத் தின்னிதின் புலப்படுத்துகிறது.

அதியமான் இறந்த பிறகு நடுகல் நட்டு வழிபடுகின்றனர். இப்போது அவன் இல்லாது நான் வாழும் நாட்களும் பயன் இல்லாதவையே என்று (புறம்.232) வருத்தமடைகின்றார். இதனை,

"இல்லாகியரோ காலை மாலை
அல்லாகியர், யான் வாழும் நாளே!
நடுகல் பீலி சூட்டி, நார் அரி
சிறு கலத்து உகுப்பவும் கொள்வன் கொல்லோ -
கோடு உயர் பிறங்கு மலை கெழீஇய
நாடு உடன் கொடுப்பவும் கொள்ளாதோனே?"[50]

என்ற அடிகளில் விளக்குகிறார்.

போரில் வீரமரணம் அடைவோருக்கு நடுகல் அமைப்பது அக்கால மரபு. பெருஞ்சேரல் இளம்பொறை இவனை வென்றதாகப் பதிற்றுப்பத்து எட்டாம் பத்தின் பதிகம் கூறுகிறது. அப்போரில் இவன் வீரமரணம் அடைந்ததால் நடுகல் எடுக்கப்பெற்றிருக்கலாம். வீரர் நினைவாக எடுக்கப்படும் நடுகல்லிற்கு மயிற்பீலி சூட்டுவதும் பலிப்பொருள் படைத்தலும் தமிழர் மரபு என்பதை இப்பாடல் உணர்த்துகிறது. இவன் பலிப்பொருள் பெறுவானோ என்றதனால் கொடையில் சிறந்தவனாகையால் அதியன் இப்படைப்பொருளைப் பெறமாட்டான் என்பதை ஔவை உணர்த்துகின்றார்.

இங்கு அதியமான் இறந்த பிறகு நடுகல் நட்டு வழிபடும் நிலையில் அவனின்றி வாழும் நாள் எனக்குப் பயன் அற்றது என்று கூறி அவன் பிரிவிற்கு வருந்துகிறாள் ஔவை. இவ்விடத்தில் நண்பன் அதியனின் பிரிவு இவளையும் வருத்துகிறது. இங்கு வருத்தம் என்ற உணர்வு மேலிடுகின்றது.

அதியமான் இறந்ததை ஆற்றாது இனிப் பாடுநருமில்லை, பாடுநர்க்கு கொடுப்பவரும் இல்லை என்று பாடி தனது வருத்தத்தைப் (புறம்.235) புலப்படுத்துகிறாள் ஔவை. சங்க இலக்கியத்தில் உள்ள பல இரங்கற் பாக்களைவிட கருத்தாழத்தில், உணர்ச்சிப் பெருக்கில் முதன்மை பெறுவது இப்பாடல். இதனை,

“சிறிய கட் பெறினே, எமக்கு ஈயும் மன்னே!
பெரிய கட் பெரினே,
யாம் பாட தான் மகிழ்ந்து உண்ணும் மன்னே!
சிறு சோற்றானும் நனிபல கலத்தன்; மன்னே!
பெருஞ் சேற்றானும் நனிபல கலத்தன்; மன்னே!

.............................................................

.............................................................

*இனி பாடுநரும் இல்லை; பாடுநர்க்கு ஒன்று ஈகுநரும் இல்லை;*

*பனித்துறைப் பகன்றை நறைக் கொள் மாமலர்*

*சூடாது வைகியாங்கு பிறர்க்கு ஒன்று*

*ஈயாது வீயும் உயிர் தவப் பலவே!"*[51]

என்ற பாடல் மூலம் தன் வருத்தத்தைச் சுட்டுகிறார்.

கள் குறைவாக கிடைத்தாலும் மிகுதியாக கிடைத்தாலும் நாங்கள் உண்ட பின் எஞ்சியதை மடடுமே உண்ணுவான். உணவு குறைவாக இருந்தாலும் அதிகமாக இருந்தாலும் களத்தில் அனைவரோடும் பகிர்ந்து உண்பான். எலும்புடன் உள்ள ஊன் பகுதியை எங்களுக்குத் தருவான். அம்புடன் வேல் தைத்து உருவும் போர்க்களத்தின் இடம் முழுவதும் தானே சென்று நிற்பான். மணம் வீசும் தன் கையால் என் தலையைத் தடவுவான். இவை எல்லாம் மறைந்தது. எனக்கு ஆதரவாக இருந்த தலைவன் இப்பொழுது எங்கு இருக்கின்றானோ என வருந்துகின்றார். இனிப் பாடுநரும் இல்லை, பாடுபவர்க்கு ஒன்றைத் தருபவரும் இல்லை. பகன்றையின் தேன் பொருந்திய பெரிய மலரைப் பிறர் சூடப்பெறாமல் வீணாகியதைப் போல பிறர்க்கு ஒரு பொருளைக் கொடுக்காமல் இறந்து போகின்ற உயிர்கள் இவ்வுலகத்தில் மிகப் பலவாகும் என மனம் வருந்தி புலம்புகிறார். இங்கு அதியனுக்குப் பிறகு புலவர்களுக்குக் குறிப்பாக என்னை ஆதரிப்பார் யாரும் இல்லை எனப் புலம்புகிறார். அவரின் உள்ள வருத்தம் அடிமனதிலிருந்து வெளிப்படுவதைக் காணமுடிகின்றது.

“வள்ளுயிர் மாக்கிளைக் கண்ணவிந்தாங்கு”[52] என்று அதியமான் துஞ்சியதால் பாணர்க்கு ஏற்பட்ட அவலத்தை மாமூலனாரும் அகநானூற்றில் குறிப்பிடுகின்றார்.

பரணர் புறநானூற்றில் பாடிய பதிமூன்று பாடல்களில் ஆறு (336, 341, 343, 348, 352, 354) பாடல்களில் மகட்கொடை மறுத்ததன் விளைவாக அந்நாட்டின் மீது பெண் கேட்ட மன்னர்கள் போர் தொடுக்க முனைகின்றனர் என்ற செய்தி இடம்பெற்றுள்ளது.

இம்மன்னர்கள் போர்தொடுத்தால் செழிப்பு நிறைந்த இந்த நாடு இனி எவ்வாறெல்லாம் அழியப்போகின்றது என வருந்துகிறார். நாட்டின் மீதும் அங்கு வசிக்கும் மக்கள் மீதும் பரணர் கொண்ட பற்றுதலால் தனது வருத்தத்தை, மன உணர்வை வெளிப்படுத்துகிறார். நாட்டில் போர் நிகழ்வதால் குணத்தில் சிறந்த ஆடவர்கள் உயிரிழக்கவும், நாடு அழிவதுடன் செல்வமானது குறைந்து பசி, பிணி தோன்றி உயிர்கள் துன்பமடையவும் நேரிடும். எனவே, போர் நிகழாதவாறு வெளிப்படையாகவும் குறிப்பாகவும் போருக்குரிய தலைவனுக்குத் தனது மன உணர்வுகளை வருத்தத்தின் மூலமாக அறிவுறுத்துகிறார்.

போர் உண்டாகக் காரணமாகிய மகட்கொடை வேண்டிய மன்னருக்கு மகளைக் கொடுக்க மறுத்தது போர் ஏற்படுவதற்குரிய வாயிலாக அமைந்துவிடுகிறது. மகட்கொடை கேட்ட மன்னன் சினம் கொண்டு போர் தொடுக்க முற்படுகின்றான். மகளைப் பெற்ற தாயும் போரைத் தடுக்க முயலவில்லை. இதனைக் கண்ட பரணர் மகளை வளர்த்து சிறந்தாள் என்று என்னாது, பகையை வளர்த்துப் பண்பிலாதவளானாள் என்று வருந்துகிறார். இதனை,

"தகைவளர்த் தெடுத்த நகையொடு

பகைவளர்த் திருந்தவிப் பண்பி றாயே"[53]

என்ற அடிகளில் சுட்டுகிறார்.

தலைவனான தந்தையிடம் வேந்தன் மிகவும் இரங்கி மகட்கொடை கேட்டும் மறுக்கவே இருவருக்கும் போர் ஏற்படுகிறது. வேந்தனின் மகளை மணம் செய்வதும் விழுப்புண்பட்டு விண்ணுலகு செல்வதும் என இவ்விரண்டில் ஒன்று நிகழ்தல் வேண்டும் என வஞ்சினம் கூறி வாளை எடுக்கிறான். இதனைக் கண்ட பரணர் நீராடும் களிறுகளால் சேராகும் குளிர்ந்த குளத்தைப் போன்று நன்செய் வயல்கள் நிறைந்த இவ்வூரானது தனது அழகை இழக்கும் என வருந்துகிறார். இதனை,

"பெருங்கலி னிழப்பது கொல்லோ

மென்புல வைப்பினித் தன்பணை யூரே"[54]

என்கிறார். அறிவு, ஆண்மைகளால் ஒத்தவராத உங்களை என் மகள் மணக்கமாட்டாள். ஆதலால் மகட்கொடை கேட்பதை மறுத்துவிடுக! என்று தலைவன் கூறக் கேட்ட வேந்தன் போர் தொடுக்க முற்படுகிறான். இவ்விருவரும் போர் செய்வார்களேயானால் நெடிய அழகைக் கொண்ட இவ்வூர் அடையப்போகும் துன்பத்தை எண்ணி வருந்துவதாக புறம்.343 ஆவது பாடல் அமைந்துள்ளது.

நெற்கதிர் முற்றிய வயலில் பல்வேறு புள்ளினங்கள் கூடுகட்டி வாழும், அவ்வுயிரினங்கள் நெல்லரியும்போது அவ்விடம் விட்டு நீங்க நெல் அறியும் நபர்கள் தொடக்கத்தில் தன்னுமை இசைப்பது மரபாகும். அவ்வாறு தன்னுமை இசைக்கும் செழிப்புமிக்க இவ்வூரில் மகட்கொடை மறுத்தலால் போர் ஏற்படும் சூழல் ஏற்படுகிறது. பொது இடத்தில் கட்டிய

களிறுகளைக் கண்ட பரணர் இம்மன்னரின் மகளால் ஊரில் போரும், அதனால் ஊருக்குக் கேடும் உண்டாகவிருக்கின்றது. இம்மகளை இவரது தாய் பெற்றெடுக்காமல் இருந்திருந்தால் நன்மை உண்டாகியிருக்கும். ஆனால் பெற்று வளர்த்துவிட்டதால் நன்மை ஏற்படுவது கழிந்தது என வருந்திக் கூறுகிறார். இதனை,

"வெண்ணெல் லரிஞர் தன்னுமை வெரீஇக்"[55]

என்றும்,

"செந்நுதல் யானை பிணிப்ப

வருத்தின மன்னெம் பெருந்துறை மரனே"[56]

என்ற அடிகளால் புலப்படுத்துகிறார்.

போர் தொடங்கும் முன்பு மண்ணுமங்கலம், வாண்மங்கலம் முதலியன செய்வது பண்டையோர் போர்த்துறை மரபு, மகள் மறுத்ததன் விளைவாக அந்நாட்டின் மீது போர் தொடுக்க முனைந்த வேந்தன் தானை மறவர்களுடன் மண்ணுமங்கலம் செய்ய முயன்றார். இதனை அறிந்த பரணர் மணத்திற்குரிய நீர்நிலையில் கயல்மீனை உண்ணும் நாரையால் துரத்தப்பட்ட வாளைமீனைப் புனலாடும் மகளிர் பிடித்துத் தன் இல்லத்துக்குக் கொண்டுசெல்லும் வளம் பொருந்திய இவ்வூருக்கு நன்மை செய்வதற்கு இல்லாமல் கேடு செய்வதற்கு ஏதுவாக அமைந்துள்ளது எனத் தனது உள்ள வருத்தத்தை வெளிப்படுத்துகிறார். இதனை,

"வயலமர் கழினி வாயிற் பொய்கைக்

கயலார் நாரை புகைத்த வாளை

புனலாடு மகளிர் வளமனை யொய்யும்

ஊர்கவி னிழப்பவும் வருவது கொல்லோ"[57]

எனும் பாடல் குறிப்பிடுகின்றது. இவரது பாடல்கள் போருக்குப் பின்

நாட்டின் நிலை எவ்வாறு திகழப்போகிறது என்பதனை நினைத்து வருந்துவதாகவே அமைந்துள்ளது.

இவ்வாறு பரணர் செல்வ வளமிக்க இந்த நாடு மகட்கொடை மறுத்ததன் விளைவாக இனி அழியப்போகிறது என்று நாட்டின் நிலையை எண்ணி வருந்துவதாக அவரின் உணர்வு வெளிப்படுவது குறிப்பிடத்தக்கது.

## ஏமாற்றம் + ஏக்கம்

ஔவை தனக்குத் தகுதியறிந்து பொருள் கொடுக்கவில்லை என்ற ஏக்கமும் குறித்த காலத்தில் கொடுக்காது காலம் தாழ்த்தினான் என்ற ஏமாற்ற உணர்வும் இருந்ததை இப்பாடல் (புறம்.206) வழி புலப்படுத்துகிறார். இப்பாடலில் இவ்விரு உணர்வுகளும் இணைந்து வெளிப்படுகிறது. இதனை,

"வாயிலோயே! வாயிலேயே!
வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தி, தாம்
உள்ளியது முடிக்கும் உரனுடை உள்ளத்து
வரிசைக்கு வருந்தும் இப் பரிசில் வாழ்க்கைப்
பரிசிலர்க்கு அடையா வாயிலோயே!
..................................................................
..................................................................
மரம் கொல் தச்சன் கைவல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத்து அற்றே -
எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே"[58]

என்று குறிப்பிடுகின்றார்.

வாயிலோனே நீ எப்போதும் பரிசிலர் பரிசிற்கு வருந்தும் வாழ்க்கையுடையவர் என்பதை அறிந்து, அவர்க்கு அவ்வாயிலை அடைப்பதில்லை. ஆனாலும் நீ என் மாட்டு வாயிலை அடைக்கின்றாய். இது உன் செயல் அன்று என்பதை நான் அறிவேன். உன் தலைவனான அதியமான் ஒன்று தகவுடைமையை அறியாதவனாக இருக்க வேண்டும். இல்லையேல் என் தரத்தை அறியாதவனாக இருக்க வேண்டும். அறிவும் புகழும் உடைய நல்லோர் இறந்ததனால் இவ்வளமிக்க உலகம் வறியதாய் விடவில்லை. நாங்கள் எத்திசை சென்றாலும் எங்களுக்குச் சோற்றுக்கு குறைகிடையாது. சோறு தான் நான் வேண்டுவது என எண்ணி எனக்கு விடைதர நீட்டிப்பது நன்றல்ல என்று ஔவை அதியனின் வாயிலோனை நோக்கி உரைக்கின்றார்.

விருதுகளுக்காகக் கவிஞர்களும், கலைஞர்களும் குழூச் சேர்ப்பதும், குழூச் சண்டை போடுவதும் நடந்து கொண்டிருக்கின்ற இன்றைய நிலையில் "என் தரம் அறியாதவன் கொல்லோ" என்பதில் ஔவையின் சுயமரியாதை முன்னிலைக்கு வருகின்றது.

"ஔவையின் தன்னிலையானது கவி - வாயிலோனிடம் உன் மன்னன் என் தரம் அறியவில்லை; அவன் தரமும் அறியவில்லை என்கிறார். அதாவது ஒரு மன்னன் கவியிடம் எப்படி நடக்க வேண்டும் என்ற மரபு அறியவில்லை என்று கூறி தாம் கவி, அதற்குரிய உரிமையை அவன் மீண்டும் அளிக்க வேண்டும் என்ற தன்னிலையின் ஆசையே பாடலில் குறியீடாக வெளிப்பட்டிருக்கிறது எனலாம்."[59]

"ஔவை ஒரு பெண். ஆணான அதியமான் தன்னை மதிக்க வில்லை என்பதால் அவள் கோபம் அடையவில்லை. அதாவது அந்தச் சூழலில்

அவள் நனவிலி தன்னைப் பெண்ணோடு அடையாளப்படுத்திக் கொள்ளவில்லை. மேலும் காசு, பொருள் வேண்டுபவராகவும் தன்னை அடையாளப்படுத்திக் கொள்ளவில்லை. மாறாக "கவி" என்பதையே அடையாளமாக அவரின் தன் முனைப்பு 'குறிக்கோள் (Ego Ideal) உருவாக்கம்' பெற்றிருக்கிறது. தன்னை அப்படியாக ஔவை பார்ப்பது மட்டுமல்ல; தான் பிறரால் அப்படித்தான் பார்க்கப்படவேண்டும் என்று அது நனவிலியாகவும் விரும்புகிறது."[60] அது பாடலில்,

"யாங்கள் வெறும் சோறு வேண்டியன்று
இப்பரிசில் வாழ்க்கை மேற்கொண்டது"

என்று வெளிப்படுகிறது. ஆக சோறு, பரிசு அல்ல கவி வேண்டுவது 'தன் தரம்,' 'என் தரம்' அதற்கிணங்கவே உறவு என்பதை நிலைநாட்டவே இப்பாடல் அதாவது சொல்ல விரும்பியது பாடலில் மறை பொருளாக இருக்கிறது. நான் கவி; நீ மன்னன்; அது தான் நம்மிடையே இருக்கவேண்டிய உறவு என்றுரைக்கிறார்.

தன்னை நடத்திய விதம், அதாவது சந்திக்க மறுத்தற்கான தாமதப்படுத்தியதற்கான தன்னைப் பற்றிய அதியமானின் பிம்பத்தை (Image) அழித்துவிடவும் முயற்சிக்கிறார்.

மன அலசல் ஆய்வு முறையில் அந்த தன்னிலையில் அந்த நேரத்தில் எழுந்த பாடலானது ஒரு காயத்தின் நினைவிலிருந்து விடுவித்துக்கொள்ளும் 'உணர்ச்சிப் பெருக்காகும்' (Abreaction).

"Abreaction என்பது உணர்ச்சிப் பூர்வமான வெளிப்பாடு. இச்செயல் மூலம் ஒரு தன்னிலை தன் மனக்காயத்திற்குக் காரணமான நிகழ்வு குறித்த நினைவின் பாதிப்பானது நோய்க்குறியாக மாறவோ, இருக்கவோ அல்லது

நீடிக்கவோ முடியாதவாறு தன்னைத்தானே விடுவித்துக் கொள்கிறது"[61] என லாப்லாஞ்ச் குறிப்பிடுவது இங்க நோக்கத்தக்கது.

மொழி செயலுக்கான பதிலியாக வினையாற்றுகிறது; பாதிப்பை முற்றிலுமாக (almost) ஆற்றலுடன் அதை மிகு உணர்ச்சியாக வெளிக்கொணர முடியும் மொழியின் உதவியால் என்று பிராய்டு குறிப்பிடுகின்றார்.

மேற்கூறிய அடிப்படையில் ஔவையைக் காண மறுத்து தள்ளிப்போட்ட நிகழ்ச்சியானது அவர் மனத்தைக் காயப்படுத்திவிட்டது. நனவிலி ரீதியிலான தூண்டப்பட்ட மிக உணர்வானது அதியமானுக்கான பதிலடியாக, குறியீடாக (Symbolic) பாடலாகி கொப்பளிக்கிறது.

"ஔவையின் நட்பைப் பேணிப் பாதுகாத்துப் போற்றி ஒழுகுவதற்கு முன்பு, அவர்பால் பாராமுகமாயிருந்த அதியமானைப் புலவருக்கே உரிய திமிர்ந்த ஞானச் செருக்குடன் வறுமையிற் செம்மைப் பொலியச் சாடிப் பாடிய பாடலில் ஔவையாரின் பண்பு நலம் மிளிர்கிறது"[62] என்று குறிப்பிடுகிறார் பெ.சு.மணி.

முதல் சந்திப்பில் அதியனுடன் மோதல் ஏற்பட்டு; பின்பு இணைபிரியாத உயிர் நண்பராக ஔவை மாறுகிறார். இங்கு ஏக்கம், ஏமாற்றம் என்ற இரு உணர்வுகள் ஔவையின் மனதிலிருந்து வெளிப்படுகின்றன.

## ஏக்கம்

அனைவரினும் மேலாக அரசனால் மதிக்கப்பட்ட தன் மகன், நன்றிக் கடனாக இன்னும் தன் உயிரைத் தருவதற்குரிய காலம்

*வரவில்லையே என்று மறக்குடி மகள் ஒருத்தி ஏங்குவதாக (புறம்.286) ஔவை பாடியுள்ளார். இதனை,*

*"வெள்ளை வெள் யாட்டுச் செச்சை போலத்*
*தன் ஓர் அன்ன இளையர் இருப்ப*
*பலர் மீது நீட்டிய மண்டை என் சிறுவனைக்*
*கால் கழி கட்டிலில் கிடப்பி*
*தூ வெள் அறுவை போர்ப்பித்திலதே"[63]*

*என்றுரைக்கிறார்.*

*செம்மறி ஆடு ஒன்று சென்ற வழியிலேயே பிற ஆடுகளும் செல்வது போல வேந்தன் சென்ற வழியிலேயே வீரர்களும் செல்லும் சிறப்பான பண்பு உடையவர் ஆதலால் அவருக்கு (வீரனுக்கு) செம்மறியாடு உவமை கூறப்பட்டுள்ளது. தன் மகன் பால் இருந்த தலைமைப் பண்பு காரணமாக அரசன் மற்றவரினும் உயர்வாக அவனை மதித்துக் கள் வழங்கினான். வேந்தன் பொருட்டுச் சாவை ஏற்றுக்கொள்வது சிறப்புக்குரியது என்பதால் தன்னைப் புரந்தவர்க்குத் தன் உயிரைக் கொடுக்க இன்னும் காலம் வரவில்லை என (ஒரு தாயின்) மறக்குடி மகள் ஒருத்தியின் ஏக்கத்தை ஔவை உணர்வாக வெளிப்படுத்துகின்றார்.*

**விருப்பம்**

*ஆடவரது ஒழுக்கமே உலக மேம்பாட்டிற்கு அடிப்படை என உலக இயற்கையாகத் தனது விருப்பத்தைக் கூறுகிறார் (புறம்.187) ஔவையார். இதனை,*

*"நாடா கொன்றோ காடாகொன்றோ;*
*அவலா கொன்றோ மிசையாகொன்றோ;*

எவ்வழி நல்லவர் ஆடவர்,

அவ்வழி நல்லை; வாழிய நிலனே!"[64]

எனச் சுட்டுகிறார்.

நற்பண்பும் நற்செயலும் உடைய ஆடவரே நாட்டின் நலத்துக்கும், புகழுக்கும், வளத்துக்கும் காரணமானவர்; தீய நிலன் ஆனாலும் நல்லவர் வாழ்ந்தால் நல்ல நிலம் எனவும் நல்ல நிலன் ஆனாலும் தீயோர் வாழ்ந்தால் தீய நிலம் என்றும் வழங்கப்படும். எனவே, தன்னிடத்து வாழ்வோர் இயல்பல்லது தனக்கென ஓர் இயல்பு உடைத்து இல்லை என்பதை "எவ்வழி நல்லவர் ஆடவர் அவ்வழி நல்லை வாழிய நிலனே" என்று நிலத்தை இழித்துக் கூறுவதுபோல உலகத்தியற்கையாகக் கூறுகின்றார்.

"காட்சிக்கு எளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்

மீக்கூறும் மன்னன் நிலம்"[65]

என்ற திருக்குறளும் ஔவையின் கருத்துக்கு அரண் செய்யும்.

ஔவை தன்னிலையில் மனிதனுக்கும் புவிக்கும் உள்ள உறவுப் பிணைப்பு (Binding) அடிப்படையிலானது என்பதை உணர்ந்திருக்கிறார் எனலாம். அதாவது எவ்விடத்தில் ஆடவர் நல்லவராக விளங்குகின்றனரோ அவ்விடத்தில் நீயும் நன்றாக விளங்குவாய் என்று சுட்டுவது குறிப்பிடத்தக்கது.

## தொகுப்புரை

- சங்க இலக்கியப் புறப்பாடல்களில் ஔவை பாடிய முப்பத்து மூன்று பாடல்களும் பரணர் பாடிய இருபத்து மூன்று பாடல்களும் என 56 பாடல்களில் பயின்றுவரும் உள்ள உணர்வுகள் சுட்டப்பட்டுள்ளன.

- புறப்பாடல்கள் புலவர்களின் உள்ள உணர்வை உள்ளது உள்ளபடி காட்டும் காலக் கண்ணாடியாக விளங்குகின்றன. புலவர் அகப்பாடல்களில் தனது உணர்வைக் கூற்றுக்களின் வாயிலாக உணர்த்தமுடியும். ஆனால் புறப்பாடல்கள் மனஉணர்வை நேரடியாக உள்ளது உள்ளபடி வெளிப்படுத்துகின்றன.

- கிடைத்தற்கரிய நெல்லிப்பழத்தைத் தான் உண்ணாமல் ஔவைக்கு ஈந்த அதியனின் செயலை நினைந்துப் புகழ்கின்றார். இங்கு அவனைத் தனது அன்பால் சிவபெருமானைப் போன்று நிலைபெற்று வாழ்வாய் என்றுரைக்கின்றார்.

- ஒருதந்தை தன் மழலை பேசும் குழந்தையிடம் எவ்வாறு அன்பு செலுத்துவானோ அது போல அதியன் என்னைப் போற்றி அருள் செய்கின்றான் என அதியமானைத் தந்தையாகவும் தன்னைக் குழந்தையாகவும் வைத்து மகிழ்கின்றார்.

- செங்குட்டுவனைப் பரணர் உனது செயலானது உனக்கென எதுவும் கொள்ளாது உன்னைச் சார்ந்தோரின் மனமானது மகிழும்படி உனது செயல்கள் அமைந்துள்ளன எனவும்,

- பகைவரது நாட்டை அழித்துச் செல்வங்களைக் கைப்பற்றி அதனை நம்மைப் போன்ற இரவலர்களுக்குக் குறையாது கொடுப்பவன் என்றும் மன்னனின் வெற்றியையும் அவன் புலவர்களுக்கு வழங்கிய கொடைகளையும் பரணர் மூன்று பாடல்களிலும் மகிழ்ச்சி என்ற மனஉணர்வு வெளிப்படுகின்றது.

♦ நிரம்புவதையும் குறைவதையும் கண்டிராத பானைகளில் இருக்கும் கள்ளை வரியவர் மிகுதியாக உண்ண உண்ண குறையாத கள்ளை நீண்ட கையை உடையவன் என்று அவனது செயலால் மகிழ்ந்து புகழ்கிறார் பரணர்.

♦ பகை நாட்டு மன்னர்களின் தவறான நிலையைச் சுட்டிக்காட்டி அதனால் ஏற்படும் அழிவைக் கூறி அவர்களுக்கு அறிவுரை கூறுவதாக ஆறு பாடல்களில் அறிவுரை எனும் மனஉணர்வை ஔவை வெளிக்காட்டுகிறார்.

♦ ஒரு நாளில் எட்டுத்தேர் செய்யும் தச்சன் ஒரு மாதம் முயன்று செய்த தேர்க்கால் போல எம்மிடத்தும் வீரன் உள்ளான், அவனுடன் போரிடுவீர்களாயின் நீங்கள் அழிவது உறுதி எனச் சுட்டுகின்றார்.

♦ அதியமானைக் காணும் முன்பே அவனுடன் பல படைகளைக் கொண்டு போரிடுவோம் என்று கூறுவதைத் தவிருங்கள். ஏனென்றால் அவனைக் கண்டால் இவ்வாறு கூறமாட்டீர்கள் என அதியனின் வீரத்தை உணர்த்தி பகைவர்க்கு அறிவுறுத்துகிறார்.

♦ அடிக்கும் குச்சிக்கு அஞ்சாது சீறும் பாம்பினைப் போன்று இளமையான வலிய வீரர் எம் நாட்டில் உள்ளனர் என்று குறிப்பிடுகின்றார். மேலும் அதியமானுடன் போரிடுவீர்களானால் உங்களுடைய உரிமை மகளிரைப் பிரிந்து உறைவீர் என எச்சரிக்கை செய்கிறார்.

♦ அதியனுடன் போரிட்டால் நீங்கள் தோற்று ஓடுவது உண்மை. எனவே உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள் என்றும் மூவேந்தர்கள் ஒருங்கே அமர்ந்திருப்பதைக் கண்ட ஔவை அந்தணர்கள் வளர்க்கும் முத்தீக்கு

ஒப்பிட்டு அவர்களுக்கு அறிவுரை பகர்கின்றார். இப்பாடல்களில் பகைநாட்டு மன்னர்களுக்கும் மூவேந்தர்களுக்கும் அவர்களை நெறிப்படுத்தும் முகமாகத் தனது மன உணர்வை அறிவுரையாக வெளிப்படுத்துகின்றார்.

- அதியமான் நெடுமான் அஞ்சியின் வீரத்தைப் புகழ்ந்தும் அவர்களுக்கு அவன் அளித்த கொடையை நினைத்தும் பதிமூன்று பாடல்களில் புகழ்கின்றார். பரணர் செங்குட்டுவனின் கொடையையும் அவனது செயல்களையும் நான்கு பாடல்களில் புகழ்ந்து தன் மன உணர்வை வெளிப்படுத்துவது நோக்கத்தக்கது.

- அதியமான் எங்களுக்கு எளியவனாகவும் பகைவர்களுக்குத் துன்பம் தருபவனாகவும் விளங்குகின்றான் எனவும், தொண்டைமானிடம் தூது சென்று அவனது போர் வலிமையைப் புகழ்வது போல இகழ்ந்தும் அதியனைப் புகழ்ந்துரைக்கின்றார். எத்தனை நாள் சென்றாலும் முதல் நாள் போலவே பரிசில் வழங்குபவன் எனவும் விறலியை அதியனிடம் ஆற்றுப்படுத்தும் போதும், நாஞ்சில் மன்னனை இகழ்வதுபோல அவனது கொடையைப் புகழும் நிலையிலும், அதியனுக்குத் துணையாக இருக்கும் வாளைப் புகழ்ந்துரைத்தபோதும், போரில் பின்னிட்டு ஓடாத உறுதிமிக்க வீரன் ஒருவனின் உடல் கண்டு அவனை ஈன்ற தாய் அடைந்த பேற்றினை விளக்கும் நிலையிலும் ஔவை புகழ்வது ெளிப்படுகின்றது. இங்குப் புகழ்ச்சி என்பது வெறும் உதட்டளவில் நின்றுவிடாமல் உள்மன நிலையில் இருந்து வெளிப்படுகிறது.

♦ சேரன் செங்குட்டுவன் விறலியர் மனம் மகிழும்படி அணிகலன் முதலியவற்றை அளித்துப் பாதுகாத்தும், பகைவரை வெற்றி கொள்ளும் போதெல்லாம் பொருளை அள்ளிக் கொடுத்தவன், ஆற்றுப் படுகையில் பரந்துகிடக்கும் மணலைப் போல நீ நெடிய காலம் வாழவேண்டும் என்று பரணர் சேரனின் கொடைத்தன்மையையும் வாழ்த்தையும் புகழ்ந்து மகிழ்கின்றார்.

♦ பெருமித உணர்வு மொத்தம் எட்டுப் பாடல்களில் வெளிப்படுகின்றது. அதியனே உன் பெரிய நிலத்தின் கண் நின் மண்ணைக் கைக்கொண்டு ஆரவாரம் செய்யும் வீரர் நீ களம் புகுந்து போரிடும் காலத்திலும் உள்ளனரா எனக் கூறி போரை விலக்கும் நிலையிலும் எழினிக்கு உண்டான பெண்டிர், ஊர் மக்கள் பகை உண்டானதைச் சுட்டிய பொழுதும், தொன்மையான குடிச்சிறப்பையுடைய அதியமானின் வீரத்தைப் போற்றும்போதும், தன் மகனைக் காணவந்தபோது சினம் குறையாத தன்மையிலும், விழுப்புண் வீரர்களுக்கு அடையாளம் விழுப்புண் படாத நாளைக் குற்றமுடையது என உரைக்கும் போதும் அதியன் இறந்த நிலையில் ஔவை அதனைத் தாங்காத போதும் ஔவையின் கூற்றில் பெருமித உணர்வு வெளிப்படுகின்றது.

♦ செங்குட்டுவனின் வெற்றிச் சிறப்பை மிகுத்துக் கூறும் பொழுது பரணர் பெருமித உணர்வை வெளிப்படுத்துகிறார்.

♦ அதியனுடன் போர் தொடுத்தால் உங்கள் நாடு இனி அழிவுறும் என்றும் மன்னனின் மறைவு நிலையிலும் மகட்கொடை மறுத்தல் நிலையிலும் அதியன் மறைந்து நடுகல் வழிபாடு நிகழும் பொழுதும் ஔவைக்கும் பரணருக்கும் வருத்தம் என்ற உணர்வு மேலிடுகின்றது.

- குளிர்ந்த குளத்தில் நீராடும் யானையால் குளம் எவ்வாறு சேறாகுமோ அவ்வாறு போருக்குப் பின் இவ்வூரானது தன் நிலைகெட்டு அழியும் என்கிறார். இங்கு உவமை பயின்று வருகின்றது.

- நாரையால் துரத்தப்பட்ட வாளைமீனைப் புனலாடும் மகளிர் பிடித்து இல்லத்துக்குக் கொண்டுவரும் வளம் பொருந்திய இவ்வூர் மகட்கொடையின் காரணமாக ஏற்படப்போகும் இப்போரால் தன் அழகினை இழக்கும் என்று குறிப்பிடுகிறார்.

- போருக்குக் காரணமான மகளைப் பெற்றெடுக்காமல் இருந்திருக்கலாம் என்று அவளது தாயைச் சாடுகிறார். இவளது பிறப்பு இவ்வூருக்குக் கேடு உண்டாகத்தான் இருந்திருக்கிறது என்கிறார்.

- வயலில் நெல்லரியும் போது அதில் வாழும் புள்ளினங்கள் அவ்விடம் விட்டு நீங்க நெல் அரிபவர்கள் தன்னுமை இசைப்பதை அறியமுடிகிறது. போர் தொடங்கும் முன்பு மண்ணுமங்கலம், வாண்மங்கலம் முதலியன செய்வது பண்டையோர் போர்த்துறை மரபு என்ற தமிழரின் பண்பாட்டைப் பரணர் பதிவுசெய்துள்ளார்.

- பரணர் நாட்டின் நிலைகருதியே பொதுமைச் சார்புடையதாக தனது உள்ள உணர்வை மகட்கொடை மறுத்தலின் மூலமாக வெளிப்படுத்துவது குறிப்பிடத்தக்கது. தாய், மகள், மன்னன் ஆகியோரின் உள்ள உணர்வுகளும் குறிப்பாக இடம்பெற்றிருப்பதையும் அறியமுடிகின்றது.

- திருமுடிக்காரியை திருக்கோவிலூரில் அதியமான் வெல்லுதல், பெருஞ்சேரல் இரும்பொறை அதியமானை வெல்லுதல், போர்ப்படைகளில் ஒன்றாக தூசிப்படை, அணிப்படை கொண்டிருத்தல், போர்

தொடங்குவதற்கு முன் மண்ணுமங்கலம், வான்மங்கலம் இசைத்தல், தீவில் இருந்த கொள்ளைக் கூட்டத்தைச் செங்குட்டுவன் அழித்தல் என போர் பற்றிய வரலாற்றுச் செய்திகள் இடம்பெற்றுள்ளன.

♦ ஆடுகின்ற சிறகையுடைய கின்னரப் பறவை, முதலை, யானை, செம்மறியாடு, கழுதை ஏர்பூட்டி கொள்ளும் வரகும் விதைத்தல், இடுகாட்டில் வாழும் பெண் கோட்டான் ஆகிய உயிரினங்கள் குறிக்கப்பெற்றுள்ளன.

♦ கள், நெல்மணி, உணவு, ஊண், துவையல், கள்ளொடு தரும் ஊண் துவையல் ஆகிய அக்கால உணவுப்பொருட்கள் சுட்டப்பட்டுள்ளன.

♦ கோக்கலி, பன்னாடை, ஓலையால் மழையை மறைப்பதற்குச் செய்யப்பட்ட குடை, வெள்ளியால் ஆன பாத்திரம், நூலாடை, அதியமான் பனம்பூ சூடுதல், உலக்கையால் மிளகு இடித்தல்,புலத்தியால் வெளுக்கப்பட்ட தூய வெள்ளாடை கொண்டு இறந்தவரைப் போர்த்துதல், வென்சிறுகடுகு புகைத்தல் போன்ற மனிதனோடு தொடர்புடைய பழக்கவழக்கங்களும், பொருட்களும் பதிவுசெய்யப் பட்டுள்ளன.

♦ தச்சன், முழவு, முத்தீ வளர்த்தல், வாளால் பிளந்து உடலைப் புதைத்தல், பெண்டிர் தூது செல்லுதல், வண்டியின் சேம அச்சு, முழுநிலவு, வாள், பாண்சாதி மகளிரின் பேரியாழ், கவிழ்த்த தாழி, வன்னிமரம் நிறைந்த சுடுகாடு, காஞ்சி ஆறு, வேற்றுப்புலவரை தனது பாடலில் குறித்தல் என பொதுவான வாழ்வியல் செய்திகளும் இடம்பெற்றுள்ளன.

- வயல்களில் கூடுகட்டி வாழும் உயிரினங்கள் நீங்குவதற்குத் தண்ணுமை இசைத்தல், நடுகல்லிற்குப் பீலி சூட்டிப் பலிப்பொருள் படைத்தல் போன்ற பண்டைய தமிழர் மரபு சுட்டப்பட்டுள்ளது. வரலாற்றுச் செய்திகளை அகப்பாடல்களில் ஔவையைவிட பரணரே அதிகம் பதிவுசெய்துள்ளார்.

## சான்றெண் விளக்கம்

1. புறம்.91:5-11
2. பெ.சு.மணி, சங்க கால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும், ப.243
3. ஐ.க.பாண்டியன், ஔவையின் உளவியல் & ப்ராய்டு - லெக்கானின் மன அலசல், ப.176
4. மேலது, ப.177
5. புறம்.92:1-4
6. திருக்குறள்.6
7. இனியவை நாற்பது, பா.15:2
8. டாக்டர் மு.வரதராசன், மொழி வரலாறு, ப.202
9. பதிற்.42:10-15
10. மேலது, 49:1-3
11. மேலது, 43:18-28
12. மேலது, 43:33-36
13. புறம்.87
14. ஐ.க.பாண்டியன், ஔவையின் உளவியல் & ப்ராய்டு - லெக்கானின் மன அலசல், பக்.170-171
15. புறம்.88
16. புறம்.89:5-9
17. புறம்.97:18-25
18. மேலது, 104:2-6
19. மேலது, 367:10-15
20. ஐ.க.பாண்டியன், ஔவையின் உளவியல் & ப்ராய்டு - லெக்கானின் மன அலசல், ப.189

21. புறம்.93:3-11

22. மேலது, 94

23. புறம்.95:1-5

24. ரா.இராகவையங்கார், நல்லிசைப் புலவர் மெல்லியலார், ப.38

25. புறம்.101:1-8

26. மேலது, 102:5-8

27. மேலது, 103:9-12

28. மேலது, 140:1-9

29. மேலது, 269:9-12

30. மேலது, 290:3-8

31. மேலது, 295:4-8

32. மேலது, 315:4-7

33. மேலது, 390:13-23

34. மேலது, 392:13-21

35. பதிற்.46:1-7

36. மேலது, 47:1-2

37. மேலது, 44:18-23

38. மேலது, 48:13-18

39. புறம்.90:10-13

40. மேலது, 96:4-9

41. மேலது, 99:9-14

42. மேலது, 100:7-11

43. மேலது, 311:1-5

44. பதிற்.41:17-27

45. மேலது, 45:1-6

46. மேலது, 50:22-26

47. மேலது, 50:8-11

48. புறம்.98:15-20

49. மேலது, 231

50. மேலது, 232

51. மேலது, 235

52. அகம்.325

53. புறம்.336:11-12

54. மேலது, 341:18-19

55. மேலது, 348:1

56. மேலது, 348:9-10

57. மேலது, 354:4-7

58. மேலது, 206

59. ஐ.க.பாண்டியன், ஔவையின் உளவியல் & ப்ராய்டு - லெக்கானின் மன அலசல், ப.162

60. மேலது, ப.164

61. மேலது, ப.165

62. பெ.சு.மணி, சங்க கால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும், ப.245

63. புறம்.286

64. மேலது, 187

65. குறள்.389

# முடிவுரை

மனிதர்களின் அனைத்துச் செயல்களுமே மூளையும், உள்ளமும், யாக்கையும் சார்ந்த இயக்கங்களால் நிகழ்கின்றன. மனிதன் 'உணர்ச்சிப் பிண்டம்' என்னும் அடையைப் பெற்றவன். இவ்வுணர்ச்சிகள் பல்வேறு காரணங்களால் வெளிப்படுகின்றன.

தொல்காப்பியர் இவ்வுணர்ச்சிகளின் வெளிப்பாட்டை மெய்ப்பாடுகள் எனச் சுட்டுகிறார். பேராசிரியர் செய்யுள் செய்வோர் மெய்ப்பாடு தோன்றச் செய்தல் வேண்டும் என்கிறார். இம்மெய்ப்பாடுகள் உளவியலின் அடிப்படையிலானவை.

இலக்கியத்தின் அடிப்படையான, இன்றியமையாத கூறு உணர்ச்சி. இதனால் எழுவது கரு, இதை வெளிப்படுத்துபவர்கள் மாந்தர்கள். இவற்றைப் புலப்படுத்துவது வடிவம். எனவே, இலக்கியத்திற்கு மூலக்கூறாக உணர்ச்சி அமைகின்றது. இவ்வுணர்ச்சியை வெளிப்படுத்தும் அடிப்படைக் கலன் உள்ளமாகும்.

இவ்வுள்ளத்தை மனம், நெஞ்சு, இதயம், ஆன்மா எனப் பலவாறு அழைக்கின்றனர். இவற்றிடையே நுண்ணிய வேறுபாடுகள் இருக்கலாம். இருப்பினும் அருவப் பொருளான உள்ளத்தைக் கண்டறியும் முயற்சி மருத்துவ உலகிலும் ஆன்மீக உலகிலும் தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

உயர்தனிச் செம்மொழியாம் தமிழ் செம்மொழி என்னும் மதிப்பைப் பெறுவதற்கு அடிப்படையாக அமைந்தவை சங்க இலக்கியங்கள். இவ்விலக்கியங்களில் பற்பல மாந்தர்களின் உள்ளங்களைச் சங்கப் புலவர்கள் பதிவுசெய்துள்ளதாக வ.சுப.மாணிக்கனார் குறிப்பிடுவார்.

சங்க இலக்கியப் பாடல் ஒவ்வொன்றையும் ஒருபாற் கூற்று நாடகங்கள் என்றும் கூறுவர். நாடகத்திற்கு நடிப்பே இன்றியமையாதது. நடிப்பு உணர்ச்சியின் வாய்ப்பட்டதாகும்.

மனித உணர்வுகளின் வெளிப்பாடாக அமையும் நடவடிக்கைகளை ஆராய்ந்த உளவியலின் தந்தை சிக்மண்ட் ப்ராய்ட் என்பவர் மன இயல்புகளைப் பலவாறாகப் பதிவு செய்துள்ளார். பிற உளவியல் அறிஞர்கள் மன இயல்புகளைச் சுட்டியுள்ளனர்.

சங்க அகப்பாடல்களில் கூற்று நிலையில் புலவர்கள் பல மாந்தர்களின் உள்ள நிலைகளை வெளிப்படுத்தியுள்ளனர். ஆய்வின் கால, கள எல்லை கருதி '**பரணர் - ஔவையார் பாடல்களில் உள்ளப்போராட்டம்**' என்னும் தலைப்புத் தெரிவுசெய்யப்பட்டுள்ளது.

ஒருபானைச் சோற்றிற்கு ஒரு சோறு பதச்சோறு என்பது போல ஆண்பாற் புலவர் ஒருவர், பெண்பாற் புலவர் ஒருவர் பாடிய பாடல்கள் உள்ளப்போராட்டம் குறித்த ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது.

உள்ளப்போராட்டம் பற்றிய ஆய்வாகையால் உள்ளம் சார்ந்த உணர்ச்சிகள், குறித்த அறிஞர்களின் விளக்கங்கள் பல்வேறு சான்றுகள் மூலம் ஆய்வின் தொடக்கத்தில் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

சங்க அகமாந்தர்களில் முதன்மை மாந்தராகத் தலைவன் வெளிப்படுகின்றான். குறிப்பாகத் தலைவி மற்றும் பிறமாந்தர்கள் மீது கொண்ட அன்பு, பல்வேறு பிரிவுகள், இயற்கைக் காட்சிகள், புலம்பெயர்வு போன்றவற்றின் தாக்கங்களுக்கு உள்ளாகும் தலைவனின் உள்ள உணர்வுகளைப் பரணர் ஔவையார் இருவரும் நன்கு வெளிப்படுத்தியுள்ளனர்.

செறிவார்ந்த உணர்வுகளைப் பிரதிபலிப்பவர்களில் தலைவன் குறிப்பிடத்தகுந்தவனாக இருக்கிறான்.

இவனுடைய உணர்வுப் போராட்டங்களாக ஆற்றாமை, ஏக்கம், ஏமாற்றம், கலக்கம், நிகழ்ந்தது நினைத்தல், வருத்தம் ஆகிய உணர்வுகள் பிரிவு, குறிகள், அலர் போன்றவற்றால் நிகழ்வதைக் காணமுடிகிறது.

ஆய்வுக்குரிய தலைவன் கூற்றுப் பாடல்கள் 24 இல் 22 இல் இவனுடைய உணர்வுகள் பதிவுசெய்யப்பட்டுள்ளன.

பரணர், ஔவையார் இருவரில் தலைவனின் உணர்வுகளைப் பரணரே அதிகம் புலப்படுத்தியிருக்கிறார். ஓர் ஆணின் உணர்வுகளை ஆண் ஒருவரே வெளிப்படுத்துதல் பொறுத்தமுடையதாக இருக்கும் எனும் அடிப்படையில் பரணர் தலைவனின் உள்ளத்தை நன்கு புலப்படுத்தியிருக்கிறார். தலைவன் கூற்றில் ஆறு பாடல்களில் மட்டும் ஒன்றிற்கும் மேற்பட்ட உணர்வுகள் மேலிடுகின்றன.

கூற்று மாந்தர்களில் அதிகப் பாதிப்புகளுக்கு உள்ளாகும் மாந்தராகத் தலைவி வெளிப்படுகிறாள். ஆய்வுக்குரிய பாடல்களில் இவளது உள்ளப்போராட்டமே மிகுதியாக இடம்பெற்றுள்ளது. ஆய்வுக்குரிய 29 பாடல்களில் 24 இல் இவளது உள்ளப்போராட்டம் வெளிப்படுகிறது.

தொல்காப்பியர் அன்பின் ஐந்திணைத் தலைவன் தலைவியருக்குப் பத்து வகை ஒப்புமைகளைச் சுட்டுவர். ஒத்த உணர்வுடைய தலைவன் தலைவியர் உள்ளப் போராட்டமும் ஆய்வுப் பாடல்களில் ஒத்திருப்பதைக் காணமுடிகிறது.

நிகழ்ந்தது நினைத்தல் என்ற உணர்வு மட்டும் தலைவனிடம் தனித்து நிற்கின்றது. தலைவிக்கு அல்லல்குறி, இற்செறித்தல், அலர், தலைவனின் பரத்தையர் பிரிவு, பருவம், பொழுதுகள், மாலையில் வீடுதிரும்பும் குருவிகள், வாடைக்காற்று போன்ற காரணங்களால் உள்ளப்போராட்டம் நிகழ்வதைக் காணமுடிகிறது. தலைவிகூற்றில் நான்கு பாடல்களில் ஒன்றிற்கும் மேற்பட்ட உணர்வுகள் மேல் எழும்புகின்றன.

தலைவன், தலைவி மனநிலைகளை முற்றிலும் உணர்ந்த தோழி தலைவனை வரைவுக்குத் தூண்டுதல், ஒழுக்கக்கேட்டைச் சுட்டுதல், பிரிவு உணர்த்துதல், தலைவியின் அழகு நலன்களை, குண நலன்களை எடுத்து மொழிந்து; தலைவன் வருத்தம் மிகும்போது அவனை ஆற்றுப்படுத்தி, தலைவனின் உள்ள நிலைகளை அறிந்தவளாகத் தோழி விளங்குகிறாள்.

தலைவி வருத்தமுறும்போதும், உடல்நலம் மாறுபடும்போதும், பிற வாயில்களின் மனநலம் அறிந்தும், உள்ளக்குறிப்பறிந்தும் ஆற்றுப்படுத்தித் தலைவியின் மன இயல்புகளுக்கு ஏற்பத் தோழி செயல்படுகின்றாள்.

பரணர் தோழி கூற்றுப் பாடல்களை அதிகளவில் பாடியிருக்கிறார். ஆண்பால் புலவராகக் கருதப்படும் பரணர் பெண்பாலான தோழியின் மனநிலையில் பாடியிருப்பது உளவியல் அடிப்படையில் தனித்து நோக்கத்தக்கது.

தலைவன் தலைவியுடைய ஒத்த வாழ்க்கைக்கு அடிப்படையாக அமைவது அன்பு எனும் காதலாகும். இவ்வன்பு தோன்றி வெளிப்படும் நிலைக்களன்கள் உளவியல் தன்மையில் இடம்பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது.

தோழி கூற்றுக்களில் அதிகளவாகத் தலைவனின் ஒழுக்கக்கேட்டை எடுத்து மொழியும் நிலையில் அவளது உளவியல் வெளிப்படுகிறது. அதே நேரத்தில் தலைவனின் அன்பு மேலீட்டை உணர்த்தவும் தவறவில்லை.

இன்பத்தைவிட துன்பம் மிகுதிப்படும் தலைவியைத் தோழி உளமருத்துவராக இருந்து ஆற்றுப்படுத்துகிறாள்.

கண்டோர், செவிலி, நற்றாய், பரத்தை, காமக்கிழத்தி, பாங்கன் போன்ற பிறமாந்தர்கள் தலைவன், தலைவியின் களவு, கற்பு இரு நிலைகளிலும் துணைசெய்யும் பொருட்டு அவர்களின் உளவியல் நடவடிக்கைகளும் வெளிப்படுகின்றன. குறிப்பாக இங்கு பரத்தையர், கண்டோரின் உளவியல் தன்மை புலப்படுவதைக் காணமுடிகிறது.

அகப்பாடல்களில் அதிகளவில் வரலாற்றுக் கூறுகளைப் பரணர் பாடியுள்ளதைக் காணமுடிகிறது.

புறநிகழ்வுகளில் பகை, போர், அழிவு, இழப்பு, வீரம், வெற்றி போன்ற சூழல்களில் ஏற்படும் மன உணர்வுகளை இவ்விருவரும் புறநிகழ்வு உளவியல்களாக வெளிப்படுத்துகின்றனர்.

போர் விளைவுகளால் தாயின் மனம் வேதனையுறுவதை உளவியல் சூழலில் பதிவுசெய்துள்ளனர்.

உளவியல் தன்மைகளைச் சுட்ட உவமை, உள்ளுறை, வரலாற்று நிகழ்வுகள் போன்றவை எடுத்தாளப்பட்டுள்ளன.

உளவியல் தன்மைகளை வெளிக்காட்ட ஔவையார் புறத்தில் மிகுதியான வரலாற்றுக் கூறுகளைப் பாடியிருப்பதை அறியமுடிகிறது.

தொண்டி, புகார், ஓரியூர், கொல்லிமலை, மாந்தை, வஞ்சி, உறையூர், அரிமணவாயில், ஆர்க்காடு, காவிரி போன்ற இடங்களும், சேரன், சோழன், பாண்டியன், நன்னன், அதியமான், திருமுடிக்காரி, கரிகாலன், கோசர், நாஞ்சில்நாடன், மிஞிலி, வேளிர், திதியன், வேள் எவ்வி, தித்தன் அழிசி போன்ற மன்னர்கள் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளும் உளவியல் வெளிப்பாட்டு நிலையில் இடம்பெற்றுள்ளன.

பெண்கள் அணியும் குடச்சூழ், உரல், உணவு, உழவர் பயன்படுத்தும் ஏர், வண்டி, வள்ளைப்பாட்டு, தண்ணுமை, வான்மங்கலம், மண்ணுமங்கலம், சினைப்பறை, மலர்களின் நிற ஒப்புமை போன்ற அக்காலச் சமூக இயங்குநிலைகளும் அகப்புற உளவியல் கூறுகளை வெளிப்படுத்த இவ்விரு புலவர்களாலும் கையாளப்பட்டுள்ளன.

திணை அடிப்படையில் குறிஞ்சித்திணையில் (33) மிகுதியான பாடல்கள் உளவியல் நிலையில் பாடப்பட்டுள்ளன. இதனை அடுத்து மருதம் 30, பாலை 13, நெய்தல் 7, முல்லை 6 என பாடல்கள் இடம்பெற்று மாந்தர்களின் உள்ள இயல்புகளை நில அடிப்படையில் வெளிப்படுத்துகின்றன.

மாந்தர்களின் மனங்கள் புறநிகழ்வுகளால் பாதிப்புக்குள்ளாவதைப் பறவைகள், விலங்குகள், தாவரங்கள், பருவங்கள், பொழுதுகள் போன்ற இயற்கை நிகழ்வுகள் மூலம் புலவர்கள் பாடியிருப்பதும் உளவியல் அடிப்படையில் எடுத்துக்காட்டப் பட்டுள்ளது.

உணவுப்பொருட்கள், புழங்குபொருட்கள், சடங்குகள், அணிகலன்கள் போன்ற சமூகப் பழக்கவழக்கங்கள், மாந்தர்களின் உளநடவடிக்கைகளைக் காட்டுதற்குத் துணையாகச் சுட்டப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

# துணைநூற்பட்டியல்

<u>1) முதன்மைச் சான்றாதாரங்கள்</u>

1. சாமிநாதையர், உ.வே. (உ.ஆ) குறுந்தொகை மூலமும் உரையும்,
கபீர் அச்சுக்கூடம்,
சென்னை,
1962.

2. மேலது — புறநானூறு மூலமும் பழைய உரையும்,
கபீர் அச்சுக்கூடம்,
சென்னை,
1963.

3. சோமசுந்தரனார், பொ.வே. — அகநானூறு மூலமும் உரையும்,
சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம்,
சென்னை - 1,
1968.

4. துரைசாமிப்பிள்ளை, சு. ஔவை — பதிற்றுப்பத்து மூலமும் விளக்க உரையும்,
சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம்,
சென்னை - 1,
1955.

5. நாராயணசாமி ஐயர், அ. பின்னத்தூார் (உ.ஆ.) — நற்றிணை மூலமும் உரையும்,
சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம்,
சென்னை - 1,
1957.

## 2) துணைமைச் சான்றாதாரங்கள்

6. ஆதிநாராயணன், எஸ்.பி. — உணர்ச்சிக் கலைக்களஞ்சியம் (தொகுதி-2), பழநியப்பா பிரதர்ஸ், சென்னை, 1977.

7. இரவிச்சந்திரன் தி.கு — சிக்மண்ட் ப்ராய்டு - உளப்பகுப்பாய்வு அறிவியல், அலைகள் வெளியீட்டகம், 25, தெற்கு சிவன் கோவில் தெரு, கோடம்பாக்கம், சென்னை - 24, 2005.

8. இராசாமாணிக்கம், மு. — உளவியல் துறைகள், (முதல் தொகுதி), தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1973.

9. மேலது — உளவியல் துறைகள், (இரண்டாம் தொகுதி), தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1974.

| | |
|---|---|
| 10. இராதா தியாகராசன் | அகத்தில் மகளிர்,<br>வானதி பதிப்பகம்,<br>13, தீனதயாளு தெரு,<br>தி.நகர்,<br>சென்னை,<br>1992. |
| 11. இராமகிருட்டினன் | அகத்திணை மாந்தர் - ஓர் ஆய்வு,<br>தியாகராசர் கல்லூரி,<br>மதுரை,<br>1982. |
| 12. இராமலிங்கம், பாஞ். | மானிட உளவியல்,<br>சாரதா பதிப்பகம்,<br>G-4, சாந்தி அடுக்ககம்,<br>3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,<br>ராயப்பேட்டை,<br>சென்னை - 14,<br>1989. |
| 13. மேலது | குழந்தை உளவியல்,<br>ராஜகுமாரி பப்ளிகேஷன்ஸ்,<br>எண்.20, நியூ செஞ்சுரி காலனி,<br>அம்பத்தூர், சென்னை - 58,<br>1992. |

14. இளம்பூரணர் (உ.ஆ.) தொல்காப்பியம் பொருளதிகாரம்,
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை-1,
1956.

15. கலியாணசுந்தரம், தெ. சங்க இலக்கிய அகப்பாடல்களில்
உணர்வுப் போராட்டம்,
வாணி பதிப்பகம்,
402, அழகேசன் சாலை,
கோயம்புத்தூர் - 11,
1992.

16. காஞ்சனா, இரா. இலக்கியமும் உளவியலும்,
விஷ்ணுப்ரியா பதிப்பகம்,
141, இராமசாமி இராஜா தெரு,
என்.ஜி.ஓ. குடியிருப்பு,
நாகமலைப் புதுக்கோட்டை, மதுரை-19,
2000.

17. குழந்தை புலவர் தொல்காப்பியர் காலத் தமிழர்,
பாரி நிலையம்,
52, பிராட்வே, சென்னை,
1959.

18. சஞ்சீவி, ந. சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள்,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை,
1973.

19. சண்முகம், தா.ஏ. உளநலவியல் (Mental Hygiene), தமிழ் வெளியீட்டுக்கழகம், சென்னை, 1970.

20. சாமிநாதையர், உ.வே. (ப.ஆ.) சிலப்பதிகாரம் (அடியார்க்கு நல்லார் உரை) தியாகராச விலாசம், சென்னை, 1908.

21. சாரதாம்பாள், செ. பெண்ணிய உளப்பகுப்பாய்வும் பெண் எழுத்தும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், இரண்டாவது முதன்மைச் சாலை, மையப் பல்தொழில் நுட்பப் பயிலக வளாகம், தரமணி, சென்னை - 113, 2005.

22. சிவஞானம், ம.பொ. ஔவையார், இன்ப நிலையம், மயிலாப்பூர், சென்னை - 4, 1968.

23. சிவராஜ், து. சங்க இலக்கியத்தில் உளவியல், சிவம் பதிப்பகம், 2/82, Q9, காந்தி நகர், விருட்பாட்சிபுரம், வேலூர்-2, 1994.

24. சுப்ரமண்யன், ந. — பரணர்,
கூடல் பப்ளிஷர்ஸ்,
217-A, தெற்கு மாசி வீதி,
மதுரை - 1,
1975.

25. சொக்கலிங்கம், சு.ந. — இனியவை நாற்பது,
வானதி பதிப்பகம்,
23, தீனதயாளு தெரு,
தி.நகர், சென்னை - 17,
1997.

26. தட்சிணாமூர்த்தி, அ. — சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்,
மங்கையர்க்கரசி பதிப்பகம்,
மனை எண்.205, புட்டம் குடியிருப்பு,
அருளானந்த நகர், பத்தாம் குறுக்குத்தெரு,
தஞ்சாவூர் - 7,
2001.

27. தமிழண்ணல் — ஔவையார்,
சாகித்ய அக்காதெமி,
தலைமை அலுவலகம்,
ரவீந்திர பவன்,
35, பெரோஸ்ஷா சாலை,
புதுதில்லி - 1,
1998.

28. தாயம்மாள் அறவாணன் மகடூஉ முன்னிலை,
(பெண் புலவர் களஞ்சியம்),
பச்சைப் பசேல்,
15, முனிரத்தினம் தெரு,
அய்யாவு குடியிருப்பு,
அமைந்தகரை,
சென்னை - 29,
2004.

29. பரமேஷ், செ.ரா. சமூக உளவியல்,
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்,
சென்னை,
1973.

30. பாண்டியன், ஐ.க. ஔவையின் உளவியல் & ப்ராய்டு-
லெக்கானின் மன அலசல்,
கார்முகில் பதிப்பகம்,
129-A, பாலம் ஸ்டேசன் ரோடு,
கோரிப்பாளையம்,
மதுரை - 2,
2003.

31. பெரியகருப்பன், இராம. ஒப்பிலக்கிய அறிமுகம்,
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை,
1973.

32. மணி, பெ.சு. சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும், மெய்யப்பன் தமிழாய்வகம், 53, புதுத்தெரு, சிதம்பரம்-1, 2003.

33. மறைமலை, சி.இ. இலக்கியமும் உளவியலும், மணிவாசகர் பதிப்பகம், 55, லிங்கித் தெரு, சென்னை - 1, 1991.

34. மாணிக்கம், வ.சுப. தமிழ்க்காதல், பாரி நிலையம், சென்னை, 1972.

35. வரதராசன், மு. மொழிவரலாறு, சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், சென்னை - 1, 1969.

36. மேலது இலக்கிய வரலாறு, பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை, 1966.

37. ஜேம்ஸ் டி. பேஜ்
பெசன்ட் கிரீப்பர் ராஜ்
(தமிழாக்கம்)
பிறழ்நிலை உளவியல்
ABNORMAL PSYCHOLOGY
(உளப் பிறழ்வினரைப் பற்றிய
மருத்துவநூல்),
தமிழ் வெளியீட்டுக் கழகம்,
சென்னை,
1965.

38. ........................
களவியல் என்ற இறையனார்
அகப்பொருள் நக்கீரர் உரை,
சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம்,
சென்னை-1,
1958.

**3. அகராதிகள், கலைக்களஞ்சியங்கள்**

1. இரஜேந்திரன், ச.
தற்காலத் தமிழ்ச் சொற்களஞ்சியம்,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
2001.

2. சாரங்கபாணி, இரா.
சங்க இகலக்கிய பொருட்களஞ்சியம்
தொகுதி - 1,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
1986.

3. பவானந்தம் பிள்ளை, ச. திவாண்பஹதூர், — பவானந்தர் தமிழ்ச் சொல்லகராதி, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்(பி) லிமிடெட். 41-B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை - 98, 2003.

4. விஜய் பாஸ்கரன், வ. அழகப்பன், வை.கோ. (தொ.ஆ.) — சக்தி களஞ்சியம் (பாகம்-1), கலைஞன் பதிப்பகம், 19, கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை, 2002.

5. ..................... — கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, புதிய எண்.2, 24 கிழக்கு வீதி, திருவான்மியூர், சென்னை, 2001.

6. ..................... — நர்மதாவின் தமிழ் அகராதி, நர்மதா பதிப்பகம், 16/7, ராஜாபாதர் தெரு, பாண்டி பஜார், தி.நகர், சென்னை, 2002.

7. Winslow, M. — A Comprehensive Tamil and English Dictionary, ASIAN Educational Services, C-2/15, SDA, New Delhi, 1995.

## 4. ஆய்வேடுகள்

1. அமுதா, க. — சங்ககாலப் பெண்பாற்புலவர்கள் வரலாறும் அவர்தம் இலக்கியக்கொடையும், முனைவர்பட்ட ஆய்வேடு, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, 2005.

2. பத்மாவள்ளி, கோ. — சங்க காலப் பெண்பாற்புலவர்கள் ஒரு புதிய பார்வை, ஆய்வியல் நிறைஞர்பட்ட ஆய்வேடு, அன்னை தெரசா பல்கலைக்கழகம், கொடைக்கானல், 1989.

3. ஸ்டெல்லா புஸ்பராணி, கி. — சங்ககாலப் பெண்பாற் புலவர்களின் அகப்பாடல்களில் உள்ளப்போராட்டம், ஆய்வியல் நிறைஞர்பட்ட ஆய்வேடு, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, 2007.

**5. இதழ்கள்**

1. பதிப்பாசிரியர் குழு — இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், 38-ஆம் கருத்தரங்கு ஆய்வுக்கோவை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 2007.

2. பதிப்பாசிரியர் குழு — வளர் தமிழ் ஆய்வு மன்றம், ஐந்தாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, திண்டுக்கல், 2008.

3. மேலது — வளர் தமிழ் ஆய்வு மன்றம், ஆறாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, திண்டுக்கல், 2009.

**6. ஆங்கில நூல்கள்**

1. Berridale, A. — Classical Sanskrit Literature, Qlcutta YMCA Publishing House, 1958.

2. Carney zandis, M. and Majorie Bolles — A Test Book of - Abnormal Psychology, The Macmillan Company, 1957.

3. Coleman, James C. — Psychology and Effective Behavior, D.B. Tarapore vela sons & Co.Private Ltd., Bombay, 1971.

4. Laplanche, J. and Pontalis, J.B. — The Language of Psycho-Analysis, The Hogarth Press and the Institute of Psycho - Analysis, London, 1973.

5. Morgan & King — Introduction to Psychology, MC Graw Hill Co., New Delhi, 1975.

6. Prasad, Mani Bhushan — Reactions to Threat, National Publishing House, New Delhi, 1979.

7. Rakesh Guptha — Psychological Studies in Rasa ; Benarus, Benarus Hindu University, 1950.

8. Encyclopaedia Britannica, Val.7, A society of gentlemen, Scotland, William Benon, 1996.

# நூல் அடிப்படையில் பரணர் - ஔவையார் பாடல்கள்

| | |
|---|---|
| | பரணர் |
| நூல் | பாடல் எண்கள் |
| அகநானூறு-34 | 6, 62, 76, 116, 122, 125, 135, 142, 148, 152, 162, 178, 181, 186, 196, 198, 208, 212, 222, 226, 236, 246, 258, 262, 266, 276, 322, 326, 356, 367, 372, 376, 386, 396 |
| குறுந்தொகை-17 | 19, 24, 36, 60, 73, 89, 120, 128, 165, 199, 258, 259, 292, 298, 328, 393, 399 |
| நற்றிணை-12 | 6, 100, 201, 247, 260, 265, 270, 280, 300, 310, 350, 356 |
| புறநானூறு-13 | 4, 63, 141, 142, 144, 145, 336, 341, 343, 348, 352, 354, 369 |
| பதிற்றுப்பத்து-10 | 41, 42, 43, 44, 45, 46, 47, 48, 49, 50 (ஐந்தாம் பத்து) |
| | ஔவையார் |
| அகநானூறு-4 | 11, 147, 273, 303 |
| குறுந்தொகை-15 | 15, 23, 28, 29, 39, 43, 80, 91, 99, 102, 158, 183, 200, 364, 388 |
| நற்றிணை-7 | 129, 187, 295, 371, 381, 390, 394 |
| புறநானூறு-33 | 87, 88, 89, 90, 91, 92, 93, 94, 95, 96, 97, 98, 99, 100, 101, 102, 103, 104, 148, 187, 206, 231, 232, 235, 269, 286, 290, 295, 311, 315, 367, 390, 392 |

# கூற்று அடிப்படையில் பரணர் - ஔவையார் பாடல்கள்

| | |
|---|---|
| | பரணர் |
| கூற்று | பாடல் எண்கள் |
| தலைவன் (21) | அகம்.62, 142, 152, 162, 181, 198, 208, 212, 258, 262, 322, 372, குறுந்.19, 120, 128, 165, 199, நற்.6, 201, 265, 356 |
| தலைவி (15) | அகம்.6, 122, 135, 196, 236, 266, 367, குறுந்.24, 36, 60, 399, நற்.260, 300, 350, 280 |
| தோழி (21) | அகம்.116, 125, 148, 178, 222, 226, 246, 326, 356, 386, குறுந்.73, 89, 258, 259, 292, 298, 328, 393, நற்.247, 270, 310 |
| பரத்தை (6) | அகம்.76, 186, 276, 376, 396, நற்.100 |
| | ஔவையார் |
| தலைவன் (3) | குறுந்.29, 99, நற்.371 |
| தலைவி (14) | அகம்.11, 147, 273, 303, குறுந்.28, 39, 43, 91, 102, 158, 183, 200, நற்.187, 381 |
| தோழி (4) | குறுந்.23, 388, நற்.129, 295 |
| பரத்தை (2) | குறுந்.80, 364 |
| கண்டோர் (1) | நற்.394 |
| செவிலி (1) | குறுந்.15 |
| காமக்கிழத்தி (1) | நற்.390 |

# திணை அடிப்படையில் பரணர் - ஔவையார் பாடல்கள்

| பரணர் | | | |
|---|---|---|---|
| திணை | அகநானூறு | குறுந்தொகை | நற்றிணை |
| குறிஞ்சி (29) | 62, 122, 142, 148, 152, 162, 178, 198, 208, 212, 222, 258, 262, 322, 372 | 36, 60, 73, 120, 165, 199 259, 292, 298 | 6, 201, 247, 265, 356 |
| முல்லை (1) | --- | 24 | --- |
| மருதம் (26) | 6, 76, 116, 186, 196, 226, 236, 246, 266, 276, 326, 356, 376, 386, 396 | 19, 89, 258, 393, 399 | 100, 260, 280, 300, 310, 350 |
| நெய்தல் (3) | --- | 128, 328 | 270 |
| பாலை (4) | 125, 135, 181, 367 | --- | --- |

| ஔவையார் | | | |
|---|---|---|---|
| திணை | அகநானூறு | குறுந்தொகை | நற்றிணை |
| குறிஞ்சி (4) | --- | 23, 29, 158 | 129 |
| முல்லை (5) | --- | 99, 183 | 371, 381, 394 |
| மருதம் (4) | --- | 80, 91, 364 | 390 |
| நெய்தல் (4) | --- | 102, 200 | 187, 295 |
| பாலை (9) | 11, 147, 273, 303 | 15, 28, 39, 43, 388 | --- |

# திணை, கூற்று, துறை விளக்க அட்டவணை

| புலவர் பெயர் | அகம் | குறுந் | நற் | புறம் | பதிற். | கூற்று | அகத் திணை | புறத் திணை | துறை | அரசன் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| பரணர் | 6 | | | | | தலைவி | மருதம் | | | |
| அகத்திணை : 63 | 62 | | | | | தலைவன் | குறிஞ்சி | | | |
| புறத்திணை : 23 | 76 | | | | | பரத்தை | மருதம் | | | |
| 86 | 116 | | | | | தோழி | ,, | | | |
| | 122 | | | | | தலைவி | குறிஞ்சி | | | |
| | 125 | | | | | தோழி | பாலை | | | |
| | 135 | | | | | தலைவி | ,, | | | |
| | 142 | | | | | தலைவன் | குறிஞ்சி | | | |
| | 148 | | | | | தோழி | ,, | | | |
| | 152 | | | | | தலைவன் | ,, | | | |
| | 162 | | | | | ,, | ,, | | | |
| | 178 | | | | | தோழி | ,, | | | |
| | 181 | | | | | தலைவன் | பாலை | | | |
| | 186 | | | | | பரத்தை | மருதம் | | | |
| | 196 | | | | | தலைவி | ,, | | | |
| | 198 | | | | | தலைவன் | குறிஞ்சி | | | |
| | 208 | | | | | ,, | ,, | | | |
| | 212 | | | | | ,, | ,, | | | |

| புலவர் பெயர் | அகம் | குறுந் | நற் | புறம் | பதிற். | கூற்று | அகத் திணை | புறத் திணை | துறை | அரசன் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 222 | | | | | தோழி | குறிஞ்சி | | | |
| | 226 | | | | | ,, | மருதம் | | | |
| | 236 | | | | | தலைவி | ,, | | | |
| | 246 | | | | | தோழி | ,, | | | |
| | 258 | | | | | தலைவன் | குறிஞ்சி | | | |
| | 262 | | | | | ,, | ,, | | | |
| | 266 | | | | | தலைவி | மருதம் | | | |
| | 276 | | | | | பரத்தை | ,, | | | |
| | 322 | | | | | தலைவன் | குறிஞ்சி | | | |
| | 326 | | | | | தோழி | மருதம் | | | |
| | 356 | | | | | ,, | ,, | | | |
| | 367 | | | | | தலைவி | பாலை | | | |
| | 372 | | | | | தலைவன் | குறிஞ்சி | | | |
| | 376 | | | | | பரத்தை | மருதம் | | | |
| | 386 | | | | | தோழி | ,, | | | |
| | 396 | | | | | பரத்தை | ,, | | | |
| | | 19 | | | | தலைவன் | ,, | | | |
| | | 24 | | | | தலைவி | முல்லை | | | |
| | | 36 | | | | ,, | குறிஞ்சி | | | |
| | | 60 | | | | ,, | ,, | | | |

| புலவர் பெயர் | அகம் | குறுந் | நற் | புறம் | பதிற். | கூற்று | அகத் திணை | புறத் திணை | துறை | அரசன் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | 73 | | | | தோழி | குறிஞ்சி | | | |
| | | 89 | | | | ,, | மருதம் | | | |
| | | 120 | | | | தலைவன் | குறிஞ்சி | | | |
| | | 128 | | | | ,, | நெய்தல் | | | |
| | | 165 | | | | ,, | குறிஞ்சி | | | |
| | | 199 | | | | ,, | ,, | | | |
| | | 258 | | | | தோழி | மருதம் | | | |
| | | 259 | | | | ,, | குறிஞ்சி | | | |
| | | 292 | | | | ,, | ,, | | | |
| | | 298 | | | | ,, | ,, | | | |
| | | 328 | | | | ,, | நெய்தல் | | | |
| | | 393 | | | | ,, | மருதம் | | | |
| | | 399 | | | | தலைவி | ,, | | | |
| | | | 6 | | | தலைவன் | குறிஞ்சி | | | |
| | | | 100 | | | பரத்தை | மருதம் | | | |
| | | | 201 | | | தலைவன் | குறிஞ்சி | | | |
| | | | 247 | | | தோழி | ,, | | | |
| | | | 260 | | | தலைவி | மருதம் | | | |
| | | | 265 | | | தலைவன் | குறிஞ்சி | | | |
| | | | 270 | | | தோழி | நெய்தல் | | | |

| புலவர் பெயர் | அகம் | குறுந் | நற் | புறம் | பதிற். | கூற்று | அகத் திணை | புறத் திணை | துறை | அரசன் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | 280 | | | தலைவி | மருதம் | | | |
| | | | 300 | | | ,, | ,, | | | |
| | | | 310 | | | தோழி | ,, | | | |
| | | | 350 | | | தலைவி | ,, | | | |
| | | | 356 | | | தலைவன் | குறிஞ்சி | | | |
| | | | | 4 | | | | வஞ்சி | கொற்றவள்ளை | சோழன் உருவப்பஃறேரிளஞ் சேட் சென்னியைப் பாடியது |
| | | | | 63 | | | | தும்பை | தொகைநிலை | சேரமான் குடக்கோ நெடுஞ் சேரலாதனும் சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியும் போர்புறத்துப் பொருது வீழ்ந்தாரை அக்களத்திற் பாடியது |
| | | | | 141 | | | | பாடாண் | பாணாற்றுப்படை | வையாவிக் கோப்பெரும் பேகனைப் பாடியது |
| | | | | 142 | | | | ,, | இயன்மொழி | ,, |
| | | | | 144 | | | | பெருந்திணை | குறுங்கலி | ,, |
| | | | | 145 | | | | பெருந்திணை | ,, | ,, |
| | | | | 336 | | | | காஞ்சி | மகட்பாற்காஞ்சி | --- |
| | | | | 341 | | | | ,, | ,, | --- |
| | | | | 343 | | | | ,, | ,, | --- |

| புலவர் பெயர் | அகம் | குறுந் | நற் | புறம் | பதிற். | கூற்று | அகத் திணை | புறத் திணை | துறை | அரசன் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | 348 | | | | காஞ்சி | மகட்பாற்காஞ்சி | --- |
| | | | | 352 | | | | ,, | ,, | --- |
| | | | | 354 | | | | ,, | ,, | --- |
| | | | | 369 | | | | வாகை | மறக்களவழி | கடல்பிறக்கோட்டிய சேரன் வேல்கெழு குட்டுவன் |

| புலவர் பெயர் | பதிற். | துறை | வண்ணம் | தூக்கு | தலைப்பு | அரசன் |
|---|---|---|---|---|---|---|
| | 41 | காட்சிவாழ்த்து | ஒழுகுவண்ணம் | செந்தூக்கு | சுடர்வீ வேங்கை | கடல்பிறக்கோட்டிய சேரன் வேல்கெழு குட்டுவன் |
| | 42 | செந்துறைப் பாடாண் பாட்டு | ,, | ,, | தசும்புதுளங்கிருக்கை | ,, |
| | 43 | இயன்மொழி வாழ்த்து | ,, | ,, | ஏறாவேணி | ,, |
| | 44 | செந்துறைப் பாடாண் பாட்டு | ,, | ,, | நோய்தபு நோன்றொடை | ,, |
| | 45 | ,, | ,, | ,, | ஊன்றுவையடிசில் | ,, |
| | 46 | ,, | ,, | ,, | கரைவாய்ப்பகுதி | ,, |
| | 47 | ,, | ,, | ,, | நன்னுதல்விறலியர் | ,, |
| | 48 | இயன்மொழி வாழ்த்து | ,, | ,, | பேரெழில் வாழ்க்கை | ,, |
| | 49 | விறலியாற்றுப்படை | ,, | ,, | செங்கை மறவர் | ,, |
| | 50 | வஞ்சித்துறைப் பாடாண்பாட்டு | சொற்சீர் வண்ணம் | ,, | வெருவருபுனற்றார் | ,, |

# திணை, கூற்று, துறை விளக்க அட்டவணை

| புலவர் பெயர் | அகம் | குறுந் | நற் | புறம் | கூற்று | அகத் திணை | புறத் திணை | துறை | அரசன் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஔவையார் | 11 | | | | தலைவி | பாலை | | | |
| அகத்திணை : 26 | 147 | | | | ,, | ,, | | | |
| புறத்திணை : 33 | 273 | | | | ,, | ,, | | | |
| 59 | 303 | | | | ,, | ,, | | | |
| | | 15 | | | செவிலி | ,, | | | |
| | | 23 | | | தோழி | குறிஞ்சி | | | |
| | | 28 | | | தலைவி | பாலை | | | |
| | | 29 | | | தலைவன் | குறிஞ்சி | | | |
| | | 39 | | | தலைவி | பாலை | | | |
| | | 43 | | | ,, | ,, | | | |
| | | 80 | | | பரத்தை | மருதம் | | | |
| | | 91 | | | தலைவி | ,, | | | |
| | | 99 | | | தலைவன் | முல்லை | | | |
| | | 102 | | | தலைவி | நெய்தல் | | | |
| | | 158 | | | ,, | குறிஞ்சி | | | |
| | | 183 | | | ,, | முல்லை | | | |
| | | 200 | | | ,, | நெய்தல் | | | |
| | | 364 | | | பரத்தை | மருதம் | | | |

| புலவர் பெயர் | அகம் | குறுந் | நற் | புறம் | கூற்று | அகத் திணை | புறத் திணை | துறை | அரசன் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | 388 | | | தோழி | பாலை | | | |
| | | | 129 | | ,, | குறிஞ்சி | | | |
| | | | 187 | | தலைவி | நெய்தல் | | | |
| | | | 295 | | தோழி | ,, | | | |
| | | | 371 | | தலைவன் | முல்லை | | | |
| | | | 381 | | தலைவி | ,, | | | |
| | | | 390 | | தலைவி | மருதம் | | | |
| | | | 394 | | கண்டோர் | முல்லை | | | |
| | | | | 87 | | | தும்பை | தானைமறம் | அதியமான் நெடுமான் அஞ்சி |
| | | | | 88 | | | ,, | ,, | ,, |
| | | | | 89 | | | ,, | ,, | ,, |
| | | | | 90 | | | ,, | ,, | ,, |
| | | | | 91 | | | பாடாண் | வாழ்த்தியல் | ,, |
| | | | | 92 | | | ,, | இயன்மொழி | ,, |
| | | | | 93 | | | வாகை | அரசவாகை | ,, |
| | | | | 94 | | | ,, | ,, | ,, |
| | | | | 95 | | | ,, | ,, | ,, |
| | | | | 96 | | | பாடாண் | இயன்மொழி | பொகுட்டெழினி |
| | | | | 97 | | | ,, | ,, | அதியமான் நெடுமான் அஞ்சி |
| | | | | 98 | | | வாகை | அரசவாகை | ,, |

| புலவர் பெயர் | அகம் | குறுந் | நற் | புறம் | கூற்று | அகத் திணை | புறத் திணை | துறை | அரசன் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | 99 | | | வாகை | அரசவாகை | அதியமான் நெடுமான் அஞ்சி |
| | | | | 100 | | | ,, | ,, | ,, |
| | | | | 101 | | | பாடாண் | பரிசில்கடாநிலை | ,, |
| | | | | 102 | | | ,, | இயன்மொழி | பொகுட்டெழினி |
| | | | | 103 | | | ,, | விறலியாற்றுப்படை | அதியமான் நெடுமான் அஞ்சி |
| | | | | 104 | | | வாகை | அரசவாகை | ,, |
| | | | | 140 | | | பாடாண் | பரிசில்விடை | நாஞ்சில்வள்ளுவன் |
| | | | | 187 | | | பொதுவியல் | பொருண்மொழிக் காஞ்சி | --- |
| | | | | 206 | | | பாடாண் | பரிசிற்றுறை | அதியமான் நெடுமான் அஞ்சி |
| | | | | 231 | | | பொதுவியல் | கையறுநிலை | ,, |
| | | | | 232 | | | ,, | ,, | ,, |
| | | | | 235 | | | ,, | ,, | ,, |
| | | | | 269 | | | வெட்சி | உண்டாட்டு | --- |
| | | | | 286 | | | கரந்தை | வேத்தியல் | --- |
| | | | | 290 | | | ,, | குடிநிலைஉரைத்தல் | --- |
| | | | | 295 | | | தும்பை | உவகைக்கலுழ்ச்சி | --- |
| | | | | 311 | | | ,, | பாண்பாட்டு | --- |
| | | | | 315 | | | வாகை | வல்லாண்முல்லை | அதியமான் நெடுமான் அஞ்சி |

| புலவர் பெயர் | அகம் | குறுந் | நற் | புறம் | கூற்று | அகத் திணை | புறத் திணை | துறை | அரசன் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | 367 | | | பாடாண் | வாழ்த்தியல் | சேரமான் மாரிவெண்கோ, கானப் பேர் தந்த உக்கிரப் பெருவழுதி, சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி |
| | | | | 390 | | | ,, | இயன்மொழி | அதியமான் நெடுமான் அஞ்சி |
| | | | | 392 | | | ,, | கடைநிலை | பொகுட்டெழினி |

# தலைவன் கூற்றில் உள்ளப்போராட்டம் நிகழும் பாடல்கள்

| நூல் | ஆற்றாமை | ஏக்கம் | ஏமாற்றம் | கலக்கம் | நிகழ்ந்தது நினைத்தல் | வருத்தம் |
|---|---|---|---|---|---|---|
| நற்றிணை | 356 | 356 | --- | --- | --- | 6<br>256<br>371 |
| குறுந்தொகை | 19<br>29<br>128 | 120<br>165<br>199 | --- | --- | --- | --- |
| அகநானூறு | 152<br>181<br>258 | 62 | 62<br>212<br>258<br>322<br>372 | 212<br>322<br>372 | 142<br>162<br>198<br>208<br>262 | --- |

# தலைவி கூற்றில் உள்ளப்போராட்டம் நிகழும் பாடல்கள்

| நூல் | ஆற்றாமை | ஏக்கம் | ஏமாற்றம் | கலக்கம் | வருத்தம் |
|---|---|---|---|---|---|
| நற்றிணை | 187<br>381 | 187 | --- | --- | 381 |
| குறுந்தொகை | 24<br>39<br>60<br>91 | 28<br>102<br>183 | 24<br>36<br>43<br>200<br>399 | 43<br>158 | --- |
| அகநானூறு | 236<br>367 | --- | --- | --- | 6<br>11<br>122<br>135<br>147<br>266<br>273<br>303 |

## தோழி கூற்றில் உள்ளப்போராட்டம் நிகழும் பாடல்கள்

| நூல் | தலைவியை ஆற்றுவித்தல் | தலைவனை வரைவுக்குத் தூண்டுதல் | தலைவனின் ஒழுக்கக் கேட்டை எடுத்துரைத்தல் | தலைவனின் அன்பு மேலீட்டை உணர்த்துதல் |
|---|---|---|---|---|
| நற்றிணை | 129 | 247<br>295 | 270<br>310 | --- |
| குறுந்தொகை | 73<br>259<br>328 | 89<br>393 | 258 | 298 |
| அகநானூறு | 125 | 148<br>222 | 116<br>226<br>246<br>326<br>386 | 178 |

## பிறமாந்தர்கள் கூற்றில் உள்ளப்போராட்டம் நிகழும் பாடல்கள்

| நூல் | தலைவனின் அன்பு மேலீட்டை உணர்த்துதல் | வருத்தம் | விருப்பம் | ஏமாற்றம் | தலைவனின் ஒழுக்கக்கேட்டை எடுத்து மொழிதல் |
|---|---|---|---|---|---|
| நற்றிணை | 394 | --- | --- | --- | --- |
| குறுந்தொகை | --- | 80 | --- | --- | --- |
| அகநானூறு | | | 76 | 276<br>376<br>396 | 186 |

# புறப்பாடல்களில் உள்ளப்போராட்டம் நிகழும் பாடல்கள்

| நூல் | மகிழ்ச்சி | அறிவுரை | புகழ்தல் | பெருமிதம் | வருத்தம் | ஏக்கம் | ஏமாற்றம் | விருப்பம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| புறநானூறு | 91<br>92 | 87<br>88<br>89<br>97<br>104<br>367 | 95<br>93<br>94<br>101<br>102<br>103<br>140<br>269<br>290<br>295<br>315<br>390<br>392 | 90<br>96<br>99<br>100<br>311 | 98<br>231<br>232<br>235<br>336<br>341<br>343<br>348<br>352<br>354 | 206<br>286 | 206 | 187 |
| பதிற்றுப்பத்து | 42<br>43<br>49 | --- | 44<br>46<br>47<br>48 | 41<br>45<br>50 | --- | --- | --- | --- |